3-2

# காரியசித்தி

விநாயகர்—உண்மைப் பொருள் விளக்கம்

1191




சிவயோகி

மா. இரத்தினசபாபதி பிள்ளை






1980 — 8.50

உ

முருகா

## சாற்றுக் கவி

நேரிசை வெண்பா

மன்னும் சிவயோகி மாமதியின் மாமேரு
பன்னும் இரத்தினச பாபதியார்—உன்னுமுயர்
காரிய சித்தியெனும் கற்கண்டாம் நன்னூலை
பாரில் வழங்கினுர் பண்பு.

தத்துவ நன்னெறியைத் தாரணியோர் தாமுணர
சித்தி விநாயகரின் கீர்த்திதனை—புத்திமிகும்
பண்பார் இரத்தினச பாபதியார் தந்தனரால்
விண்பார் புகழ வியந்து.

திருமந் திரத்தைத் திருவா சகத்தைப்
பெருமந் திரமாக்கொள் பெம்மான்—ஒருமந்
திரத்தின் வடிவாகச் சீர்நூலை ஈந்தான்
இரத்தினச பாபதி இன்று.

கோபிசெட்டி பாளையம்,
13-9-76

அன்பன்,
கிருபானந்தவாரி

ஓம்

# அணிந்துரை

[உயர்திரு நீதிபதி எஸ். மகராஜன் அவர்கள்.]

விநாயகர் அகவலை ஆர்வத்தோடு பாராயணம் செய்கிறவர்கள் பலர் தமிழ் நாட்டில் இருக்கிறார்கள். அதற்குக் காரணம் அவ்வகவலில் உள்ள சொற்களும் சொற்கோவைகளும் சொல்லச் சொல்ல நம் இதயத்துக்கும் நாவுக்குமே இனிப்பை யூட்டுகின்றன.

"சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பல இசை பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகி லாடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ கெறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்கு சிந்தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்"

என்று நாம் தொடங்கி,

"கூடும் மெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தின் அரும்பொருள் தன்னை
நெஞ்சக் கருத்தின் நிலை யறிவித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை யாண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே"

என்று அகவலை முடிக்கும் வரையில் நம் உள்ளத்திலே ஒரு மந்திரசக்தி பொங்கிப் பெருகுவதை நாம் நேரில் உணர்ந்து அநுபவிக்க முடிகிறது. ஆனால், இந்த விநாயகர் அகவல், ஒரு அரிய யோக நூல் என்பதைப் பலர் அறிந்து கொள்ளவில்லை; யோக நூல் என்று அதைத் தெரிந்து கொண்டவர்களும், அதன் உள்ளுறை பொருளை உணர்ந்து கொள்ளவில்லை.

தமிழ்நாட்டில், பல சித்தர்களும் யோகியர்களும் 'விநாயகர் அகவலை'ப் போற்றி வந்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் ஒருவராவது அதற்கு விளக்கவுரை வழங்க இதுவரை முன்வரவில்லை. இந்தக் குறையைப் போக்கு வதற்காகவே, மிக்க பரிவோடும் கருணையோடும் எழுதப் பட்டிருக்கிறது இந்த நூல். சென்ற 50 ஆண்டுகளாக ஆன்ம ஆராய்ச்சிக் கூடத்திலே, விஞ்ஞான முறையில் பல துணிச்சலான ஆராய்ச்சிகளைச் செய்து, அரிய உண்மை களைக் கண்டெடுத்த இந்நூலாசிரியர், சங்கேதக் குறிகள் நிறைந்த இந்நூலுக்கு வரிவரியாக அற்புத விளக்கம் கூறி யிருக்கிறார்கள். பரமரகசியம் என்று நம் முன்னோர்களால் மூடாக்குப்போட்டு மறைக்கப்பட்டிருந்த உண்மைகளை• சிவயோகி அவர்கள், தமக்கேயுரிய அதிகார தோரணை யோடு, உணர்வுடையவர்கள் விளங்கிக்கொள்ளும் வகையில், இந்நூலில் அம்பலப்படுத்தி யிருக்கிறார்கள்.

தற்காலத்தில் நாம் பெற்றிருக்கும் விஞ்ஞான அறிவும் தெளிவும் படிப்பும் முற்காலத்தில் இல்லை. ஆகவே, விஞ்ஞான அறிவும் தெளிவும் படிப்புமில்லாத சாமானிய மக்களுக்கு நுட்பமான உண்மைகளை விளக்கிக்காட்டுவது எளிதல்ல. ஆகவேதான், முற்காலத்து ஞானிகள் அவ் வுண்மைகளைப் பாகுபாடு செய்து, இவற்றின் இயக்க நிலைகளை யுணர்ந்து, அவற்றை ஸ்தூல வடிவுகளில் அமைத்தும், புராணக்கதைகளில் புதைத்தும் வைத்தார்கள். அவ்வாறாக ஸ்தூல வடிவிலே உண்மைகளைச் சொல்லும் போதே, அவற்றோடு குறியீடுகள், சங்கேதங்கள், அடையாளங்கள், பரிபாஷை ஆகியவற்றைச் சாதுரியமாக விரவியும் வைத்து விட்டார்கள். இவ்வாறு செய்த காரணத் தால் விளைந்த நன்மைகள் சில; தீமைகள் பல. சத்திய வேட்கையோடும் பகுத்தறிவோடும் புராணக் குப்பைகளைக் கிளறி ஆராய்ந்த சிலர், குப்பையைத் தள்ளிவிட்டு

ஆழத்தில் புதைந்து கிடந்த மாணிக்கமாலையைத் தோண்டி யெடுத்துப் பயனடைந்தார்கள். ஆனால் பகுத்தறிவற்றவர் களும் மூட நம்பிக்கையில் அழுந்திக் கிடந்தவர்களும், வேண்டியமட்டும் குப்பையைத் தலையில் வாரிப் போட்டுக் கொண்டார்கள். மற்றவர்கள் தலையிலும் அதைக் கொட்டி னார்கள்! மாணிக்க மாலை அவர்களுடைய கண்களுக்குத் தென்படவுமில்லை; அவர்களின் உள்ளத்தில் புகவுமில்லை.

போதாக் குறைக்கு ஆன்ம உண்மைகளை மறைத்தும் திரித்தும் சீடர்களுக்குக் கூறவேண்டுமென்று குருமார் களுக்கு உபதேசம் செய்தன சில நூல்கள். உதாரணமாக 'குல சூடாமணி நிகமம்' என்ற சாக்த நூலில், சாதாரண மாணவர்களுக்கு ஓம் என்ற அக்ஷரத்தைக் கூறாமல், மந்திரத்தை மாத்திரம் சொல்லிக் கொடுக்கவேண்டும் என்றும், உத்தம சீடர்களுக்கு மாத்திரம் பிரணவத்தையும் சேர்த்து மந்திரத்தைச் சொல்லிக் கொடுக்கவேண்டும் என்றும் குருமார்களுக்கு அறிவுரை சொல்லியிருப்பதாக ஆசிரியர் இந்நூலில் குறிப்பிட்டிருக்கிறார்கள். இவ்வாறாக, உலகத்திலே உண்மை தெரிந்தவர்கள் தெரியாதவர்கள் போல் பாவனைசெய்தும், அல்லது உண்மையைப் பிறருக்கு உரைக்கும்போது அதன் முக்கிய அம்சங்களைச் சூதாக மறைத்தும், அல்லது ஒன்றை மற்றொன்றாகச் சொல்லி மயக்கியும், திசை திருப்பிவிட்டும் வந்த காரணத்தால் அறிஞர்களுக்கு ஞானாசிரியர்கள்மீது நியாயமான சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது. அதோடு, போலி ஞானிகள் தெரியாத தைத் தெரிந்ததுபோல் பாவனை செய்தும், கண்கட்டு வித்தைகள் காட்டியும், படாடோபமான வேஷங்கள் போட்டும், யோகத்தையும் ஞானத்தையும் வியாபாரப் பொருளாகக் கையாண்டு வருகிறார்கள்.

இந்தச் சூழ்நிலையில், வஞ்சகமோ சூதோ இல்லாமல், உணர்ந்ததை உணர்ந்தபடி உலகத்துக்கு உணர்த்த

வேண்டும் என்ற பேராசையோடும் ஆர்வத்தோடும் இந் நூலாசிரியர் பல நூல்கள் எழுதியும், பல சீடர்களுக்கு ஆன்ம ரகசியங்களைப் பக்குவத்துக் கேற்றபடி போதித்தும் வருவது, அவர்களுடைய பெருங்கருணையையும் சீலத்தையும் காட்டுகிறது.

எனது இலக்கிய குருவான ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள், லண்டன் வட்ட மேஜை மகாநாட்டில் 45 ஆண்டுகளுக்குமுன் நடந்த ஒரு கூத்தை அடிக்கடி சொல்லிக் காட்டுவார்கள். ஐந்தாவது ஜியார்ஜ் சக்கரவர்த்தி இந்தியப் பிரதிநிதிகளுக்கென்று பக்கிங்ஹாம் அரண்மனையிலே ஒரு விருந்து நடத்தினர். இந்திய நாட்டு உணவையே இந்தியப் பிரதிநிதிகளுக்குப் பரிமாறவேண்டும் என்பது அவருடைய ஆசை. ஆகவே, இந்தியாவிலிருந்து தலைவாழையிலைகளும் அப்பளம் உட்பட எல்லாப் பண்டங் களும் விமானத்தில் லண்டனுக்குப் பறந்து சென்றன. விருந்து தொடங்கிற்று. ஆங்கில பட்லர்கள் வெள்ளை வெளேர் என்ற தட்டுகளில், கன்னங்கரேல் என்ற வட்ட வடிவான பொருள்களைக் கொண்டுவந்து இலைகளில் பரிமாறினர்கள். கரிகரியாக இருந்த இந்தப் பண்டங்கள் என்னவென்று இந்தியப் பிரதிநிதிகளுக்கு இனம் கண்டு பிடிக்க முடியவில்லை. நீண்டகால ஆராய்ச்சிக்குப் பின்னல் புதிர் என்னவென்று அவர்களுக்குப் புரிந்தது. கராச்சியில் அப்பளத்தைப் Packing செய்தவர்கள், ஒரு அப்பளம், அதற்குமேல் வட்ட வடிவமான ஒரு ஆயில் பேப்பர், அதற்கு மேலே ஒரு அப்பளம் என்று அடுக்கிப் பாரீஸல் செய்து அனுப்பியிருந்தார்கள். வெள்ளைக்கார பட்லர்கள் அப்பளங்களைத் தூர எறிந்துவிட்டு, ஆயில் பேப்பர்களை வறுத்துக் கொண்டுவந்து வைத்து விட்டார்கள். இந்தக் கைங்கரியந்தான் இலக்கியத்திலும் சமயத்திலும் நெடுகி

லும் நடந்துகொண்டு வந்திருக்கிறது என்று ரஸிகமணி அடிக்கடி சொல்லுவார்கள். அப்பளத்துக்கும் ஆயில் பேப்ப ருக்கும் வேற்றுமை தெரியாத ஒரு சௌகரியமான நிலையில் பலர் இருக்கிறார்கள் என்றும் டி. கே. சி. சொல்லுவார்கள். ஒதுக்க வேண்டியதை ஒதுக்கித் தள்ளிவிட்டு, ஏற்க வேண்டியதை ஏற்றுக்கொள்ளும் விவேகம் ஒருசிலருக்குத் தான் இருக்கிறது. இலக்கியம், கலை சம்பந்தமாக அந்த விவேகம் டி. கே. சி. ஒருவரிடம் இருப்பதை நான் கண்டு அனுபவித்தேன். சமயம், ஆன்ம ஞானம் சம்பந்தமாக அந்த விவேகத்தை இந்த நூலாசிரியராகிய சிவயோகி யிடம் மாத்திரமே நான் நாள்தோறும் கண்டு அனுபவித்து வருகிறேன்.

சென்ற மூன்றாண்டுகளுக்கு மேலாக சிவயோகி அவர்களை வாரந்தோறும் சந்தித்தும், மணிக்கணக்காக அவர்களுடைய உண்மைகளைக் கேட்டும் வரும் எனக்கு, அவர்களுடைய தெவிட்டாத ஞானத்தெளிவு எவ்வளவு அபூர்வமானதென்று தெரிகிறது. திருமந்திரம், வேதங்கள், உபநிடதங்கள், ஆகமங்கள், திருவாசகம், Zenபௌத்தம், திபேத்திலுள்ள யோகமுறைகள், எகிப்து பாபிலோனியா முதலிய நாடுகளிலுள்ள ஞான நூல்கள், சுவிசேஷம், கொரான், சாக்தம், சைவம், வைணவம், தற்கால விஞ்ஞானம் ஆகியவை பற்றிய நூல்களைக் கசடறக்கற்று, ஒவ்வொன்றிலுமுள்ள குணத்தைநாடி ஏற்றுக் குறையைத் தெரிந்து தள்ளிச் சமயங்கடந்த சமரச நிலையிருப்பவர்கள் இந்நூலாசிரியர். "இறைவனைப்பற்றி எழுதுவதும், படிப் பதும் பேசுவதுமே எனக்குத் தியானம்" என்று அடிக்கடி அவர்கள் சொல்லுவார்கள். ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக அவர்கள் செய்துவந்த தவத்தின் காரணமாக அவர்களுடைய உடம்பிலுள்ள மின்—காந்த சக்தி (Electromagnetism) ஆற்றல் மிகுந்ததாயும், அவர்

களுடைய முகத்திலிருந்து ஒளிக்கதிர்களை வீசுவதாயும் அமைந்துள்ளது. ஆகவேதான், அவர்களுடைய பேச்சி லும் எழுத்திலும் ஒரு தனி சக்தி இருக்கிறது. அவர் களுடைய நூலை வாசிப்பவர்களுக்கும், அவர்களுடைய பேச்சைக் கேட்பவர்களுக்கும், தியானநிலை எளிதில் கைகூடுகிறது. அவர்களிடம் தீக்ஷை பெற்றுக் கொண்ட என் போன்ற சீடர்களுக்கு, உள்ளொளி பெருகி, தேகங் கடந்த அவ்வறிவொளியில் கரைந்து நிற்க முடிகிறது. நண்பர் மீ. ப. சோமுவைப் போன்ற சீடர்களுக்கு அரிய ஆன்ம அனுபவங்கள் கிட்டுகின்றன.

இத்தகைய ஆற்றலை இந்நூலாசிரியர் பெற்றிருப் பதற்குக் காரணம், அவர்களை வித்தகவிநாயகர்,

''கூடு மெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி'' அருள் புரிந்திருக்கிருர். இந்நூலிலுள்ள ''மெய்த் தொண்டர் குழாம்'' என்ற சொற்றொடருக்கு விளக்கம் கூறும்போது, மண்ணுலகத்தில் தேகத்தோடுகூடி வாழும் மெய்யடியார் களுடைய குழாம் அது அல்லவென்றும், நமது கட்புலனுக்குத் தோன்ருத, அக உலகத்தை ஆட்சி செய்து வருகின்ற Invisible Masters இன் குழாமே அதுவென்றும், ''உடலைவிட்டோ உடலோடேயோ சாதகனது அறிவுக்கு அறிவாய் நின்றுணர்த்த வல்லவர்களே மெய்க்குருவாவர்; அத்தகையோரின் திருக்கூட்டம் சம்பிரதாய முறைப்படி ஆதி மகாபுருஷன் முதலாகத் தொடர்புள்ள ஒரு கூட்டமே வாழையடி வாழையாக வளர்ந்து பெருகியுள்ள மெய்யடியார் கூட்டம்'' என்றும் சிவயோகி அவர்கள் சொல்லுவார்கள். அத்தகைய மெய்த்தொண்டர் குழாத்தின் தொடர்புடைய சிவயோகி அவர்களுடைய மனமண்டலத்திலே, அம்மெய்த்தொண்டர் இருந்து உணர்த்திய மர்மங்களையும் உண்மைகளையுமே இந்நூலில் அவர்கள் எடுத்து விளக்கியிருக்கிருர்கள்.

உதாரணமாக், விநாயகரின் "பெரும் பாரக் கோடு" என்ன என்பதை விளங்கும்போது, "கடைவாய்ப் பற்களில் செய்யப்படும் ஒரு கிரியையினுல், கீழுள்ள ஆசைகளைப் பெயர்த்தெறிந்து, ஒளிமண்டலத்திலுள்ள ஜீவ தரிசனத்துக்கு வழிசெய்யும் ஆற்றல் உள்ளது என்பதைப் "பெரும் பாரக்கோடு என்ற கருத்து விளக்குகிறது" என்று சிவயோகி அவர்கள் குறிக்கும்போது, ஒரு அரிய செய்தியைச் சாதகர்கள் உணர்ந்துகொள்ள முடிகிறது.

விநாயகரின் "வேழமுகம்" என்ன என்று விவரிக்கும் போது,"குருவின் சகாயத்தால் தேகங்கடந்த தேகி உணர்த்தப்பட்ட போது, இருட்டைக் கிழிக்கும் தும்பிக்கை போன்ற உருவம் சில நிமிஷங்கள் விளங்கிப் பின்னர் ஒளி மண்டலம் அமையும். அந்த ஒளியானது ஒரு அடிவரையில் விளங்குவதால், யானையின் துதிக்கை நீட்டினதுபோல் உள்ளதை உருவகப்படுத்தி விளக்கப்பட்டுள்ளது" என்று நூலாசிரியர் கூறும்போது, Etheric tube என்று மேல்நாட்டு ஞானிகள் சொல்லுவது நினைவுக்கு வருகிறது வருகிறது.

மேலும்,

"நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனியும்"

என்ற வரிக்குப் பொருள் கூறும்போது, பின் மூளையிலுள்ள Pineal Gland இன் ஆற்றலும், முன் மூளையிலுள்ள Pituitary Gland இன் ஆற்றலும் பொருந்தியே நீல ஒளி உண்டாகிறதென்றும், இந்த வித்தையைத் தென்னுட்டுக் களிக்கவே திருமூலர் தென்னுட்டுக்கு வந்ததாகச் சொல்லுகிருர் என்றும் திருமந்திரத்திலிருந்து ஆசிரியர் ஆதாரம் காட்டும்போது, நமக்கு ஒரு புதிய உலகத்தை அவர்கள் திறந்து காட்டுவது போலிருக்கிறது.

பல்லின் சூக்ஷ்மம் விநாயகர் வழிபாட்டில் உணர்த்தப் பட்டுள்ளது போல், கண்ணின் சூக்ஷ்மம் நடராஜ வித்தை

யாலும், பெண்ணுடன் பொருந்தி மாற்றம்பெறும் வித்தை சோமாஸ்கந்த மூர்த்தத்தாலும் உணர்த்தப்பட்டிருக்கிறது என்று ஆசிரியர் ஜாடையாகச் சொல்லுவதை வாசகர்கள் ஆழ்ந்து சிந்தித்து, ஆசிரியரை அணுகி மேல் விளக்கம் பெற்றுப் பயனடைவார்களாக.

கட்டும் தன்மையினுலே, நரகமும் சொர்க்கமும் ஒரே ரகத்தைச் சேர்ந்தவைதான் என்றும், நரகத்தை இரும்பு விலங்காகக் கருதினுல் சொர்க்கத்தைப் பொன் விலங்காகக் கொள்ளுதல் வேண்டும் என்றும், காரண சரீரத்தின் ஆற்றலைக் கெடுத்து அகண்ட அறிவாய் நாம் மாறும்போதுதான் வினைகளுடைய பந்தத்திலிருந்து நாம் விடுபடுகிறோம் என்றும் ஆசிரியர் விளக்கும்போது, ''காரணத்தைக் கண்டு வினையாடுவாயே'' என்ற சித்தர்வாக்கு நினைவுக்கு வருகிறது.

''கணு முற்றி நின்ற கரும்புள்ளே காட்டி''

என்ற வரிக்கு ஆசிரியர் கூறும் விளக்கம் இந் நூலுக்கும் பொருந்துவதாகும் :—''இயற்கையில் கரும்பின் சாறு வெளியாகாதிருக்கக் கணுக்கள் அமைக்கப் பட்டுள்ளன. கரும்பு முதிரும் வரையில் கணுக்களின் பாது காப்புடன் சாறு வெளிப்படாமல் உள்ளது. கரும்பு முதிர்ந்த பிறகு, கணுக்கள் இடையே வெடித்து, சாற்றைப் பிலிற்றுகின்றன.''

இவ்வாறு ஞானச் சாற்றைப் பிலிற்றும் இந்நூலை ஞான வேட்கையுடையவர் பயின்று பலனடைவார்களாக.

''சிந்தனை போய் நானெனல் போய்
தேக்க இன்ப மாமழையை
வந்து பொழிந்தனை நீ
வாழி பராபரமே.''

—தாயுமானவர்.

தியாகராய நகர்
சென்னை - 17
20 - 8 - 76.

எஸ். மகராஜன்

# முன்னுரை

மக்கள் சமுதாயம் பலதரப்பட்ட நிலையில் உள்ளது பற்றி, மக்களது வழிபாடும், மக்கள் பின்பற்றும் சமயமும் பல வகையாக உள்ளன. அவ்வாறு வெவ்வேருக விளங்கினும் பல்வகைச் சமய நெறிகளின் உண்மையைக் கண்ட அநுபூதிமான்கள், ஒரு உண்மைதான் பலவேறு வகையான கொள்கைகளாகப் பிரித்துணரப்படுகிறது என்ற முடிவுக்கு வந்துள்ளனர். அப் பெரியோர்களிடம் சமயக் காழ்ப்பே யில்லை. அப் பெரிய நிலையை அடையாத இடைப்பட்ட நிலையில் உள்ளவர்களிடம் சமயக்காழ்ப்பு இருக்கவே செய்யும். அறிவுடையோர் அவ்விதமான மாறுபாடுகளில் ஈடுபடுவது உண்மையுணராத நிலையே யாகும்.

இந்து சமயத்தில் உள்ள சைவம், கௌமாரம், காணுபத்தியம், சாக்தம், வைஷ்ணவம், சௌரம், காபாலிகம் எல்லாம், அதனதன் கண்ணுள்ள இறையை மூலப்பொருள் என்று கூறி, அந்தச் சமயத்தினின்றும் தூலம், சூக்குமம், காரணங்கள் விளக்கி, அகண்ட வஸ்துவை அடைய வழிகோலியுள்ளன என்பதை அவ்வச் சமய ஞானபாதத்தா லுணரக்கூடும். ஆனுல், கிரியா பாதத்தால் உணரமுடியாது. ஒவ்வொரு சமயத்திலும் சாமானியர் வழிபடத் தூல உருவமும், யோகத்திற்கு உரிய மந்திர உருவமும், ஞானத்திற்கு உரிய உபதேச உண்மையும் விளக்கப் பட்டுள்ளன. சைவத்தில் அம் முறையில் பலவேறுபட்ட மகேசுரங்களும் கூறப்

பட்டுள்ளன. சாக்தத்தில் பல சத்திகள் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. வைஷ்ணவத்தில் பல விஷ்ணு அம்சங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. ஆதித்தர் பன்னிருவர் எனக் கூறப்படுகிறது. கௌமார சமயத்தில் முருகன் திருவுரு பலவாக விளக்கப்பட்டுள்ளது. அவ்விதமே காணுபத்தியத்தில் விநாயகருக்கும் முப்பத்திரண்டு பேதங் களும், அவற்றிற்கு ஏற்பத் திருவுருவமும் புராணமும் கூறப்பட்டுள்ளன.

1. பால கணபதி
2. தருண கணபதி
3. பக்தி கணபதி
4. வீர கணபதி
5. சக்தி கணபதி
6. துவிஜ கணபதி
7. சித்தி கணபதி
8. உச்சிஷ்ட கணபதி
9. விக்கின கணபதி
10. க்ஷிப்ர கணபதி
11. ஏரம்ப கணபதி
12. லட்சுமி கணபதி
13. மஹா கணபதி
14. விஜய கணபதி
15. நிருத்த கணபதி
16. ஊர்த்துவ கணபதி
17. ஏகாட்சர கணபதி
18. வர கணபதி
19. திரயாட்சர கணபதி
20. க்ஷிப்ரப்பிரசாத கணபதி

21. ஹரித்ரா கணபதி
22. ஏகதந்த கணபதி
23. சிருஷ்டி கணபதி
24. உத்தண்ட கணபதி

25. ரணமோசன கணபதி
26. துண்டி கணபதி
27. துவிமுக கணபதி
28. திரிமுக கணபதி

29. சிங்கமுக கணபதி
30. யோக கணபதி
31. துர்க்கா கணபதி
32. சங்கடஹர கணபதி

எனக் கூறுகின்றனர், இவைகளை விட்டு மந்திர வடிவில் விநாயகரைச் சிறப்பாகப் பதினாறு மந்திரங்களால் வழிபடுகிறார்கள்.

1. ஓம் சுமுகாய நம:
2. ஓம் ஏக தந்தாய நம:
3. ஓம் கபிலாய நம:
4. ஓம் கஜகர்ணிகாய நம:

5. ஓம் லம்போதராய நம:
6. ஓம் விகடாய நம:
7. ஓம் விக்நராஜாய நம:
8. ஓம் கணாதிபாய நம:

9. ஓம் தூமகேதுவே நம:
10. ஓம் கணாத்யக்ஷாய நம:
11. ஓம் பாலசந்த்ராய நம:
12. ஓம் கஜாநநாய நம:

13. ஓம் வக்ரதுண்டாய நம:
14. ஓம் சூர்ப்பகர்ணாய நம:
15. ஓம் ஏரம்பாய நம:
16. ஓம் ஸ்கந்த பூர்வஜாய நம:
ஓம் மகா கணாதிபதயே நம:

உபதேச நிலையில் ஓம் என்ற பிரணவ வாச்சியப் பொருளாகிறார். இந்த ஏகாக்ஷரப் பிரணவமே சர்வ தேவதா மந்திரம். இத்தகைய சிறப்பான பிரணவத்திற்குக் கணபதியே தலைவர் என்று கூறப்படுகிறது.

'விநாயகன்' என்றால் தனக்கொரு வேறு தலைவன் இல்லாதவன் என்று பொருள்படும். அவனை வழிபட்ட அடியார்கட்கு வரும் இடையூறுகளைப் போக்கி இன்பத்தில் இருத்துகின்றவன். அஃதாவது இருள்மயமாகிய ஆணவம் மாயை கர்மம் இவற்றை அகற்றி, ஒளிமயமான பரமாகாய மண்டலத்தில் விடுபவன் என்று பொருள்படும். வேத மூலம் பிரணவமே யாகும். வேதம் ஒலிமயமானது. ஒலி பிறப்பது அகரமாகிய அங்காத்தலிலும், நிலைபெறுவது உகாரம் என்ற இதழ் குவிதலிலும், முடிவு பெறுவது இதழ் மூடும் மகாரத்திலுமாகும். இம்மூன்றின் முடிவு ஒரு ஸ்பந்த உணர்வாகிய (Vibration) அர்த்த மாத்திரையில் உள்ளது. இந்த அர்த்த மாத்திரைப் (அமாத்திரைப்) பிரணவமே விந்து (ஒளி) நாதமாகப் (ஒலி) பரமாகாயத்தில் யோகிகளின் தியானப் பொருளாக உள்ளது. சகல மந்திரங்களின் வாச்சியப்பொருள் பரமாகாயத்தில் ஒலியை எழுப்புவதில் முடிவுறும். இத்தகைய ஒலி அகரம் என்ற ஒரு எண்ணமாகிய சிவனும், செயலாகிய உகாரமான சத்தியும், மகாரமான பாசமும், உயிரின் ஆற்றலும் பொருந்தியே அமைகிறது.

"இறை சக்தி பாசம் எழில் மாயை
ஆவிஉற நிற்கும் ஐங்காரத் துள்." —திருவருட்பயன்:

ஓம் என்ற ஒலியுலக வித்தே கணபதியாவர்.

—பதஞ்சலி யோக சூத்திரம்.

ஸபூர்வேஷா மபிகுரு; காலேனுன வச்சேதாத்.

—சமாதிபாதம், சுலோ-26.

(இதன் பொருள்) அந்த ஈசுவரன் காலத்தில் கட்டுப் படாதவர்; ஆதலால் மிகத் தொல்லோனுகிய குருவுக்கும் அவரே குருவாகிருர்.

தஸ்ய வாசக : ப்ரணவ —சமாதிபாதம், சுலோ-27.

(இ-ள்) அவர் பிரணவம் என்று சொல்லப்படும் ஓங்கார வடிவினர்.

தஜ்ஜ பஸ்ததர்த்த பாவனம் —சமாதிபாதம், சுலோ-28.

(இ-ள்) இந்த ஓங்காரத்தை ஜபிப்பதும் அதன் உட் பொருளை உன்னுவதும் சமாதியடைவதற்கு உபாய மாகிறது.

தத: ப்ரத்யக் சேதனுதிமோ
அப்யப்த ராயா பப்வஸ்ச —சமாதிபாதம், சுலோ-29.

(இ-ள்) அந்தப் பிரணவ உபாசனையினின்று உள்ளத் தினுள் ஆத்ம திருஷ்டி உண்டாவதுமன்றி, யோக விக்னங் கள் அழிந்துபட்டும் போகின்றன.

இந்த நிலையை அடைந்து சித்திபெற்றவருக்குக் காழ்ப்பு இல்லை. ஏனெனில் பிரணவத்தை சிவம் என்றும், சத்தியென்றும், விஷ்ணு என்றும், ஸ்கந்தன் என்றும், சூரியன் என்றும், அந்தந்தச் சமயங்களும் அறுதியிட்டு முடிவு கூறுகின்றன. புற மதத்தர்களும் ஓங்காரத்தையே முதல் நிலை என்று ஒப்புக்கொள்ளுகின்றனர். கிருஸ்து வர்கள் Amen என்றே கூறுகின்றனர். இதுவே கடவுளால் முதலில் படைக்கப்பட்டது எனவும் கூறுகின்றனர்.

அதனுல், கணபதி எந்தக் காரியத் தொடக்கத்திலும் முதலிடம் பெறுகிறுர். பேச்சுத் தொடங்க, முதலில் சூக்கும சலனம் ஆகாயத்தில் தோன்றி, மூளையில் பதிந்து, அதன் செயல் மூலதாரத்திலிருந்து உதானனைக் கண்டத் திற்குக் கொண்டுவந்து, ஒலியாக வாயின் வழியாக வெளிப்படுகிறது. எண்ணம் உதிக்குமுன் சிரசின் மேலுள்ள ஆகாயப்பகுதியில் சலனமில்லை. எண்ணம் உதித்த பிறகே ஆகாய மண்டலத்தில் சலனம் உண்டாகிச் சொல்லும் பொருளுமாக வெளிப்படுகிறது. அதனுல் 'பரவாக்' என்ற சப்தப்பிரமமே அவரது உண்மைச் சொரூபமாகும். இது யோகியர் ஞானியர் வழிபாடாகும்.

'சோபானக் கிரமம்' என்ற முறையில் அத்தகைய உருவமற்ற பரமாகாசமாய் அறிவாய் விளங்கும் பரம் பொருளுக்கு, மக்கள் அறிவுக்கு விளங்கத் தோற்றமும் செயலும் கூறி, மக்களுக்குத் திடபுத்தியுண்டாக்கப் புராணங்கள் ஏற்பட்டன. அவ்வாறு ஒவ்வொரு மூர்த்தி யையும் சிறப்பித்து விளக்கும் புராணங்கள் உள்ளன. அம் முறையில் கணபதியைச் சிறப்பித்துக் கூறும் புராணத் திற்குப் பார்க்கவ புராணம் என்று பெயர்.

பிருகு முனிவரால் கூறப்பட்டது பற்றிப் பார்க்கவ புராணம் என்று பெயர் வந்தது. பிருகு முனிவர் வியாச ரிடம் கேட்டு, உலோக உபகாரமாக, உபாசனு காண்டம் என்றும், லீலா காண்டம் என்றும் இருநூற்றைம்பது அத்தியாயங்களில், பன்னீராயிரம் சுலோகங்களினுல் வடமொழியில் கூறினுர். இது கணபதியைப் பற்றிக் கூறு வதால், காணுபத்திய மகத்துவம் இதில் விளக்கப் படுகிறது. இது கச்சியப்ப முனிவரால் தமிழில் செய்யப் பட்டுள்ளது. இஃதன்றி வேறு பல புராணங்களில் பல வாறுகத் தோற்றம் கூறப்பட்டுள்ளது. அவைகளில் உள்ள

..OCK MADALAYAM
KOVILUR-630 307
MANAGIRI VIA



கருத்தினுல் அவைகளை அறிய வேண்டுமேதவிர கதா பாத்திர சிருஷ்டியைக் கொண்டு உண்மையை அறிய முடியாது.

யானை முகம்

பிரளயத்தில் அழிந்து ஒடுங்கின உலகத்தை மீளவும் படைக்கத் திருவுளம் கொண்ட பரம்பொருள், வக்ரதுண்ட ராகத் தனது விருப்பத்தால் உருவெடுத்து, பிரமன், விஷ்ணு, உருத்திராதிகளைப் படைத்து, அவர்களை முத்தொழில் செய்யுமாறு ஆக்ஞாபித்தார் என்று கூறப்படுகிறது.

'வக்ரதுண்டரி' என்ருல் வளைந்த ஆனைத் துதிக்கையை யுடையவர் என்று பொருள். இது அவர் சுபாவ விருப் பத்தில் தோன்றின அவசரம். மும்மூர்த்திகளும் வக்ர துண்டரை வழிபட்ட தோத்திரத்தினுல், வக்ரதுண்டரே பரப்பிரம சொருபம் என்பதை அறியவும்.

(க) நிருவி கற்பமாய் நிறைந்தவா நந்தபூ ரணமாய்
நிருவி காரமாய் நிர்க்குண மாயத்து விதமாய்
நிருவி சேடமாய் நிரஞ்சன மாகியொன் ருலும்
நிருமி தப்படாக் கணேசநின் னீள்கழற் றெழுதாம்.

(உ) பிரம மாயொளி யாய்நிரா காரமாய்ப் பெரிதாய்த்
தரணி யாதிதத் துவமெலாங் கடந்ததத் துவமாய்
வரமெ லாந்தரும் வள்ளலா யேகமாய் வதியும்
பரம ஞகிய கணேசநின் பதமலர் தொழுதாம்.

(ங) என்று நீங்குருத் திருவுரு வுடையதா யெங்கு
மொன்றி நின்றுணர்ந் திடுமறி வானந்த வுருவாய்த்
துன்றும் யோகியர் தியானிக்கப் படுஞ்சுக மாகிச்
சென்று சேர்தராக் கணேசநின் றிருவடி தொழுதாம்.

(ச) உலக காரண காரிய மாயுயிர்க் குயிரா
யிலகு ஞானியர் தமையிழந் தெய்துநற் பேருய்ப்
பலவு மாய்ப் பரப்பிரமமாய்ப் பரேசமாய்ப் பரமாய்த்
திலக மாகிய கணேசநின் சேவடி தொழுதாம்,

(ரு) சகல லோகமும் படைத்தளித் தழிக்குந்தற் பரமா
யகில லோகத்தும் புகலிடந் தனக்கிலா வமைவாய்ப்
புகலு லோகங்க ளனைத்திற்கும் புகலிடந் தானாய்ப்
பகவ னாகிய கணேசநின் பதமலர் தொழுதாம்.

(சு) உகத்துக் காதியாய்த் தேவருக் காதியா யுலவாச்
சுகத்துக் காதியாய்ச் சுரர்களுக் கீசராய்ச் சுடரும்
மகத்துக் கீசராய்க் கணங்களுக் கீசராய் மதிப்போ
ரகத்துக் கூடிய கணேசநின் னடியிணை தொழுதாம்.

(எ) இராச தத்தொழி லாகிய சிருட்டியை யியற்ற
விராவி ராசதத் துருக்கொடு பிரமனாய் மேலாய்ப்
பராவு வித்தைக ளனைத்திற்கும் பயில்பிறப் பிடமா
யொராது நின்றருள் கணேசநின் னொளிர்பதந்
தொழுதாம்.

(அ) சோர்வி லாதசாத் துவிதநற் றொழிலெனுந் திதிக்குச்
சார்வ தானதா மதந்தனி லுருவுகொண் டரியாய்த்
தீர்வி லாப்பகை யசுரரைச் செகுத்திடுந் தேவர்க்
கார்வ மேயருள் கணேசநின் னருட்பதந் தொழுதாம்.

(கூ) தாம தத்தொழி லானசங் காரமாற் றுதற்குத்
தோம கற்றுசாத் துவிகத்திற் றோன்றுருத் திரனா
யேம முற்றிமை யோர்முனி வோரெலா மிறைஞ்சச்
சேம வைப்பதாங் கணேசநின் சீரடி தொழுதாம்.

(க0) கிரண பந்தியாற் பயிரையுங் கிளர்சுதைப் பெருக்காற்
பரவு தேவர்க டம்மையு மகிழ்வித்துப் பார்ப்பார்க்
கரச னாயுல கத்துவெப் பறுத்திடுந் திங்கட்
சொருவ மாகிய கணேசநின் றுணையடி தொழுதாம்.

(கக) ஒளிப்பி ழம்பதா யோகவா யுவினுரு வாகி
விளிப்பில் காலங்க டெரிப்பதாய்த் தொழிலெலாம்
விளைத்துக்
களிப்ப தாய்ப்பல சத்திய ஞானசெங் கதிராய்த்
தெளிப்ப நின்றருள் கணேசநின் சேவடி .தொழுதாம்,

(கஉ) நிரப்பி றன்மமாய்த் துறக்கமாய் நிறைந்ததத் துவமாய்த்
தரைச்சொ ரூபமாய்ச் சமுத்திரமாய்த் திசைச் சுரராய்க்
கரப்பி லாவுல கனைத்துமாய்க் கலந்துநின் றருளும்
பரப்பி ரமமாங் கணேசநின் பாதங்க டொழுதாம்.

—விநாயக புராணம்

விளக்கம்

மனிதன் பிறவிக்கு வருமுன், பரமாகாயத்திலிருந்து ஒரு பெலூன் (Baloon) போன்ற ஆகாய தத்துவத்தால் விந்துவாய்க் கருப்பையில் விடப்பட்டு, கரு உருவாகிக் குழந்தையாய்ப் பிறக்கிறது. ஆகாயக் கூறு கண்ணுக்குப் புலப்படவில்லை. விந்துவும் சுரோணிதமுமே அறிவுக்கு ஊகிக்க முடிகிறது. சிசு வளரும்போது பிரணவம் போலவே சுருட்டிக் கொண்டுள்ளது. ஓகாரத்தின் கீழ்ப்பாகம் போன்ற தொப்பூழ்க் கொடியால் அதன் சம்ரக்ஷணை நடந்து வளர்ந்து வெளிப்படுகிறது.

வாக்கு ரூபமான பிர்மத்திற்கு மூலாதாரமே செயலுக்கு முதலிடமாக விளங்குகின்றது. அங்கிருந்து உதானன் எழும்பிச் சிரசை அடைந்து சொல்லாக வெளிப் படுகிறது. சப்தப்பிர்மம் உதிக்க அடிப்பாகமும் சிரசும் சேரவேண்டியுள்ளது. நிலத்தை மூக்கினுல் தொடும் பிராணி யானை ஒன்றேயாகும். அசைதலற்ற ஆகாயக் கூறு, மூக்கின் செயலாலே உசுவாச நிசுவாசம் பொருந்தி, ஜீவனாக விளங்கித், தேகமாகி, சிருஷ்டி திதி சம்ஹாரத் திற்கு உட்படுகிறது என்பதை அறியவும்

ஓம் வக்ரதுண்டாய ஹூம்

என்பது கணேச ஷடாட்சர மந்திரமாகும். இம் மந்திரத்தை விஷ்ணு உபாசித்து மதுகைடவர்களைக்

கொன்றதாகக் கூறப்படுகிறது. இந்திரன், கௌதம முனிவர் இட்ட சாபத்தினுல் உடம்பெல்லாம் யோனிமய மாய் மாறிவிட்டதை, இம் மந்திரங்கொண்டு மாற்றிக் கொண்டதாகக் கூறப்படுகிறது.

முருகப்பெருமான் இந்த ஷடாட்சரத்தால் கணபதியின் அருள்பெற்றுத் தாருகனே சம்ஹரித்ததாகக் கூறப்படு கிறது. வாமனுவதாரமெடுத்த விஷ்ணு, தந்தையாகிய காசிபரால் ஷடாட்சரம் உபதேசிக்கப் பெற்று, அதனுல் மாபலியை அடக்கினதாகக் கூறப்படுகிறது. பரசுராமன் இம்மந்திர சித்தியால் இருபத்தொரு தலைமுறை அரசரை அழித்தனன்.

இந்த வக்ரதுண்ட மூர்த்தி காசியில் விசுவநாத சன்னதிக்கெதிரே உள்ளதாகக் கூறுவர். காசிக்கு 'உடுண்டி' என வேறு பெயரும் உண்டு. அதனுல் உடுண்டி (துண்டி) விநாயகர் என்றும் கூறப்படுகிறது.

பிர்மனது கொட்டாவியில், செந்நிற வடிவத்துடனும் பத்துத் தலைகளுடனும், மகா அழகுடையவனுக ஒரு அசுரன் தோன்றினுன். அவன் செந்நிறமாயிருந்ததுபற்றிச் சிந்துரன் எனப் பெயரிட்டு, அவனுக்கு அளவற்ற வரங் களையும் கொடுத்து விடுத்தனன். அவன் மூன்று உலகங் களையும் ஆண்டு, தேவர்கட்கு இடர்களைச் செய்து வந்தனன். தேவர்கள் விநாயகரை இடர் தீர்த்தருள வேண்டினர். அவர், உமாதேவியின் வயிற்றில் உதித்து சிந்துரனை அழித்து விடுவதாகக் கூறி மறைந்தனர். அவ்வாறே உமாதேவியின் வயிற்றில் கருவாயினர்.

இது இவ்வாருயிருக்க, மயேச்சுரன் என்னும் ஓர் அரசன் சிவபக்தனுக நல்லரசு செலுத்தி வந்தான். அவனைப் பிரகஸ்பதி பார்த்து மகிழ்ந்து, "உன் தலை, முனிவர் தேவர் பெரியோர்களால் வணங்கக்கடவது" என்று வரம் கொடுத் தனர். அரசன், இவ்வரம் தனக்கு எப்போதும் பலிதமுறும்

எனக் கேட்டனன். அதற்கு அவர் "நீ எப்போது யானை யினிடத்து உற்பத்தியாகின்றனையோ அப் பிறப்பில் பலித முறும்" என்று கூறிச் சென்று விட்டார்.

பின்னர் ஒரு சமயம், அளவற்ற சேனைகளுடன் நகரை விட்டு வெளியே செல்லும்போது, எதிர்ப்பட்ட நாரதரைக் கவனியாது, வந்தனை வழிபாடு செய்யாமல், அவனது யாத்திரையில் சென்றனன். நாரதர், தன்னை அவன் உல்லங்கனம் செய்து போவதால், "மதங்கொண்ட யானையாகுக" என்று சாபமளித்தனர். மறுபிறவியில் யானைமுகத்துடன் யானை வயிற்றில் பிறந்து கயமுக சூரனாயினன்.

அவன் பூர்வஜன்ம ஞானத்துடன் சிவபக்தனாகயிருந் தான். உமாதேவி கருவுற்றுத் தனிமையில் வீற்றிருந்த மண்டபத்தைத் தனது கொம்பினால் இடித்துத் தள்ளினான் சிவபெருமான் சினந்து சூலாயுதத்தை அவன்மேல் விடவும் அது அவனை அளவற்றத் துன்பத்துக்குள்ளாக்கிச் சென்ற போது, அவன் 'சிவாய நம' என்று அலறிச் சோர்வுற்று வீழ்ந்தான். சிவபெருமான், அவனை 'வேண்டுவது யாது?' என்ன, "அடியேற்கு அழியாத முத்தியினைக் கொடுத் தருள வேண்டும்" என்றனன்.

பரமனும், அவ்வாறே அவனது தோலையும் சிரத்தையும் பிரித்துத் தோலினை இடையில் உடுத்தியும் சிரசைப் பதன மாகவும் வைத்திருந்தான். கிருத்தி என்பது தோலுக்குப் பெயர். தோலாடையை உடுத்திக் கொண்டவனானபடியால், சிவபிரானுக்குக் கிருத்திவாசன் என்ற பெயர் ஏற்பட்டது.

இது இவ்வாறிருக்கச் சிந்துரனுக்கு அவனை அழிக்க உமாதேவியின் கருப்பத்தில் விநாயக மூர்த்தி கருவாகி வளர்கின்றார் என்றும், அக்கருவால் அவன் சிலநாளில் அழிக்கப்படுவான் என்றும் அசரீரி கூறி மறைந்தது. அவன் தனது மாயையினால் உமாதேவி உறங்கும்போது வாயு

ரூபமாகி வயிற்றுளிருந்த கருவின் தலையைக் கிள்ளி எடுத்துச் சென்றனன். இவ்விதம் நடந்ததை யாரும் அறியவில்லை. சிரம் போயும் விநாயகர் பூரண வளர்ச்சி யுற்று சிரமற்ற குழவியாகப் பிறந்தனர். பின்னர் எல்லோருடைய வேண்டுகோளின்படியும் கயமுகாசூரன் தலையைக் கொணர்ந்து தன்னுடலிற் பொருத்திக் கொண்டு, சர்வாபரண பூஷிதராய் இடப்பாகத்தில் சித்தியும் வலப்பாகத்தில் புத்தியுமாகக் காட்சியளித்தனர். கஜமுகத்துடன் தோன்றியபடியால் கஜானனர் என்ற பேருடன் விளங்க வேண்டும் என்று எல்லோரும் கேட்டுக் கொண்டனர். இவ்வாறு திருவவதாரம் செய்தது, ஆவணிமாதம் வளர் பிறைச் சதுர்த்தியாகும்.

நாரதர் சிந்துரனிடம் கஜமுகர் உற்பத்தியைக் கூறி மறைந்ததும், சிந்துரன் படைகளுடன் கைலையடைந்து போர் செய்ய விழைந்தனன். போரில் கஜானனர் சிந்துரனைத் துதிக்கையால் எடுத்துத் தனது மத்தகத்தில் தேய்த்து மாய்த்தொழித்தனர். கஜானனருக்குச் சிந்துரச் சாந்தாயிற்று.

விளக்கம்

இவ்விஷயம் சங்கேதக் குறிப்பால் ஞானத்தை உணர்த்தும் புராணக் கதையாகும்.

1. சிந்துரன் பிர்மாவின் கொட்டாவியில் பிறந்தவன். கொட்டாவி வருவது சோம்பல் தூக்கம் வருமுன் உள்ள தாமதகுணச் செயல். அஞ்ஞானம் மிகுந்துள்ள போது ஆன்ம அறிவு விளக்கம் பெறுதுள்ள நிலை. இந்நிலையில் காமமே நித்திய சுகமாகக் கருதுவது மனித இயல்பு. காமத்தின் தொடர்பான குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம், டம்பம், தர்ப்பம், ஈரிஷை, அசூயை என்றவைகள் பத்தும் அவனுக்குச் சிரசாக விளங்கின.

2. யாவரையும் அழிக்கும் வரம் பெற்றது. காமத்தை அடைந்து திருப்தி செய்து விடுவதென்பது யாராலும் இயலாத காரியம். ஒவ்வொரு வகையில் காமம் விருத்தி யாகுமே தவிர அது ஒருக்காலும் அழிவுறுவதில்லை.

3. காமக் கண்ணனுக்குக் காண்பன எல்லாம் அழகாகவே தோன்றும். இது 'வாமதேவரது நிலை'. 'வாம தேவ குஹ்யாய நம' என்பதனால் அறிக. வாமம் என்றால் அழகு என்பது பொருள்.

4. காமவாயு காமத்தில் பொருந்தியுள்ளது. காமவாயு குறித்தானத்தில் பொருந்தி இந்திரியத்தைத் தூண்டி அதனை வெளிப்படுத்துவது. அதற்கு 'மூலவாயு' என்ற பெயரும் உண்டு. யோகியர் அதன் செயலை மாற்றிச் சிரசை அடையும்படி செய்கின்றனர். இம் முறைக்குக் 'குண்டலினி யோகம்' என்ற பெயர் வழங்கு கிறது.

காம வாயுவின் காரியத்தாலே தேகங்கள் அமைக்கப் பட்டுத் திதிக்கும் அழிவுக்கும் உட்படுகின்றன. காமவாயு என்ற சிந்துரனால் திரிமூர்த்திகளையும் ஏனைய தேவர்களையும் அடக்க முடிந்தது. பிரணவம் அ, உ, ம என்றபோது, வியக்தமாக, அஃதாவது தனித்து வியஷ்டி யாக உள்ளது. சமஷ்டியானபோது, அதாவது கலந்து நிற்கும்போது விந்து நாதமாக உள்ளது.

5. உருவம் உடைய மூர்த்தங்களுள் சிறப்புடையது மயேசுர மூர்த்தியாகும். அதனால் நல்லறிவு என்ற நியதி தர்மத்தில் நிலைத்த கொள்கையை யுடையவன். குரு என்ற சொல்லுக்கு ஒளி என்ற பொருள் உண்டு. ஒளியின் பெருக்கால், அவனது தலையைத் தேவர்களும் ஏனையவர் களும் வணங்குவார்கள் என்பது ப்ரஹஸ்பதி கொடுத்த வரத்தின் பொருள்.

6. நல்லறிவு பெற்றவர்களிடமும் பரா அகந்தா என்று கூறும் சாத்துவீக அகங்காரம் இருப்பது இயல்பு. அந்த அகங்காரம் உள்ளவரையில் பிறவித் தளை அறுது. பரா அகந்தா நிலை மதங்கொண்ட யானையாக உருவகம் செய்யப் பட்டுள்ளது.

7. உமையவள் கருவுற்ற விஷயம்

வடநாட்டு ஆகமவாதிகள் சிவம், சக்தி, ஆன்மா என்ற மூன்றையும் நித்தியப் பொருள் எனக் கொண்டுள்ளனர். பக்தி காண்டிகள் கொள்வது போல், சிவம், சக்தி, ஆன்மா மூன்றும் உருவத்தின் இயல்பை உள்ளடக்கி நிற்கும் அகண்டப் பொருள் என்று முடிவு கண்டுள்ளனர். அதனுல் சிவம் என்ற அறிவு, பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் ரவி, மதி, ஆன்மா, சத்தி, என்றவைகளைக் கடந்தும், இவைகளுடன் கலந்தும் விளங்குகின்றது. அறிவு விளங்க ஒரு உருவும், அதைப் பெறுவதால் இன்பமும் அவசியம் வேண்டியுள்ளது. அறிவின் ஆற்றலுக்கு ஏற்ப இன்ப நிலையும் மாறுபடுகிறது.

சத்தி வடிவு சகல ஆனந்தமும்
ஒத்த ஆனந்தம் உமையவள் மேனியாஞ்
சத்தி வடிவு சகளத் தெழுந்திரண்
டொத்த ஆனந்தம் ஒரு நடமாடும் —திருமந்திரம் 2769

ஆத்ம அறிவு மேம்பட்டபோது முன்னர்ப்பெற்ற உலக அறிவு கீழாவதுபோலச் சத்தியின் நிலையும் மாற்ற மடைந்து விடும். அதனுல் சத்தி சிவமாவதும், சிவம் சத்தியாவதும் இயல்பு என்று முடிவு கண்டனர்.

சிவஞ் சத்தி நாதம் விந்து சதாசிவன் நிகழுமீச
னுவந்தருத் திரன்றுன் மாலய னென்றி னென்றுய்ப்
பவந்தரு மருவ நாலிங்குருவ நாலுபய மொன்று
நவந்தரு பேத மேகநாதனே நடிப்ப னென்பர்.

—சிவஞான சித்தியார்

சத்திதா னுதமாதி தானுகுஞ் சிவமு மந்தச்
சத்திதா னுதியாகுந் தருவடி வானவெல்லாஞ்
சத்தியுஞ் சிவமுமாகுந் சத்திதான் சத்தனுக்கோர்
சத்தியாஞ் சத்தன் வேண்டிற் றெல்லாமாஞ் சத்திதானே.

—சிவஞான சித்தியார்

சிவஞ்சத்தி தன்னையீன்றுஞ் சத்திதான் சிவத்தையீன்றும்
உவந்திரு வரும்புணர்ந்திங் குலகுயிரெல்லா மீன்றும்
பவன்பிர்ம சாரியாகும் பான்மொழி கன்னியாகுந்
தவந்தரு ஞானத் தோர்க்கித் தன்மைதான் தெரியுமன்றே.

—சிவஞானசித்தியார்

சத்தி சிவன்விளை யாட்டாம் உயிராகி
ஒத்த இருமாயா கூட்டத் திடை யூட்டிச்
சுத்த மதாகுந் துரியம் பிறிவித்துச்
சித்தம் புகுந்து சிவமய மாக்குமே. —திருமந்திரம் 1771

சத்தி சிவன்விளை யாட்டுத் தாரணி
சத்தி சிவமுமாஞ் சிவன்சத் தியுமாகுஞ்
சத்தி சிவனன்றித் தாவரம் வேறில்லை
சத்தி தான்என்றுஞ் சமைந்துரு வாமே.

—திருமந்திரம் 1779

நீநந்து மூலா தாரத்தில் ஆனந்த
நிர்த்தமிடும் இறைவி! நின்னொடு
ஆனந்த தாண்டவம் விளைத்து, நவவடிவுபெறும்
ஆதி சிவனைப் பரவு வாம்;
வானம் தொடுத்து, உலகம் அடையப் படைத்து
இடும்இவ் வகையின் புணர்ச்சி அலவோ?
ஞானங் கொள், அனைதந்தை, என உலகு
தெளிவுற நடத்துவது, ஞான ஒளியே!

—ஆனந்தலகரி

பரமா காயம், காணும் உருவில் எல்லாம் கலந்தும் வேருயும் உள்ளது. கலந்துள்ளபோது தேகமாக உள்ளது. கலந்துள்ள நிலையைக் கடந்தபோது, அது அதன் தன் னிலையை அடைகிறது. கணபதியை மூலாதாரத்திற்கதிபதி என்று யோகநூல்கள் கூறுகின்றன. மூலம் எது என்பதை அறிவதில் உண்மையடங்கியுள்ளது. மானிடர் கண்ணுக்குப் புலப்படுவது உடலில் மூலாதாரம். பரப்பிர்ம சொரூபமான கணபதி இங்கேதான் உள்ளாரா என்பதைச் சிந்திக்க வேண்டும். உலக முதற்காரணம் 'சாதாக்கியம்' என்று சைவாகமங் கண்டது. சாதாக்கியம் என்ருல், சதா+ ஆக்கியம் எனப் பிரியும். ஆக்கியம் என்ருல் மூலம், கர்த்தா எனப் பொருள்படும். இதை ஆகமவாதிகள்,

சிவ சாதாக்கியம்
அமூர்த்தி சாதாக்கியம்
மூர்த்தி சாதாக்கியம்
கர்த்தரு சாதாக்கியம்
கர்ம சாதாக்கியம்

என்று பிரித்து விளக்கினர்.

'சிவதாக்கியம்' என்பது மின்ஞெளியுடன் கூடி மகா சூக்குமமாய் சதா அசைந்தாடி ஓடிக்கொண்டுள்ள ஆகாய அணுக்களின் கூட்டமே யாகும். இதுவே உலகின் மூலப் பொருள் எனக் கொள்ளவேண்டும். இதுவே பரப்பிர்மத்தின் நிலையுமாகும்.

மட்டமான பருப்பொருளாகிய மூளையினுல் இந்த நிலையை உணரமுடியாது. மூளையையும் தலையையும் கடந்து நிற்கும் நுண்ணிய ஆகாச அணுவினுல்தான் (Ethenica brain) இதை உணர முடியும். இது அகண்டப் பொருள்.

'அமூர்த்தி சாதாக்கியம்' : மூர்த்தி என்பது வடிவம். காட்சிப் பொருளாகிய தலைக்கு உள்ள அறிவுக்குக் கற்பிக்

கப்பட்ட உருவமே அமூர்த்தி சாதாக்கியம் ஆகும். இந்த அமூர்த்தி சாதாக்கியத்துக்குக் கீழுள்ள மூன்றுக்கும் ஸ்தூல அறிவே போதுமானது. தலையுடன் கூடிய சிசுவினால் ஆபத்து வருமென்றும், தலையில்லாவிடின் சிந்துரன் ஆக்ஷிக்கு ஆபத்து வராது என்றும் கருதி, கணபதியின் சிரசை வாயு ரூபமாகக் கிள்ளி எடுத்துச் சென்றான் என்று கூறப்பட்டது. பக்தி காண்டிகளுக்குக்கூடச் சிரசைக் கடந்து உணர்வு செல்லாது;

### 8. உமையின் பிரசவம்

பராசக்தி ஒருத்தியேதான் பலவேறு சக்தியாய் விளங்குகின்றாள். பரப்பிர்மத்தை யறியும் தலைஞானம் இல்லாத சிசுவை பெற்றாள் என்றபடி.

காலுந் தலையும் அறியார் கலதிகள்
காலந் தசத்தியரு ளென்பர் காரணம்
பாலொன்று ஞானமே பண்பார் தலையுயிர்
காலந்த ஞானத்தைக் காட்ட வீடாகும்.

—திருமந்திரம், 2425

தலையடி யாவ தறியார் காயத்தில்
தலையடி யுச்சியில் உள்ளது மூலந்
தலையடி யான அறிவை அறிந்தோர்
தலையடி யாகவே தானிருந் தாரே.

—திருமந்திரம், 2426

நின்றான் நிலமுழு தண்டமும் மேலுற
வன்றாள் அசுரர் அமரரும் உய்ந்திடப்
பின்றான் உலகம் படைத்தவன் பேர்நந்தி
தன்றா ளிணையென் தலைமிசை யானதே

—திருமந்திரம், 2427

சிந்துரனால், அவனது ஆட்சி நிலைபெறப் பரஞானம் விளங்காதவாறு, சுழுமுனையை மேலெழும்பவொட்டாது

தடுத்து நிறுத்திக் கொண்டான் என்றபடி. சுழுமுனை நாடி தொழில்பட்டால்தான் சகஸ்ரதளம் விளங்கித் தலையைக் கடந்த மேலான அறிவைப் பெற முடியும்.

9. யானை முகம் உள்ள (மகேசுவரராஜன்) சத்தி மண்டபத்தைத் தகர்த்தது.

'வித்தியாகலை' என்ற தத்துவம், கீழான வித்தைக்கும் மேலான வித்தைக்கும் பொதுவான கன்னசி சக்கரத்தில் உள்ளது. கீழான உலகியல் அறிவு மேலான வித்தையை அடைய முடியாத மண்டபம் போன்ற தலையில் அடங்கிக் கிடக்கின்றது. அதைத் தகர்த்தெறியச் 'சமஷ்டிப் பிரணவ ஞானம்' வேண்டும். தலையின் அறிவைக் (சுட்டி அறியும் அறிவை) கடக்க யானையின் கொம்பும் பார்வையும் வேண்டும். தலையைக் கடந்தபோது, ஒளிஞானம் கிட்டி, முன்னர்ச் சிற்றறிவுடன் கூடிய தலை துண்டிக்கப்பட்டது. இது பக்குவான்மாக்களுக்குத் தக்க குருவால் காட்டப்படும் ஓர் உபாயம்.

10. கயமுகன் தலையை ஒட்டவைத்த விஷயம்

மேலான அறிவு என்பது ஆன்ம ஞானமும் பர ஞானமும் ஆகும். அது சுட்டி அறியப்படும் எவ்வுருவிலும் இல்லை. அது பல பிறவியின் அனுபவத்தால் பெற்ற நல்லறிவாகும். அது தேகங்கடந்த அறிவாகும். மூலாதாரத்தில் சிறந்து விளங்கிய குண்டலினி சத்தி, குரு உபாயத்தால் மேலெழுந்ததே கயமுகனது தலையைத் துண்டித்த விஷயமாகும். சித்சத்தியும் குண்டலினியும் ஒருங்கிணைந்தபோது சாதாக்கிய மண்டலம் அமையும்.

குண்டலினியின் கிரியைக்குப் பீடமாவது தேகமாகும். சித்சக்தி அறிவின் நிலைக்களமாகும். இவை இரண்டும் ஒன்று சேர்ந்தபோது கஜானனர் ஆனார். அவரது இடப்

பாகம் குண்டலியின் ஆற்றலான சித்தியுடனும், வலப் பாகம் சித்சத்தி ஆகிய புத்திக்குடையவளுடனும் தோன் றினர். இது மனிதனின் தலையில் இடப்பக்கப் பொட்டுக் கும் (இடக் கண்ணுக்குமேல்), வடப்பக்கப் பொட்டுக்கும் (வலது கண்ணுக்குமேல்) சிரசின் உச்சியின்மேல் உள்ள சகஸ்ரதள நிலையுமாகும். இந்த நிலை கைவரப்பெற்றபோது தேகப் பற்றுதல் கெட்டு, ஒளி தேகத்தை ஊடுருவிக் கீழும் மேலும் இருப்பதை உணரலாகும்.

## 11. சிந்துரன் அழிவு

மூலாதாரத்தில் காமவாயுவாகக் குண்டலினி மேலேற முடியாமல் தடைப்படுத்தி வந்த அக்கினிமண்டல ஆற்றலே கெட்டு, சோமமண்டலமாகச் சிரசில் விளங்குகின்றது. முன்னர்ச் சொன்ன மாற்றம் அமைந்ததை, கஜானனர் துதிக்கையால் எடுத்துத் தனது மத்தகத்தில் தேய்த்தழித் தார் என்று கூறப்பட்டுள்ளது. முகத்தின்முன் செவ்வொளி காணப்படுவதில் சிந்துரனின் அழிவு விளக்கப்பட்டது.

அவமாய தேவர் அவகதியில் அழுந்தானே
பவமாயங் காத்தென்னை ஆண்டுகொண்ட பரஞ்சோதி
நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாம்ஒழிந்து
சிவமான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ
—திருத்தெள்ளேணம், திருவாசகம்.

காருடைப் பொன்திகழ் மேனிக் கடிபொழில்
வாழுங்குயிலே
சீருடைச் செங்கம லத்தில் திகழுருவாகிய செல்வன்
பாரிடைப் பாதங்கள் காட்டிப் பாசம்
அறுத்தெனை யாண்ட
ஆருடை அம்பொனின் மேனி அமுதினை நீவரக் கூவாய்.
—குயிற்பத்து, திருவாசகம்.

மூஷிக வாகனம்

சவுபரி என்ற ஒரு முனிவரின் மனைவி மனோமயை யினைக் கிரவுஞ்சனென்னும் கந்தர்வன் பலாத்காரம் செய்த போது சவுபரியால் சபிக்கப்பட்டு மூஷிக மாயினன். பராசுவ முனிவராசிரமத்தில் வளர்ந்த விநாயகர், அவனை அடக்கி, வாகனமாக்கிக் கொண்டனர் என்பது புராணம்.

உட்கருத்து

'மூஷிக' என்றால் எலி. எலியின் செயல் மண்ணைத் தோண்டி வாழ்தலாகும். அதற்குப் பெரிய சத்துரு பாம்பு. வெளியே ஒரு பாம்பைக் கண்டுவிட்டால் கீச்கீச் என்று மற்றுள்ள எலிகட்கெல்லாம் எச்சரிக்கை கொடுத்து விடும். காம உணர்வு மண்ணைக் குடைந்து வாழும் எலி யாயிற்று. அங்கு விளங்குபவர் மூலாதார கணபதியாவர். அவரே மூஷிக வாகனத்திலேறி வந்தபோது சிரசில் நாதம் உதிப்பதாக உள்ளது. நாதம் உதித்தவர்க்கு குண்டலிப் பாம்பின் அபாயமில்லை.

"வாரணனார் கொலுவிருக்குமிடம்
வழிநீர் கோணம்"

—கோரக்கர் நூல்

இன்பால் மொழிக்கிள்ளாய் எங்கள் பெருந்துறைக்கோன்
முன்பால் முழங்கும் முரசியம்பாய்—அன்பால்
பிறவிப் பகைகலங்கப் பேரின்பத் தோங்கும்
பருமிக்க நாதப் பறை.

—திருத்தசாங்கம், திருவாசகம்.

கணேசர்

உத்தியான வனத்திலிருந்த ஆண்யானை பெண்யானைப் புணர்ச்சியைச் சிவசத்தி நோக்கக் கணேசர் உருவமாய் வெளிப்பட்டனர்.

விளக்கம்

சிரசுக்குமேல் விளங்கும் சாந்தியதீத கலேயில், நிவர்த்தி, பிரதிஷ்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை கலேகள் விந்து ரூபமாக (ஒளி) உள்ளன. இந்திரை, தீபிகை, ரோசிகை, மோசிகை, ஊர்த்துவகாமினி, வியாபினி, வியோமரூபினி, அநந்தை, அநாதை, அனுசிருதை ஆகியவை நாதமயமான சிவகலேகளாகும். இவைகளின் புணர்ச்சியே சாதாக்கிய தத்துவமாகும். இவைகளின் விரிவே கீழுள்ள புவனங்களாகும்.

எல்லாம் படைக்கும் வல்லபமும், அளிக்கும் வல்லபமும், அழிக்கும் வல்லபமும், அநுக்கிரகம் செய்யும் வல்லபமும் இம்மண்டலத்திலுள்ள மூர்த்திகளுக்குண்டு.

இந்த அவசரத்தில், அசலன் ஒருவனது தோளில் ஆரோகணித்து, கஜமுகாசூரனேத் தனது தந்தத்தால் சம்ஹரித்தருளினர் என்பது புராணம்.

அசலம் என்றால் சலிக்காததுபற்றி மலேக்குப் பெயராயிற்று. சலிக்கும் மனத்துடன் கூடிய தலேயைவிட்டுச் சலிக்காத மனமுடைய பரவிந்து பரநாத நிலேயிலிருந்து, யானே போன்ற ஜீவனின் காரிருள் படலத்தைப் பல்லின் செயலால் ஒழித்தருளினர் என்பது உட்பொருள்.

விபுதை என்னும் அசுரப் பெண் மரகத முனிவரைக் கூடிப் பெற்றவன் கஜமுக சூரனுவன். விபுதை என்றால் தத்துவம் என்று பொருள்படும். மரகதம் என்றால் பச்சை ஒளிக்குப் பெயர். மணிபூரகம் பச்சை ஒளியுடன் கூடிய தத்துவமாகும். இதன் சிறப்பியல்பே உலகாசையாகும். பிரதிஷ்டா கலேயின் வியாபகநிலே வித்தியாகலே கன்னத்தில் பல்லின் செயலால் சிறப்புற்றபோது, இந்த அசுரத்தன்மை கெட்டொழிந்தது.

மகோற்கட விநாயகர்

காசிப முனிவருடைய மனைவி அதிதிக்குக் குழந்தையாய் உருவெடுத்த திருவுருவுக்கு மகோற்கடர் என்ற திருநாமம். இதன் பொருள், 'மேலான மதயானை' என்பது ஆகும், இத்திருவுருவால் நரேந்திரன் ஆகிய ராக்ஷதர்கள் அழிக்கப்பட்டனர் என்பது புராணம்.

காசிபருக்கு திதி, அதிதி என்ற இரு மனைவிகள் உண்டு. திதியின் புதல்வர்கள் அசுரர்கள். அதிதியின் புதல்வர்கள் சுரர்கள். ஒளிமயமான தேவர்கள் சகாயத்திற்காக அசுரர்கள் அழிக்கப்பட்டனர் என்பதே இதன் உட்பொருள்.

வல்லப கணபதி

பிர்மனது மானச புத்திரர்களுள் மரீசி யொருவர். அவர் தனது தந்தையால் கணேசரே பரப்பிர்மம் மேலான மூர்த்தி என்று அறிவிக்கப்பட்டு, அரிய தவத்தினைச் செய்து, உமாதேவியை மகளாகவும், சிவசொரூபமாகிய கணபதியே மருமகனாகவும் வந்து மணம் செய்து கொள்ள வேண்டும் என்னும் வரத்தைப் பெற்றனர். அவ்வாறே சின்னாள் கழித்து மரீசிக்குமுன் ஒரு சங்குவடிவில் தோன்றி அதுவே ஒரு பெண்குழந்தை வடிவாயிற்று. அதைக் கொண்டுபோய்த் தன் மனைவியிடம் கொடுத்து 'வல்லபை' என்று பெயரிட்டு வளர்த்தனர்.

அவள் பிராயமடைந்து அரிய தவத்தைச் செய்தனள். கணேசருக்கும் வல்லபைக்கும் திருக்கல்யாணம் நடைபெற்றது. அச் சமயம் விஷ்ணுவும் இலக்குமியும் தமது புத்திரிகளாகிய மோதை, பிரமோதை, சுமகை, சுந்தரி, மனோரமை, மங்கலை, கேசினி, காந்தை, சாருகாசை, சுமத்திமை, நந்தினி, காமதை என்னும் பெயரினையுடைய பன்னிருவரையும் ஏற்றுக்கொள்ளும்படி வேண்டிக் கொண்

டனர். அவ்வாறே ஏற்றுக் கொண்டனர். அதுசமயம் விண்டுவுக்குக் கணேசர் விசுவரூப தரிசனத்தைக் காட்டி யருளி அநுக்கிரகித்து உபதேசம் செய்ததாகப் புராணம் கூறுகிறது. கணேசரால் விண்டுவுக்கு உபதேசம் செய்ய, அவர் வழியில் வியாசர் சூதமுனிவருக்குச் சொன்னபடி, ஞானம் மூலத்திலுள்ளபடி கீழே கொடுக்கப்படுகிறது. இவ்வாருகப் பார்க்கவ புராணம் முடிவுறுகிறது.

சதாசிவமும் மனோன்மணியும், கணேசரும் வல்லபை யும் ஒன்றேதான். இதுவே புராணத்தின் கருத்து.

வல்லபை என்ற சக்தி குண்டலினியாகும். மரீசி என் பவர் ஒளிமண்டலமாகும். அவரால் வளர்க்கப்பட்ட சக்தி பரப்பிர்ம சொரூபமான விநாயகருக்குக் கொடுக்கப் பட்டது. இதுகாறும் தேகதர்மம் நிலைபெறவிருந்த பன்னிரு நாடிகளையும், பரப்பிர்மத்தினிடம் விஷ்ணு ஒப்புக் கொடுத்துத் தனது திதி நிலையை முடிவுசெய்து, உபதேசமும் பெற்ருர் என்பது உட்கருத்தாகும்.

எல்லாப் புராணங்களும் வடமொழியிலிருந்தே தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. ஆரிய நாகரிகம் போல் சிந்து வெளியிலுள்ள திராவிடநாகரிகத்தின் சாயலாகவே மகாராஷ்டிர ராஜ்யத்தில் விநாயகருக்கு சிறப்பிடம் ஏற்பட்டது. தமிழ் நாட்டிலும் சங்ககாலம் முதல் இடம் பெற்றுவிட்டதாகக் கொள்ளலாம். தேவார காலத்தில், தமிழ் நாட்டில் சிறப்பாகக் கணபதி வழிபாடு நிலைபெற்றுவிட்டது என்பதைத் தேவாரப் பாசுரங்களா லறியலாகும்.

பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

—ஞானசம்பந்தர்


Acc NO: 1191

பலபல காமத்தராகிப் பதைத்தெழுவார் மனத்துள்ளே
கலமலக் கிட்டுத்திரியுங் கணபதியென் னும்களிறும்
வலமேந் திரண்டுசுடரும் வான்கயிலா யமலையும்
நலமார் கெடிலப்புனலும் உடையாரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவதுமில்லை.

—அப்பர்

நாரணன் ஞெடு நான்முகன் இந்திரன்
வாரணன் குமரன் வணங்குங் கழற்
பூரணன் திருப் பூவனூர் மேவிய
காரணன் னெனை யாளுடைக் காளையே. —அப்பர்

மண்ணுலகும் விண்ணுலகும் உம்மதே யாட்சி
மலையரையன் பொற்பாவை சிறுவனையுந் தேரேன்
எண்ணிலியுண் பெருவயிறன் வொன்ற றியான்
எம்பெருமா னிதுதகவோ வியம்பியருள் செய்யீர்
திண்ணெனவென் றுடல்விருத்தி தாரீரே யாகிற்
றிருமேனி வருந்தவே வளைக்கின்றே ஞனைக்
கண்ணரையன் கொடும்பாட னென்றுரைக்க வேண்டா
கடல்நாகைக் காரோண மேவி யிருந்தீரே.

—சுந்தரர்

சுலபத்தில் மக்கள் வேண்டுகோளுக்குச் செவிசாய்ப்ப வராகக் கொண்டே, விநாயகரை எல்லாக் கருமங்களிலும் வழிபட்டு வருகின்றனர். ஏட்டிலும் பிள்ளையார்சுழி, பாட்டிலும் பிள்ளையார் வணக்கம் முதலில். ஆகம பூஜை யிலும் முதல்வழிபாடு பிள்ளையாருக்கு. வைஷ்ணவரும்கூட தும்பிக்கை ஆழ்வார் என்றும், விஷ்வக்ஸேனர் என்றும் வேறு ஒரு பெயர்கொண்டு வழிபாடு செய்கின்றனர்.

கணபதி வழிபாடு புத்தர் கால முதலே மகாயான பௌத்தர்களால் கொண்டாடர்பட்டு வந்துள்ளதாகத் தெரிகிறது. 'கணபதிஹ்ருதயம்' என்ற மந்திரத்தை அவர் கள் ஜெபிக்கிறுர்கள். அவர்கள் வழியாக நேபாளம்,

திபேத், சீஞ, மங்கோலியா, ஜப்பான் முதலிய தேசங்களிலும் கணபதி வழிபாடு பரவியுள்ளது.

கோரக்கர், விநாயகர் உருவை கஜானனி என்று பெண் பாலாகக் குறிப்பிடுகிருர். திபேத்திலும் கஜானனி திருவுரு இருப்பதாகத் தெரிகிறது. சதாசிவத் திருமேனி, பராசக்தி திருமேனி, முருகன் திருவுரு, விஷ்ணு திருவுரு, சூரியனுரு எல்லாம் விநாயகரே என்று கணேசபுராணம் கூறுகின்றது.

கருதிலேந் தொழில்செய் காரணர்தமக்குங் காரணன்
மாயையிற் பலவாய்
விரிதரு முலகில் வியாபியாய் நின்றும் விசாரமாதிக
டனக்கில்லான்
றெரிசதா சிவனே திகழ்பரா சத்தி சிந்தூரமுகவன்
மால்கதிரோன்
றுரியவை வர்களாய்ப் பூசை கொள்கின்ரு
னுயிர்க்கெலாம் நாயக னவனே.

இந் நூல் சங்ககாலத்தில் வாழ்ந்த ஔவையாலோ, சுந்தரர் காலத்திருந்த ஒரு ஔவையாலோ பாடப்பட்ட 72 வரிகள் கொண்ட ஒரு சிறந்த தோத்திர நூல். இந்நூல் மிகச்சுருங்கிய நூலாயினும், வேதாகமங்களின் சாரமாய், மந்திர தந்திர யோக ஞான நுட்பங்களை நுட்பமாய் விளக்கியுள்ளது.

பரப்பிர்ம்மமே விநாயகர்

சிற்றறிவு படைத்துள்ள மனிதன், பேரறிவைத் தனது அறிவு கொண்டு அளவிட்டு அறுதியிடுவது மதியீனமாகும். ஐந்தொழில் புரிபவர்களும், அவ்வறிவில் சிறிது கொண்டே தொழில் புரிகின்றனர் என்ருல், நம்மால் மதிப்பரிதாகும் நிலேயாக அது உள்ளது.

அத்தகைய பரப்பிர்மம் ஒன்றே பிர்மா, விஷ்ணு, உருத்திரன், மகேசன் என்ற நான்கு உருவ மூர்த்தங்களிலும்

விந்து, நாதம், சிவம், சத்தி என்ற நான்கு அருவநிலையிலும் சதாசிவரின் அருஉருவ நிலையிலும், கலந்தும் வேருயும் உள்ளது. பரப்பிர்மமே அவர்களுக்குத் தக்க தேகத்தையும், கருவி கரணங்களையும் கொடுத்துப் படைத்தும், காத்தும், அழித்தும், மறைத்தும், அநுக்கிரகித்தும் அருளுகின்றது. அவர்கட்கே முதற்காரணமாயிருந்தும், அவர்களே அறியா வண்ணம் தனது சத்தியால் எங்கும் நிறைந்து நித்தப் பொருளாய் விளங்குவதெதுவோ, அதுவே பரப்பிரமமாகும்.

அக்கினியை அடுத்த இரும்பு சுடுகையை அடைவது போல், விநாயக உருவம் பரப்பிரமத்தைச் சார்ந்து ஒப்பற்ற பெயரைக் கொண்டு, பந்தமகன்ருேர் தெரிந்து கொள்ளத் தனது லீலா மாத்திரமாய் உள்ளது. மும்மல முடையோர் அத்தகைய பெருமையுடைய மூர்த்தியை அறியார்கள்.

அறியாமையாகிய இருட்டினுல் ஜனனமரணம் என்ற பிரவாகம் மாருதுள்ளது. விநாயகரின் அருள்வழி நின்று அவருடன் பொருந்தினுலல்லது, அவ்வறியாமை, ஒருக் காலும் நீங்காது.

காண்டல் கருதலுரை களினுற் கதுவுமேனே யளவையினுன்
மாண்ட மனமாதிகள் மூன்ருன் மறையோன்
திருமா லாதியரால்
வேண்டு மளவு முயன்ருலு மெய்மை சிறிது மறியலுருப்
பூண்ட கருணே விநாயகர்தம் பொருவில் ஞானம்
புகலக்கேள்.

உருவ மருவமு பயமென வுரைக்கப் படுபவர் கடமக்குங்
கருவி கரண முதற்பலவுங் கண்டு புரந்து துடைத்து மறைத்
தருளு முதலா யவருளமு மறியாப் பொருளாய்த்
தனதருளான்
மருவு மொளியா யெங்குநிறை வாய்மை யெதுவோ
வதுபிரமம்,

அந்தப் பிரம மெரியிரும்பை யடுத்தாங்
கறிவைத் தொடர்ந் துருக்கொண்
டிந்தவுலகில் விநாயகரென் றிணையில்
பெயர்தன் னுண்மையினைப்
பந்த மகன்றோர் தெரிந்துகொளப்
பரிந்து விளையாட் டயர்ந்திருந்து
முந்து மலத்தா னொருவருமம்
முதல்வ ரியற்கை யுணர்ந்தி லரால்.

இருளு மொளிரு விருண்மல மென்றுமறியா மையைக்
கெடுத்து
மருவி யிருத்தலாற் சனன மரணமான பிரவாக
மொருவர் தமக்கு மொழியாதவ் வொருவரான விநாயகனு
ரருளின் வழியே யுயர்போக மடையினலது முனிவரனே.
—விநாயக புராணம்

அவருடன் பொருந்தும் யோகம்

எவ்வுருவுமாக இல்லாத அகண்டமே பரப்பிரம மாகும். உருவமற்ற பிர்மம் உருவத்திற்கு வரும்போது, ஆண் உருவோ, பெண்உருவோ, அலிஉருவோ அமைந்து விளங்குகின்றது. சைவத்தில் அர்த்த நாரியாக அமைத்து விளக்கப்பட்டுள்ளது. திருவாசகத்தில் அர்த்தநாரி வடிவே கொடுக்கப்பட்டுள்ளது.

தோலுந் துகிலும் குழையுஞ் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையு முடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ.
—திருவாசகம்

சாக்தத்தில் காமேஸ்வரன் காமேஸ்வரியை மூலா தாரத்தில் விளக்கி, சகஸ்ரதள தியானத்தில், பிர்மா, விஷ்ணு, உருத்திரர், மகேஸ்வரர்களை கட்டில் கால்களாக்கி சதாசிவத்தை மேல்பலகையாக்கி, அதன்மேல் உள்ள

லலிதயை "பஞ்சப்ரேதா ஸஞ்ஸீஞ யை" என்று கூறி யுள்ளது.

வியக்தமற்ற நிலை. எவ்வுருவும் விளங்காத அறிவுநிலை யில், சைவம் காட்டிய சிவசொருபம்.

சிவமொடு சக்தி திகழ்நாதம் விந்து
தவமான ஐம்முகன் ஈசன் அரனும்
பவமுறு மாலும் பதுமத்தோன் ஈரு
நவமவை யாகி நடிப்பவன் தானே.

—திருமந்திரம், 1807

சாக்தத்தில்,

"பரதேவதையே! ஆதியந்தமற்ற பரம்பொருளே! உனது உடலினின்று தோன்றிய கிரணங்கள் போன்ற அணிமாதி சித்தி முதலிய தேவதைகளால் சூழப்பெற்ற வளாகச் சேவிக்கத்தக்கவளே! உன்னைத் தனது ஆத்மா என்று எவன் எப்போது சிந்திக்கின்றானோ அவனுக்கு, சிவசாயுஜ்யச் செல்வத்தையும் துரும்பெனக் கருதும் அவனுக்கு, ஊழித் தீயானது மங்களஹாரத்தி காட்டிப் பூஜிக்கும் முறையை அளிக்கிறது. இது ஆச்சரியமா?"

—ஆனந்த லஹ்ரி.

சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் முதலிய தன் மாத்திரைகளே (தேவியின் கையில் உள்ள) புஷ்ப பாணங்கள். மனமே கரும்பு. வில்லே ஆசை-பாசம் (கயிறு); துவேஷமே அங்குசம்.

அவ்யக்தம், மஹத், அகங்காரம் என்பவையே காமேஸ்வரி, வஜ்ரேஸ்வரி, பகமாலினி எனப்படும் உள் முக்கோண தேவதைகள். உபாதியற்ற ஞானமே (நாதவடி வான) காமேசுவரர். எப்பொழுதும் ஆனந்தபரிபூர்ணமாக இருக்கின்ற தனது ஆத்மசொரூபமே பரதேவதையாகும்.

—பாவனோபநிஷத்து

இருதயந் தன்னில் எழுந்த பிராணன்
கரசர ஞாதி கலக்கும் படியே
அரதன மன்றினின் மாணிக்கக் கூத்தன்
குரவனாய் எங்கணுங் கூத்துகந் தானே.

—திருமந்திரம், 2761

குருவுரு வன்றிக் குனிக்கும் உருவம்
அருவுரு வாவது அந்த அருவே
திரிபுரை யாகித் திகழ்தரு வாளும்
உருவரு வாகும் உமையவள் தானே.

—திருமந்திரம், 2762

திருவழி யாவது சிற்றம் பலத்தே
குருவடி வுள்ளாக் குனிக்கும் உருவே
உருவரு வாவது முற்றுணர்ந் தோர்க்கு
அருள்வழி யாவதும் அவ்வழி தானே.

—திருமந்திரம், 2763

நீடுஞ் சிரசிடைப் பன்னிரண் டங்குலம்
ஓடும் உயிரெழுந் தோங்கி யுதித்திட
நாடுமின் நாதாந்த நம்பெரு மான்உகந்
தாடும் இடந்திரு அம்பலத் தானே.

—திருமந்திரம், 2764

அறிவுருவான ஆத்மா அகண்டமானது, வியாபகமானது. அவித்தையின் காரணமாக 'தேகமே தான்' என்று மயக்கத்தில் உள்ளபோது, மயக்கம் தெளிந்துள்ள மண்டலத்திலுள்ளவர்களால் இவ்வுண்மை உணர்த்தப்பட வேண்டியுள்ளது. அகண்டமான பிர்மத்தையே சதா சிவனாகவும், சத்தியாகவும், குமரனாகவும், திருமாலாகவும், சூரியனாகவும், கணேசனாகவும் வழிபடப்படுகிறது என்று விளக்கப்பட்டுள்ளது.

அகண்ட பிர்மம் விளங்குவது சாந்தியதீத கலையில், அதாவது சிரசின் மேல் உள்ள ஆகாய அறிவு பதியும்

மூளையில் (Ethenical Brain), அதாவது சிரசின்மேல் உள்ள பன்னிரண்டு விரற்கடைப் பிரதேசமாகும். இது யோகியர்க்கே உரித்தான காரியமாகும். சாமானியர் வழிபட்டு, பத்தி நெறியினராக முன்மூளையில் உருவம் பதியும் நிலையில் தத்புருஷ முகத்தில், காயத்திரி முதலான மந்திரங்கள் கூறப்பட்டுள்ளன. அம்மந்திரங்கள், அவ்வுருவங்கள் முதலியவைகளைத் தியானிப்பதில் தூலத்தில் பதிவுற்று, பின்பு சூக்குமத்தில் மெத்தெனப் பதிவுற்று, ஞானபாதம் செல்ல உதவும் என்ற சூக்ஷ்மத்தில் அமைக்கப்பட்டுள்ளன.

"தத் புருஷாய வித்மஹே மஹா தேவாய
தீமஹி தந்நோ ருத்ர : ப்ரசோதயாத்."

(இ-ள்) அந்தப் பிரசித்த தத்புருஷனை அறிவோமாக. ருத்திரனே அதில் நம்மைத் தூண்டுதல் செய்தருள்வாராக.

"தத் புருஷாய வித்மஹே வக்ரதுண்டாய
தீ மஹி தந்நோ நந்தி : ப்ரசோதயாத்."

(இ-ள்) அந்தத் தத்புருஷனை அறிவோமாக. (வளைந்த நாசி படைத்த) வக்ரதுண்ட கணபதியைத் தியானிப்போமாக. தந்தம் படைத்த அவரே, இதில் நம்மைத் தூண்டுதல் செய்தருள்வாராக.

"தத் புருஷாய வித்மஹே சக்ர துண்டாய
தீ மஹி தந்நோ நந்தி : ப்ரசோதயாத்."

(இ-ள்) அந்தத் தத்புருஷனை அறிவோமாக. (சக்ர நாசி படைத்த) சக்ர துண்ட நந்திகேசுவரனைத் தியானிப்போமாக. நந்திகேசுவரனே அதில் நம்மைத் தூண்டுதல் செய்தருள்வாராக.

"தத் புருஷாய வித்மஹே மஹாஸேநாய
தீ மஹி தந்நோ ஷண்முக : ப்ரசோதயாத்."

(இ-ள்) அந்தத் தத்புருஷனை அறிவோமாக. மஹாஸேனரைத் தியானிப்போவாக. ஷண்முகராகிய அவரே அதில் நம்மைத் தூண்டுதல் செய்தருள்வாராக.

இவைகள் எல்லாம் முன்மூளையில் பிரசித்தமான உருவ வழிபாடென்பதை அறியவும்.

பின்மூளையும் முன்மூளையும் கலந்து தொழிற்பட்டே சிரசுக்குமேல் செல்லவேண்டும். அப்போது கற்பனை உருவம் கடந்துவிடும். கற்பனையற்றுக் காண்பதே உண்மை தேவதா சொரூபம். அது இவ்விதமிருக்கும் என்று நினைப்பது முன்மூளையின் செயல். அதனால் சாமானியர் வழிபாடு வேறு; உண்மையில் பொருந்துவது வேறு என்பதை அறியவும்.

**உண்மையான யோகியாகக் கணேசர் காட்டும் நெறி**

அந்த யோகம் நான்காகு மவைதா மகமே யகம்புறமே
வந்த புறமே புறப்புறமே வகுத்த விவை யெட்டாம்
பந்த மொடுமுத் தியினுறழப் பகர்து மிவற்றின்
முறையானே
சிந்தை மயக்க மறத்தவங்கள் செய்துமுடித்த மாதவனே.

உயிர்தான் மூல மலத்திெனாடு முற்றபந்த மகமாகுஞ்
செயிர்சேர் மாயை கன்மமொடு சேர்ந்த பந்தம்
மகப்புறமாம்
பயிலா நின்ற தனுகரணப் பந்தம் புறமாம் புறப்புறமா
மயர்சேர் புவன யோகத்தின் மருவா நின்ற பந்தமே.

(இ-ள்) அத்தகைய யோகம் நான்கு வகையாகும். அவை அகம், புறம் என்ற முறையில் அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என நான்காகும். இதன் காரணமாக எட்டுவகைப் பந்தங்கள் பொருந்துகின்றன. இவைகளை யொழித்து முத்தியை அடையும் முறையைக் கேட்பாயாக.

இம் முறைகளையறிந்து சிந்தை மயக்கம் விட்ட மாதவ, கேட்பாயாக.

உயிர், ஜீவ வளர்ச்சியின் விகாச முறையில் இயல்பாகப் பெற்றுள்ள ஆணவமலம் ஒன்று. இது ஆன்மாவிலேயே இயல்பிலே பொருந்தியுள்ளதை அறிந்து, அதைத் தெய்வப் பற்றுடையதாக்க வேண்டும். இதனல் ஆன்மாவின் இயல்பு மாறும். ஆன்மா மாயை கன்மத்துடன் பொருந்தி யுள்ளபோது மனம், புத்தி, அகங்காரம், சித்தம் நான்கும் பிருகிருதி மயமானவற்றில் பற்றுக்கொண்டு, நிலையில்லாத வற்றை நிலையாகவும், துன்பமானதை இன்பமாகவும் மயங்கி நிற்கும் நிலை, அகம் புறமாகும்.

அதன் காரியமாக அறிவுடைய தேகமும், அந்தக்கரண விருத்திகளும் அமைந்து, புவன போகங்களை அடையும் கருவியாயின, இவை புறமாயிற்று. மயக்கம் பொருந்திய புவன போகங்களின் கூட்டுறவு புறப்புறப் பந்தமாயிற்று.

மாணு பிராணு யாமப் பிரதி வாத மந்திர மாகிய சத்த
லோக யோகம்
பேண லுறுமுயர் யோகமன்று விண்ணிற் பிறங்கு
பலவுல கத்தும் பெட்ட போகங்
காணு பந்தமும் யோகமன்று திங்கட் கவுளகன்ற
கடவுண் முதற் கடவுளாதிப்
பூணுறு தெய்வத மும்யோக மன்று புகரில் பதமுத்
திகளும் யோக மன்று

ஆக்கன் முதலைந் தொழிலும் புரியாநின்ற
வதிகார பந்தமு நல்யோ கமன்று
போக்கற விவ்வா றுலகிற் பலவே ருகப்
புணர்தரு சம்பந் தமெலாம் யோகமன்று
பாக்கிய மாகிய தவஞ்செய் முனிவ ரேறே
பந்தமுறு சம்பந்த நான்குஞ் சொற்ரு
மேக்குயர் விண்ணவ ரானுமறிய வொண்ணு
வீடுறு சம்பந்தமொரு நான்குஞ் சொல்வாம்.

பக்குவம் மூல பாகஞ் சத்தி பதிதலிரு
வினையொப்புப் பயின்ற காலைத்
தொக்க மலபந்த மெலாங் கழித்த வான்மாச்
சுத்தமாய்ச் சுத்தா வத்தையினிற் சொன்ன
பத்துவித புண்ணியமும் புரிந்து மேலாம்
பரத்தினொடு மொன்ருகா திரண்டு மாகா
தத்துவித மாயேக மாகி யின்பாய்
பாவ மாநிலை யகச்சம் பந்தமாகும்.

(இ-ள்) அகச் சம்பந்தம்:

முற்பிறவியில் செய்த சரியா கிரியா பலத்தினுலே ஆன்மாவில் சத்தி பதிவுறும்.

அபுத்தி பூர்வ சிவ புண்ணியம்
புத்தி பூர்வ சிவ புண்ணியம்
உபாய சரியை
உபாய கிரியை
உபாய யோகம்
உபாய ஞானம்
உண்மைச் சரியை
உண்மைக் கிரியை
உண்மை யோகம்
உண்மை ஞானம்

எனப் பத்துவிதமாகச் சிவபுண்ணியம் உள்ளது. இவைகளில் முந்தின ஒன்பதும் மலநிலையாகும். இறுதியில் கூறிய ஞானமே அருணிலைக்கேதுவானது. அதன் விளைவாக தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆன்ம ரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவ தரிசனம், சிவயோகம், சிவபோகம் எனப் பத்துமாகும். அதனுல் இருவினையொப்பு அமையும்.

இருவினையொப்பு விளக்கம்

ஒருவனுக்கு பரஸ்திரீக (பிறமனை) மனமும் உரிமை யுள்ள மனைவியும் உள்ளதாகக் கொள்ளுங்கள். சில நாளனுபவத்திற்குப் பிறகு பரஸ்திரீக மனத்தால், பிற பெண் தொடர்பால் தீமையென்பதை உணர்ந்து, உரிமை யுடையவளை அணுகிப் பரஸ்திரீயை மறந்தான். மேலும் சிறிதுநாள் கழித்து, உரிமையுடையவளிடம் காணும் இன்பத்தையும் நாடாதவனாய், அதிலும் தோஷம் (குற்றம்) கண்டு, அதையும் விட்டுத் தனித்திருக்கலானான். இதை அதர்மத்தையும் தர்மத்தையும் கொண்டு பொருள் காணில் விளங்கும். அதர்மம் தீமைதருவதென்று தர்மத்தைச் சார்ந்தான். தர்மமும் அதற்குரிய போகத்தைக் கொடுத்து மகிழ்வித்தாலும், ஆத்மவின்பம் பெறாது, அதனால், இரும்பு விலங்கு பொன்விலங்காய் மாறியது போலாயிற்று.

உருவ வழிபாடு பதமுத்தி தரும். அருவ வழிபாடு ஆத்மஞானம் விளங்கி, ஆத்மாவின் தொடர்பான பந்த மெல்லாம் அகன்று, ஆத்மா சுத்தமாய் சுத்தாவத்தையில் மேலாம் பரப்பிர்மத்தில் ஒன்றாக ஆகிவிடாமலும், இரண்டாக இல்லாமலும், அதன் வியாபகத்தில் வியாப்பிய நிலையை அடைந்து, பரப்பிர்மத்தில் ஒன்றுபட்டு, இன்ப நிலையை அடைவது அகச் சம்பந்தம்.

'வியாபக வியாப்பிய' நியாயம் என்றால், பானை யிலுள்ள ஆகாயமும் வெளியிலுள்ள ஆகாயமும் ஒன்றா யினும், பானையில் அடைப்பால் இரண்டாகாயமும் பிரித்துக் காட்டப்படுகிறது. பானையின் உருவம் அழிந்ததும் அதன் தடை நீங்கியது. பானையின் ஆகாயம் உலகமாய் ஆய்விடாது, உலகவ்வளவு பரந்து அடைக்க முடியாததுபோல், ஜீவனின் பந்தகமன்று தடையற்ற முறையில், அதுவும் அகண்டத்தில் விளங்கக் கூடும்.

அருணிலை யேமுத்தி யெனவழுத்தி நிற்ற லகப்புறச்
சம்பந்த மருளுப சாரத்தை
மருளறக் கண்டிடல் புறச்சம் பந்தமந்த வாய்மை
யருட்டொழி லினைத்தான் செய்யவெண்ணல்
பொருவில் பரநா னென்றே மருளாற் காண்டல்.
புறப்புறச் சம்பந்தமிவை நான்கி னுள்ளூ
மிருளுறு மாதவ! வகச்சம்பந்த மொன்றே
யிணையிலுயர் யோகமென வியம்பு நூலே!

(இ-ள்) வழிபட்ட தேவதையின் அருள் பதிந்து விட்டதை அறிந்து அதில் மகிழ்வெய்துவது மருளாகும். இது அகப்புறச் சம்பந்தமாகும். ஏனெனில், தேவதையின் அருள் பதிவேயன்றி, அதுவாக அதனியல்பில் பொருந்த வில்லை. தனது உபசார வழிபாட்டை நடத்துவதில் தன்முனைப்பற்றுச் செய்வது புறச்சம்பந்தமாகும். அழிவற்ற தேவதையின் தொழிலைத்தான் செய்யவெண்ணுதல், ஒப்பற்ற பரம் நானென்றெண்ணுதல், மருளாற் காண்டல் புறப்புறச் சம்பந்தமாகும்.

சிரசில் பின்புறமான பிடரிப்பக்கத்தில் சத்தியோஜாத முகமும், இடப்பாகச் சிரசில் வாமதேவரும், முகத்துக்கு முன்பக்கம் தத்புருஷரும், வலப்பாகத்தில் அகோரரும், சிரசின் உச்சியில் ஈசானரும் இடம் பெறுவர். உச்சிப்பகுதி சிறப்புற்றபோதுதான் மனத்தின் சங்கற்பநிலை அழியும். மனத்தின் சங்கற்பமற்றால் உண்மையை உள்ளபடி காண முடியும். இந்தநிலை கைவரப்பெற்றால் சாந்தியதீதை கலை சிறப்புறும். இது அகண்ட பிரமநிலையாகும். இங்கு நிவர்த்தி, பிரதிஷ்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்ற சக்தி கலைகள் தேஜோரூபமாய் விளங்கும். இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, ஊர்த்துவ காமினி என்ற சிவகலைகள் நாதமாக விளங்கும். வியாபினி, வியோம ரூபிணி, அநந்தை, அநாதை, அநாசிரிதை என்பன

**சிவ கலையில் நாதாந்த கலைகளாக விளங்கும். உலகைப் படைக்கும் கருவாகிய இவைகளே என்றும் அழியாத நிலையாகும்.**

சிறந்த யோக நான்குள்ளுஞ்
சிறந்த யோகந் தனைப்பெற்றோர்
பிறந்து மிறந்தும் வருகின்ற
பெரிய சமுசா ரத்தடையார்
மறந்து நினைந்தும் வினையூட்டி
மாயா போகந் தனைநுகரார்
இறந்த வெனதியா னென்னு
மிருளிற் படார்க ளொருகாலும்.

உலகி லுறங்கி யுலகிறந்த
வொருவான் பொருளில் விழித்தந்த
வலகில் பரமா னந்தமய
மான அமுதப் பெருங்கடலிற்
கலவி முழுகித் திளைப்பார்கள்
கருணை நிறைந்த வுளத்தினராய்
நிலவு முலக மொருமூன்று
நெடிது பரிபா லனஞ்செய்வார்.

பிழைதீர் தாங்கள் பெறும்பேறு
பிறருக் குபதே சித்திடுவார்
விழையார் விழையப் படும்பொருளை
வெறார்கள் வெறுக்கப் படும்பொருளைத்
தழைகா மியமூன் றையுமில்லார்
தறுவி னடுக்கும் பீஜர்த்தம்
பழையோன் மணியம் புதுமணியம்
பற்றி யாங்குத் தானுகரார்

---

குறிப்பு : மணியம் - காரியம்

சகலமுஞ் சொரூப மாகையாற்
சகலபூதஞ் சொரூ பமேயாக
விகலறக் காண்பார் சிவன்முத்தர்களா
யிருப்பர் கஞலகிலுள் ளவர்க்குப்
புகலனுக் கிரகப் பொருட்டுல கத்திற்
புரையறச் சரிப்பர் காமாதி
திகழுமிந் திரியம் வென்றவ ரோடுஞ்
செம்பொனு மொப்பவே காண்பார்.

தக்க யோகத்தால் தன்னிடத்
தமர்சொரூ பத்தை
மிக்க பாவனைகள் கடந்தபா வனையால்
வேறறக் கண்டுகொண் டிருக்கும்
பொக்க மிலுளத்தை யுடைய ரொன்றுலும்
புரைபடார் வேறுதான் படார்கள்
பக்குறு பகையா லடிபடா ரிழுக்கப்படார்
படுசுத்த மிக்குடையோர்.

உள்ளவூழ் வினைக ளொழிதருங்காறு
முழிதரு முடலிடை வந்து
நள்ளிரு வினையின் பயங்களைத் தமக்கு
நல்லன தீயன புரிவோர்
கொள்ளவே தாங்கள் பிரம மொன்றனையே
குறிப்பறக் குறித்திருப் பார்க
டெள்ளிய விவரை யித்தகு யோகச்
செய்தியரே யறிவாரே.

அறிவித் தாலறியு மாருயிர்க் கனுதி
யாகிய வாணவ மருளாற்
பிறிவித் தானந்தம் பெருக்கி யொன்றுமிப்
பிரமமாகிய விநாயகனே

நிறுவித் தாரணி யீருன நாதாதி
நிலைபெறு தத்துவ மவற்ருன்
செறுவித் தாருயிர்க்குத் தனுகரணுதி
செயிரிலைந் தொழில்புரி கின்ருன்.

கருதிலைந் தொழில்செய் காரணர் தமக்குங்
காரணன் மாயையிற் பலவாய்
விரிதரு முலகில் வியாபியாய் நின்று
விசார மாதி கடனக் கில்லான்
றெரிசதா சிவனே திகள்பரா சத்தி சிந்துர
முகவன் மால் கதிரென்
றுரியவை வர்களாய்ப் பூசை கொள்கின்ரு
னுயிர்க் கெலாம் நாயக னவனே.

பேரிள வின்பம் பிணிவளர் மூப்புப்
பேதுறச் சாதலென் றுரைக்கு
மாறினு மோவா துயிர்களை யெல்லா
மனமவறச் செலுத்தி யுந்தனக்குக்
கூறிய விருப்பு வெறுப்பினை யில்லான்
கூடியெவ் வுயிரையு மயக்கும்
வீறிய மாயை மயக்கமு மில்லான்
விளங்கிய வனுதியே யமலன்.

படைகளாற் பிளக்கப் படானழலழற்
றப்படான் சலநனைந் திடப் படான்மிக்
கடைவளி யுணக்கப்படான் வெளிபோல
வகிலமு மிறப்பினு மிறவான்
நடையற வொன்ரு வின்னதென்றறியாத்
தத்துவன் றகு பிரமாண
மிடைவினு லறியா வப்பிரமேயன்
விளங்குமெய்ஞ் ஞானியர்க் கறிவோன்.

இத்தகு பெருமா னிணையடி நிழலி
    னிரண்டறக் கலந்து தானறவே
யுத்தம யோக மென்று முனுரைத்த
    யோகமே யோகமவ் வியோகச்
சித்த யோகிய ரேயோ கியரவர்க
    டெளிந்த வேதாந் தமே முதலா
மெத்து சாத்திரத் தினிரத மேநுகர்வார்
    விளங்கிய கேட்டலா திகளாம்.

பிறங்கு மெய்ஞ்ஞான யோகிய ராமிப்
    பெற்றிய ரென்று மெவ்விடத்து
முறங்கிய மகன்கைப் பொருளெனத் தத்த
    முறுவருணத் துயர்நிலையி
னறங்கிளர் தன்மந் தாங்களே யொழியி
    னல்லதை யகற்றுதல் செய்யார்
மறங்கிளர் மலங்கள் பிறர்க்கறச் செய்வார்
    வறிதும் யானெனப் புரியார்.

இதுதெரி யாதமூடர் கண்முனியே
    யிறப்பொடு பிறப்பினை விளைத்து
முதுதுயர் படுக்கும் கன்மமே விழைந்து
    முற்றுறப் புரிந்து விண்ணுதிக்
கதுவுபுன் போகஞ் சத்திய மென்று
    களித்தினி தார்ந்துணர் வழிந்து
பதியெனும் பிரமத் தியல்பறி யாது
    பவந்தொறும் பலமுறைச் சுழல்வார்.

ஆதலிற் பிரமத் தியல்பினை யறிய
    வாதரித்தவர் தமது
மேதகு மொழுக்கம் புரிந்திறை வனுக்கு
    வியத்தகக் கொடுத்திடி னதுதா

ஞேதகுஞ் சித்த சுத்தியைச் செய்தே
யுயர்ந்த ஞானத் தினுக்குரிய
வேதுவைத் தோற்றப் பிறப்பினைப் பின்னெய்
துரூரவர் கண் மாதவனே.

அந்த நீகரும மாற்றுக முனியே
யறைவரு ஞுச்சிர மத்தி
னந்த பிமானந் தனையொரு காலு
நண்ணு தலின்றி வையகத்தோர்
மந்த மாகியபுல் லறி வினைவிடுத்து
வழிநடந் துய்ந்திடும் பொருட்டே
யிந்த யோகத்தை யெய்தவல் லாதா
ரியற்றிடும் யோகமு மிசைப்பாம்.

அட்ட மூர்த்தமா யடங்கிய வகிலத்து மொன்ரு
யொட்டி நின்றருள் பிரமத்தை யுள்ளவா றுணர்ந்து
முட்டில் வையகத் துறுதொழின் மொழி பிரமத்திற்
பட்ட மெய்த்தொழி லெனவதைப் பார்த்தலும் யோகம்.

இந்த யோகத்தை யுடைய வனின்னறை சுகத்தில்
வந்த வோகையின் வெகுளியின் வறுமையின் வாழ்வி
னந்து வான்பொரு ளிழவினி னலிபிணி யடைவி
னந்த மேவரும் போகத்தி னடைவி லிறப்பில்,

சாரி லாபத் திலலா பத்தப சயத்திற்
சேரு மானத் திலமா னத்திற் றெருளின் வன்மருளில்
சூரும் யோகத் தின்வியோ கத்திற் கோதினிற் குணத்தி
லாரு மின்னன போல்வன வனையவற் றுள்ளும்,

பில்கு புத்திரர் சத்துரு மித்திரர் பந்து
புல்குறத் திகும்பசு மனைமுதற் பொருளி டத்தும்
பில்கு செங்கதிர்ச் சூரியன் சந்திரன் பெருநீர்
மல்கு செங்கனல் சிவன் மாயவன் பிரமன்,

இந்திரர் முதற்றே வர்களி யக்கர் கந்தருவர்
சிந்து மாநதி தீர்த்தங் கேத்திரஞ் செறிமனுட
ரிந்த விடத்தினுஞ் சமபுத் திவைத் தென்று
மந்த வத்துவைக் காண்குவ ரகத்தினும் புறத்தும்.

வருண மாச்சிர மத்தினை வழுவறப் புரிந்து
கருணை நாயக ளுகிய கணேசர் பாலந்தப்
பொருணி லாவுகன் மங்களைப் புகன்றினி
மருணிலா வுமஞ்ஞா னத்தின் வந்துரு ரவரே.

பாவ புண்ணியப் பயத்தினை பரமனுக் களித்ததி
தேவ னற்பதங் கருதிய செல்வரே பொறியின்
மேவ லுற்றுறு பந்தமாகிய வினை நீங்கித்
தாவ லின்பமா கியதனிப் பரத்தினைச் சார்வார்.

உள்ள மைம்பொறி வழிவிடை யத்திடை யுறுங்காற்
றெள்ளுகின் றநற்றெய் வவாக் கியமென ஞானத்
தெள்ள லின்றி நின்றிட வயிராக் கியமீண்டு
நள்ள வன்னது பிரமத்திற் றிறபுத்தி நன்றும்.

இட்ட மானவை போற்றனக் கயிதமே யீட்டி
நட்ட மேயுறு முலகத் துப்பொருள் களினசையை
விட்டு மேதகு பிரமத்தின் விரவியொன் றுகப்
பட்ட தாகிய புத்தியே திறபுத் திபார்க்கில்.

அனைய தாகலின் வீட்டினை யாதரித் தவர்கள்
வினையெலாந் தரும்விடை யத்தின் மேவிய பொறியை
யெனையுரு வகைமீட் டிரும்பிர மமெய்ஞ் ஞான்று
நினைதல் வேண்டுமெய்த் தவத்திடை நின்ற மாமுனியே,

மீட்டி லாதுதன் மனத்தினை விழைபொறி வழியே
யீட்ட மாகிய விடயத்தி னெய்துற விடுப்பி
னூட்டமா யதிலழுந் திடுநா டியங் கழுந்திற்
கோட்ட மேபுரி காமமாய்க் குரோத முமாமே.

அதுவுண் டாக வஞ்ஞா னமுண்டா மதனாலே
புதியதா கியபிர மத்திற் படர்நினை விறக்கு
மிதுவுண் டாகவே பிரமமெஞ் ஞான மின்றாகி
வதியஞ் ஞானியாய் முன்புபோற் பிறப்பிடை வருவான்.

அன்னதா கையான் மனம்பொறி வழிவிடா தடக்கி
யென்னை யாளுடைக் கணேசனா ரிருபதத் தென்றுந்
தன்னதார் வமெலாந் தரிப்பித்தலே வேண்டு
மின்னதாம் வழிபாட் டினுவிருஞ் சுகமாமே.

நதியெலாங் கடலடை வதுபோ லநா டோறும்
பதியின் மாட்டுறு காமங் களனைத்தையும் பாய்த்து
மதியதே திறபுத் தியானென தெனு மயக்க
விதியிலா தமெய்ஞ்ஞா னியே வீட்டினை யடைவான்.

பொருவின் மாதவ னேயிது வேபுணர் பிரம
சொரூப மாகிய புத்தியச் சொரூபமாய் நின்றோன்
கருமம் யாது மில்லா மலேயிருப் பன்மன் கரும
மருவிநின் றிடுஞ்சுதந் தரன்பிர மத்தை மருவான்.

மருவு மிந்திய வகுப்பினுன் மாதவ முனியே
கரும யோகத்தைக் கரிசறச் செய்ததன் பயனை
யொருவு மார்வத்தை யுடைய வனேபரன் கமலத்
துருவ மெல்லிலை நீரி னொட்டான் வினை யவனே,

அறிவ தாய் நமதறி வுறுபிர மத்தை யவாவி
னெறியினுற் பலகரு மமு நிகழ்பலன் குறியா
துறுதியாற் செயல்கரு மயோ கங்களில் வியோகம்
பிரிவில் சாங்கிய யோகத்தைக் காட்டுபு பெயரும்.

**இதுகாறும் யோகநெறி கூறப்பட்டது. இதற்கு ஆற்றலில்லாதவர்க்குப் புறப்பூசை கூறப்படுகிறது.**

**புறப்பூசை**

இருவே ருகு முபாசனை தானெழி
லார்புறப் பூசனை சாலக்
கருதா நிற்கு மகப்பூசை யெனவே
கரைந்த புறப் பூசை
மருவார் மலர்மஞ் சனந்தூப
மணித்தீபா தித்திர வியங்கொண்
டுருகா நின்றவன் பினெடு
மொருகோட் டிறையை யருச்சித்தல்.

துகடீ ரகப்பூ சனைபூ தசுத்தி
பிராணு கருடணஞ் செய்
திகலார் புத்தி வியாபார மிறுத்துத்
திரபத்தியிற் குருவின்
முகனுல் வருமந் திரங்கணித் துமுதல்
வனுக்குரு வந்தியா னித்து
மிகமா மறையின் ருேத்திரங்கள்
விளங்கி வணங்கி வழிபடலாம்.

புறப்பூ சனையத் திறப்பூசை
பொருவி லகப் பூசனை திறமாஞ்
சிறப்பார் முனியே யாதலினுற்
சிறந்த தாகு மகப்பூசை

மறப்பே நினைப்பே யிவை யொழிந்து
வாழவேண்டிற் காலமுத
லுறப்பூ தலத்திற் கருமங்களுள்
ஏற்றும் பயனைக் கருதாதே.

எச்ச மழலோ டதிமனு நெய்யீண்
டுமவுசு தியான முடற்
றுச்சி லறுந்தோத் திரநீதி
தொடங்கும் பத்தி யுபாசனைக
ணச்சுஞ் சகல திரவியங் கணவில்
காரணங் கள்சத சத்து
வெச்சென் மரண மமிர்த மிவை
யெல்லாம் விளையும் விநாயகனே.

அந்த யிறைவன் றிருவுரு
விலாற்றுஞ் சரப் பூசனையாக
வெந்தை வடிவுள் ளகத்தி ருத்தி
யியற்றட் சரப்பூ சனையாக
சிந்தை விழைவிற் புரிகின் றோன்
றிகழ் சண்டாள விழிகுலத்தில்
வந்த பிறப்புள் ளவனேனு
மறையோர் குலத்திலுயர்ந் தவனும்.

பிறப்பி னுயர்ந்த பிராமணனுப்
பெரிது மறைகள் பயின்றுணர்த்தும்
சிறப்ப விருந்தா னுயிடினும்
தேவதேவன் றிருவடியி
லிறப்ப வழிபா டியற்றுதா
னிழிசண்டாள குணத்தோடு
அறப்புத் தியையில் லாவிழினு
னுவனிது மெய்யே,

சேத்திர சேத்திரக் கினுனென் றிவற்றை யாய்ந்த
செம்மையனே விநாயக னுக்குரிய னுவன்
சேத்திர மாவது பூதமைந் துதன் மாத்திரை
யைந்து கன்மேந் திரியமைந்து
வாய்த்திடு ஞானேந் திரிய மைந்தாங் கார
மனம் புத்தி சேதன மென்றிவை யெண்மூன்று
மேத்திய சேத்திரக்ஞன் யிவற்றை யாய்ந்த
யியல்பின னுமென் றறியே.

(இ-ள்) பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், கந்தம், இரசம், ரூபம், ஸ்பரிசம், சப்தம், மூக்கு, நாக்கு, கண், தோல், செவி, கைகள், வாய், உபஸ்தம், பாதங்கள், பாயுரு இவைகளுடன் ஆங்காரம், மனம், புத்தி, அறிவு சேர்ந்து 24 ஆகும். இந்த ஆன்ம தத்துவங்கள் 24உம் க்ஷேத்திரம். இவற்றை அறிபவன் க்ஷேத்திரக்ஞன் ஆவான்.

காணுபத்தியம் சாங்கிய சாஸ்திர அடிப்படையில் எழுதப்பட்டுள்ளது. கணேச புராணமும் வியாசர்கூற சூத முனிவர் கேட்டு நைமிசாரண்ய வாசிகளுக்குக் கூறியதாகக் கூறப்படுகிறது. சாங்கிய சாஸ்திரத்திற்குரிய முதல்வர் கபிலர் ஆவர். பகவத்கீதையில் ''சித்தர்களில் கபிலர் யான்'' என்று கூறப்பட்டுள்ளது. யோகம் காணுவதற்கு உரிமையாகிய கடவுள் நிலையையும் காட்சியில் விளங்கும் மனிதனுக்குத் தொடர்பு கொள்ளும் யுக்தியையும் யோகநூல் ஒருவகையாக விளக்கும். சமயநூல் ஒருவகையாக விளக்கும். யோக நூலில் ரகசியமாகப் பாதுகாக்கப்படும் விஷயங்கள் குறைவு; கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கங்களும் சாதனையும் சிறப்பிடம் பெறும்.

இந்த விநாயகரகவல் ஒரு யோகநூல் என்பதை மக்கள் அறிந்து கொள்ளவில்லை. காணும் வழியில் தூலமும், சங்கேதக்குறியால் காணுத சூக்குமமும்

இணைக்கப்பட்டுள்ளன. அவற்றை வரிவரியாகச் சிந்தித்து நுட்பத்தை உணரவேண்டும். அம்முறையில் இவ்விநாயக ரகவலுக்குத் தூல சூக்கும விளக்கம் கொடுப்பதை வாசிப் போர், அவரவர் சிந்தனையால் தெளிவுபெற இந்த விளக்கம் உதவும். நான் கூறுவதை நம்பும்படி கூறவில்லை. சிந்தனையைப் பெருக்கிக் கண்டு உண்டு உண்மை உணரவே பரம ரகசியம் என்று பாதுகாக்கப்பட்டவை இதில் விளக்கிக் காட்டப்படுவதைக் கண்டு கொள்ளலாம்.

உ

# கணபதி துணை

## நிலைமண்டில ஆசிரியப்பா

## (1—7)

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலஇசை பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகி லாடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ கெறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்குசிந் தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்—

உரை:

சந்தனக் கலவை பூசப்பெற்ற செந்தாமரை மலர் போன்ற திருவடிகளில் உள்ள சிலம்பு பலவிதமான ஓசைகளை உண்டாக்க, பொன்னால் செய்யப்பட்ட இடைக் கொடியும், பூவேலை செய்யப்பட்ட மேலாடையும், அழகு மேன்மேலும் அதிகரித்து ஒளிவீசவும், பெட்டகம் போன்ற வயிறும், பெரிய எல்லையாகவுடைய கொம்பும், யானை முகமும், அம்முகத்தில் பிரகாசிக்கின்ற சிவந்த திலகமும், நான்கு திருக்கைகளும் துதிக்கையும் ஆகிய ஐந்து திருக்கைகளும், மேல் இரண்டு கைகளில் வலப்புறத்தில்

யானையை ஓட்டும் தோட்டியும், இடப்புறத்தில் கட்டுக் கயிறும்—

விளக்கம்:

மனத்தையுடையவன் மனிதன். மனிதன் எதை யாவது எண்ணிக் கொண்டிருப்பதால்; எண்ணங்களின் கருத்து பொருளாகவும் செயலாகவும் தொழிற்படுகின்றன. இதைச் சமயவாதிகள் அத்துவா என்றனர். அத்துவா என்ருல் வழி என்று பொருள்.

அது மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணுத்வா, புவனுத்வா, கலாத்துவா, தத்துவாத்துவா என ஆருகும். சைவ சாத்திரத்தில் இந்த ஆறும் சத்தியோசாதர், வாமதேவர், தத்புருஷர், அகோரர், ஈசானர் என்று ஐந்து முகமுடைய சதாசிவரைத் தலைவராகக்கொண்டு விளங்கு கின்றன. ஈசானர் என்பவர், சிரசில் உச்சிக்குமேல் முகங்கொண்டு விளங்குபவர். முகத்தின் முன்புறம் விளங்குவது தத்புருஷ முகமாகும். பின்புறம் மூளையில் மேற்குப்பக்கம் முகம்கொண்டு விளங்குபவர் சத்தியோ ஜாதராவர்.

மனிதன், மெய் வாய் கண் மூக்கு செவிகள் என்ற பொறிகளால் கிரகிக்கும் அறிவு நிலையும், அவை பதியு மிடமுமாக அறிவு நிலைகள் இரண்டாகும். அறியும் நிலையிலேயே பதியும் நிலையில்லை. ஐந்து வகை அறிவை ஒருசேர அறியுமிடம் மூளையிலும் உள்ளது. மூளையைக் கடந்து மூளைக்கு மேலே உள்ள பன்னிரண்டு விரற்கடைப் பிரதேசத்தில் ஆகாயக் கூருகவும் உள்ளது. மேலே உள்ள பகுதியே உள்ளுதற்குக் காரணமாக உள்ளபடியால், அப்பகுதிக்கு உள்ளம் என்று பேரிட்டனர். தேகத்தைச் சூழத் தொம்பைக் கூடுபோல அதன் வியாபகம் உள்ளது. தேகத்தினுள்ளும் அதன் ஆளுகை உள்ளது.

மனத்தின் சிறப்பே மனிதனின் சிறப்பாக உள்ளது. மனத்தின் ஆற்றலால் மூளை இயங்குகின்றது. அதற்கேற்பத் தேகம் இயங்குகின்றது. தேக இயக்கத்தால் தேகத்தை உடைய ஆத்மா அறிவைப் பெறுகிறது. தேகமன்னியில் சிந்தனையாலும் அறிவைப் பெறுகிறது. இவைகள் சமான்னியர் அறிவுக்கு வியக்தமாகப் புலப்படாவிடினும், தத்துவதர்சனிகள் அவற்றைப் பாகுபாடு செய்து, அவைகளின் இயக்கநிலைகளையும் கண்டு, சாமானியர்க்கு ஒரு தூலவடிவில் ஓர் உருவை அமைத்து, அதில் நினைவு பதிந்து நம்பிக்கை வளர்ந்து உறுதிப்பட்டு, ஆர்வமுற்றுப் பக்குவம் வந்த பிறகு, உண்மையை விளக்கச் சங்கேதம் கலந்த ஒரு உருவைப் படைத்து, நம்பிக்கை வளரப் புராணமும் அமைத்தனர்.

சப்தத்தின் ஆற்றலால் மூளையின் சில நுண்பகுதிகள் செயல்பட மந்திரங்களை அமைத்தனர். சூக்கும அசைவு தூல உடலில் செயல்களைத் தூண்டவும் அடக்கவும் செய்யும் என்ற இருநிலைகளையும் கண்டனர். இவைகளுக்கு ஒவ்வொரு வகையாகப் பெயரைக் கொடுத்து, அவைகளின் உண்மையையும் சங்கேதக் குறிப்பால் விளக்கினர். ஒவ்வொரு சமயத்திலும் அது உள்ளது. அந்தந்தச் சமயத்தில் வாழ்ந்து அநுபவம் பெற்ற குருவிடம், சீடன் வணங்கிக் கேட்டு அநுபவம் பெறவேண்டும்.

வெளியே காண்பது தூலமான சொற்பொருள். ஒருவகையான ஆத்மாவின் அநுபவத்திற்கும் அழைத்துச் செல்லாது. சிரசின்மேல் உடலின் இயக்கநிலையின் சூக்ஷமத்தை ஞானிகள் அறிந்துள்ளனர். ஆகாயத் தன்மையின் நுண்மையை இன்றும் விஞ்ஞான உலகம் பூரணமாக அறியாதது ஒரு குறைபாடே, ஞானிகள் கண்ட உண்மை போற்றப் படாமல் போனதற்குக் காரணமாகும். அத்தகைய ஆகாயக் கூற்றிலே நின்றுதான்

இறைவன் ஐந்தொழில் புரிகிருன். ஆத்மா அதற்கு உட்பட வேண்டியுள்ளது.

பெருநில மாயண்ட மாயண்டத் தப்பால்
குருநில மாய்நின்ற கொள்கையன் ஈசன்
பெருநில மாய்நின்று தாங்கிய தாளோன்
அருநிலை யாய்நின்ற ஆதிப் பிரானே.

—திருமந்திரம், 2805

(இ - ள்) தேகத்தைவிடப் பெரியது தேகத்தைச் சூழ உள்ள அண்டாகாயம். அதைவிடப் பெரிய பரப்பில் அண்டத்தைக் கடந்து இறைவன் உள்ளான். இறைவன் உள்ளநிலை ஒளிநிலை யாகும். அவன், ஒளி நிலையிலிருந்து கொண்டே இருள்நிலையிலுள்ள சீவகோடிகளைத் தாங்கிக் கொண்டு, அருவத்தில் நிலைபெற்றுள்ளான்.

உள்ளத்து ளோமென ஈசன் ஒருவனை
உள்ளத்து ளேயங்கி யாய ஒருவனை
உள்ளத்து ளேநீதி யாய ஒருவனை
உள்ளத்து ளேயுடல் ஆகாய மாமே.

—திருமந்திரம், 2904

(இ - ள்) உள்ளுதலைச் செய்யும் மனமண்டலத்தில் ஓம் என்ற இயற்கையொலியால் அழைக்கப்படும் ஒருவனே உடலின் அக்கினியாயும், வாக்கின் அக்கினியாயும் விளங்குபவன். அவன் இயற்கையின் நியதியில் உள்ளவன். இந்த உண்மையை அறிந்தால் காணப்படும் தூல உடல் ஆகாயமயமாய் விடும்.

யானை சில சிறப்பியல்பைக்கொண்டு மற்றைய ஜந்துக்களுக்கு வேருய் விளங்குகின்றது. பூமியில் வாழும் பிராணிகளில் யானையே மிகப்பெரியது. கரியநிறமுடையது. பெரிய காதுகளையுடையது. உருவத்திற்கு ஏற்ப அமையாத சிறிய கண்களையுடையது. தனது மூக்கையே தனக்குக் கையாக உடையது. கோபம் வராதபோது மிகச்சாந்த

மாய் விளங்கும். கோபம் வந்துவிட்டால், தனது பாகனையேகூடக் கொன்றுவிடும். துதிக்கையால் மிகப் பெரிய பாரத்தைச் சுமக்கும்; தந்தத்தால் மரங்களைக்கூடப் பேர்த்துச் சாய்த்து விடும்.

இந்தக் கருத்துக்களைக் கொண்டு தேகத்தைச் சூழ உள்ள மனமண்டலத்திற்குப் 'பிரணவம்' என்றும், அதன் அதிபர் 'கணபதி' என்றும் பெயர் வைத்துள்ளனர். தேகத்தின் செயலுக்குக் காரணமாகப் பலவகையான தேவர் அசுரர் இருப்பதாகச் சமயவாதிகள் கண்டனர். அவர்கள் இருளிலும் ஒளியிலும் செயல்படுபவர்கள்.

"மூவரும் முப்பத்து மூவரும் மற்றொழிந்த
தேவருங் காணுச் சிவபெருமான்........."

—திருவெண்பா, திருவாசகம்.

சாதாக்கியம் விந்துநாதம் ஒழிந்த முப்பத்து மூன்று தத்துவங்களும், அவற்றை இயக்கும் பிர்மா, விஷ்ணு, உருத்திரர்களும், மற்றைத் தேவர்களும் காணமுடியா தவன் சிவபெருமான். இதுவே பரப்பிரமமான கணபதியின் நிலையுமாகும்.

சாதா என்ற கலை, சிரசின்மேல் ஊர்த்துவ முகம் உடைய ஈசானரது நிலையாகும்.

"மின்னல்கொடி போன்ற சூக்ஷமமான தேஜோரூபம் உடையதும், சூரியன், சந்திரன், அக்கினி, ஆகிய வடிவங் களில் பிரகாசிப்பதும், ஆறு ஆதார சக்கரங்களுக்கும் மேலே தாமரைக்காடு போன்ற ஸஹஸ்ரார சக்கரத்தில் நிலை பெறுவதுமான, உன்னுடைய சாதா எனப்படும் கலையை, காமம் முதலிய அழுக்குகளும், அவித்தை முதலிய மயக்கங்களும் நீங்கிய மனத்தினால், மகான்கள் கண்டு அநுபவிப்பவர்களாய், அலை அலையாக வரும் அளவு கடந்த ஆனந்தத்தை அடைகிறார்கள்." —ஆனந்த லஹரி,

இந்தச் சாதா கலையே தேகத்திற்கும் தேகங்கடந்த நிலைக்கும் காரணமானபடியால், இதைச் சாதாக்கியம் என்ற தத்துவப் பெயர் கொடுத்து, சதாசிவரூபம் என்ற நூல் விளங்கிற்று. இது வாதுளாகமப் பகுதியாகும்.

'ஆக்கியம்' என்றால் எழுவாய், நாமம், கர்த்தா, மூலம் என்ற பொருளைகளையுடையது.

இதை ஐந்து பிரிவாகப் பிரித்து விளக்கியுள்ளார்கள்- அவையாவன,

1. சிவ சாதாக்கியம்
2. அமூர்த்தி சாதாக்கியம்
3. மூர்த்தி சாதாக்கியம்
4. கர்த்தரு சாதாக்கியம்
5. கர்ம சாதாக்கியம்.

"சிவசா தாக்கியம் என்ற திருப்பெயர்
உவமை யில்சுத்த மாயையில் உண்டாய்
அதிசூக் குமமாய் அளவறும் ஒளியாய்
விதமிகும் அபர மின்னின் விளங்கி
விதமுற எங்கும் வியாபித் திடுமே
சாரும் அமூர்த்தி சாதாக் கியமென்
றோதிய அரூபை ஆதலிற் பெயராய்க்
கலைகடந் தொருலிங் காதா ரமதாய்த்
தொலைவில் கோடி சூரியர் ஒளியாய்த்
தூண மதாகிச் சோதி யினூடே
காணரும் அந்தர்க் கத மூர்த்தியாய்
மேலைத் திவ்விய லிங்கம் எனவும்
மூலத் தம்பம் எனவும் மொழிந்தனர்."

—சதாசிவரூபம்

உலகில் எங்கும் வியாபகமான ஒரு பேர் அறிவையும் பேராற்றலையும் சிவசாதாக்கியம் என்ற பேரால் குறித்தனர்,

அது மின்னொளியாய் விரைந்து எங்கும் செல்லும் ஆற்ற லுடையது. அதைப் பொருட்பெயரால் ஐந்து ஆகாயப் பிரிவாய் விளக்கினர். இதை Primordiel Energy என்றே கூறலாம்.

அண்டங்கள் ஓரேழும் அம்பொற் பதியாகப்
பண்டையா காசங்கள் ஐந்தும் பதியாகத்
தெண்டினிற் சத்தி திருஅம் பலமாகக்
கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே.

—திருமந்திரம், 2749

(இ - ள்) ஏழு உலகங்கள் என்பவை உடலிலுள்ள மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம் விசுத்தி, ஆக்ஞை, சகஸ்ரதளம் என்பவைகளாகும். இவைகள் தொழிற்படப் பழமையில் உள்ள சித்தாகாசம், சூரியாகாசம், குணரகித ஆகாசம், குணசகித ஆகாசம், பூதாகாசம் என்பவைகளே இடமாகக் கொண்டு, ஆகாய மயமான சத்தியை இடமாகக் கொண்டு, பரஞ்சோதி பஞ்ச கிருத்தியமான செயலை விருப்பதுடன் செய்தனன்.

தெண்டித்தல் - ஒறுத்தல், சிட்சித்தல், பிரயாசைப் படல், முயற்சி எடுத்துக் கொள்ளல்.

சித்தாகாயம் -அறிவு விளங்கும் ஆகாயம்.

சூரியாகாயம் -ஒளி விளங்கும் ஆகாயம்.

குணரகித ஆகாயம் - சத்துவ, ராஜஸ, தாமத குணங் கள் விளக்கம் பெறாத ஆகாயம்.

குணசகித ஆகாயம் - முக்குணங்கள் விளக்கமான ஆகாயம்.

பூதாகாயம்-பஞ்சபூத மயமான ஆகாயம்.

சமஷ்டியில் விளங்கும் ஈசுவரர்கள், வியஷ்டியில் அவரவர் தொழிற்படக்கூடிய ஆகாயத்தில், மனிதனிடம்

விளங்குகின்றனர். அம்முறையில், நிஷ்களமான பரப்பிரம்மம் குணசகித ஆகாயத்தில் விளங்கும்போது, சத்துவகுண மூர்த்தியாகவோ, ரஜோகுணமூர்த்தியாகவோ, தாமத குண மூர்த்தியாகவோ, வியஷ்டியில் விளங்குகின்ருர்.

பிர்மத்திற்கும் ஆன்மாவுக்கும் பால் வேற்றுமையில்லை என்பதை அறிந்துகொள்ள வேண்டும். ஒரே பிர்மவஸ்து ஆண்வடிவிலோ, பெண்வடிவிலோ, அலிவடிவிலோ வெளிப்படலாம்.

இச்சைதான் இதுவொப்ப துண்டோ கேட்கின்
மிகுகாதல் அடியார்தம் அடியனுக்கி
அச்சந்தீர்த் தாட்கொண்டான் அமுதம்ஊறி
அகம் நெகவே புகுந்தாண்டான் அன்புகூர
அச்சன்ஆண் பெண்ணலிஆ காசமாகி
ஆரழலாய் அந்தமாய் அப்பால் நின்ற
செச்சைமா மலர்புரையும் மேனி யெங்கள்
சிவபெருமான் எம்பெருமான் தேவர் கோவே.

—திருச்சதகம், திருவாசகம்

செச்சை - சிவப்பு, வீட்டின் மேற்பக்கம், செங்காடு- சிவந்தநிலம், வெட்சி மரம்.

மனிதன் எண்ணற்ற பிறவிகளில் ஆண், பெண், அலி யாக மாறிமாறிப் பிறந்துள்ளான். இறைவன் ஆண்பெண் சமத்துவமானவனுதல்பற்றி ஆணுகவோ பெண்ணுகவோ தனது சங்கற்பத்தினுல் வெளிப்படலாம். இந்த தத்துவ அடிப்படையில், கடவுள் நம்பிக்கை கொண்ட மதங்கள் பல உட்கருத்தை வைத்து பல மூர்த்தங்களைச் சிருஷ்டித்து அவரவர் கருத்தையும் அதன் வழி விளக்கின. அம்முறை யில் விளக்குகின்றவற்றுள் விநாயக புராணம் ஒன்ருகும்

எவ்வுருவும் சத்திதான். அதில் விளங்கும் அறிவே சிவமாகும். சத்தியின் பிரதாபத்திற்கேற்ப உள்ளீடான அறிவு பிரகாசிக்கும்.

பரமாண்டத் தூடே பராசத்தி பாதம்
பரமாண்டத் தூடே படரொளி ஈசன்
பரமாண்டத் தூடே படர்தரு நாதம்
பரமாண்டத் தூடே பரன்நட மாடுமே.

—திருமந்திரம், 2734

சத்தி வடிவு சகல ஆனந்தமும்
ஒத்த ஆனந்தம் உமையவள் மேனியாஞ்
சத்தி வடிவு சகளத் தெழுந்திரண்
டொத்த ஆனந்தம் ஒருநட மாமே.

—திருமந்திரம், 2769

இடங்கொண்ட சத்தியும் எந்தை பிரானும்
நடங்கொண்டு நின்றமை நானும் அறிந்தேன்
படங்கொடு நின்றஇப் பல்லுயிர்க் கெல்லாம்
அடங்கலுந் தாமாய்நின் றுடுகின் றுரே.

—திருமந்திரம், 2768•

நிஷ்கள சிவசாதாக்கியம் ஆன்மநிலையில் சிருஷ்டிக்கு வரும்போது, அமூர்த்தி சாதாக்கிய தத்துவத்தில் ஒரு ஸ்பந்தத்தை (அசைவை) உண்டாக்கி, நாததத்துவத்தையும் விந்துதத்துவத்தையும் உண்டாக்குகிறது. பிறகு பஞ்ச கர்த்தர்களின் ஆளுகையினுள் வந்துவிடுகிறது. மூர்த்தி சாதாக்கியமாய் உருவமாகிறது. அது பெண்ணுருவாகவோ, ஆண் உருவமாகவோ, அலிஉருவமாகவோ இருக்கலாம். அம் முறையில் கணேசரைச் சத்தியாக உருவகம் செய்துள்ள உருவமும் உண்டு; ஆணாக உருவகம் படைத்த உருவமும் உண்டு.

சதாநந் திபார்வதி ஓம்சதுட் கோணத்தாய்
சகலஉயிர் நிறைந்தோங்கும் சாமளரூபி
இதாஇதங் களிலிலங் கிவள ரிதிகாசஞ்
சொல்இக பரத்தி லூடா டுஞ்சூ லிவீரி

பதாதி பதபாஸ் கரிபஞ் சாக்ஷர தேவி
பரிபுரை பங்கஜ வேணி கபாலி மாலி
கதா கிரண கஜானனி நற்சந் திரரேகை
கருத்துட னேகழற உமைஅருட் டான்காப்பே.
—கோரக்கர், சந்திரரேகை.

2. சீதக் களபச் செந்தாமரைப் பூம்

குளிர்ச்சியும் வாசனையும் உடைய சந்தனம் பூசிய செந்தாமரை போன்ற அழதிய திருவடிகளில் விளங்கும் சிலம்புகள் பல இனிய ஒலிகளை எழுப்ப......

வாசனையுடன் கூடிய சந்தனம் பிருதிவி தத்துவத்தைக் குறிக்கும். பிருதிவி தானமாகிய மூலாதாரத்தில், பிருதிவி வாசனையால் மறைக்கப்பட்டிருக்கும் காமகலை (காமா-சூரியன், கலை- சந்திரன்), தெளிவாக விளங்கித் தோன்றுத மூலாதார கணபதியாக விளங்குகிறார். அவர் அமூர்த்தி சாதாக்கிய தத்துவத்தில் இடம்பெற்றபோது, மறைப்பு நீங்கிச் சிரசில் நாதகோஷம் பலவாறுகத் தொனிக்கும்.

பின்வரும் 63, 64, 65 வரிகளில்,

அல்லல் களைந்தே அருள்வழி காட்டி
சத்தத் தினுள்ளே சதாசிவங் காட்டி
சித்தத் தினுள்ளே சிவலிங்கம் காட்டி

என்று கூறப்பட்டுள்ளது.

சதாசிவ நிலையைச் சத்தத்தினுல் அடையும் ஒருநெறி, ஒளியினுல் அடையும் ஒரு நெறி என்று இரு நெறிகள் உண்டு.

சத்தத்தால் அடையும் நெறியை, "சுரராஜகுமார வைரிரந்திரத் தியானம்" என்பர். இதன் பொருள்,

சுரராஜன் - இந்திரன்,
அவன் குமாரன் - அருச்சுனன்,
அவன் வைரி - கர்ணன்,

ரந்திரம் - துளை.

காதுகளை அடைத்து, அங்கு அந்நரம்புகளில் ஓசையெழச் செய்து பழகினல், சில மாதங்களின் சாதனத்தால் நினைவு பதிந்த உடனே, காதுகளின் மேல்பாகத்தில் நாதத் தொனி இயல்பாய் வந்து விடும். இதைத் தியானிப்பதில் மனம் அடங்கிவிடும்.

காருடைப் பொன்திகழ் மேனிக்
 கடிபொழில் வாழும் குயிலே
சீருடைச் செங்கம லத்தில்
 திகழுருவாகிய செல்வன்
பாரிடைப் பாதங்கள் காட்டிப்
 பாசம் அறுத்தெனை யாண்ட
ஆருடை அம்பொனின் மேனி
 அமுதினை நீவரக் கூவாய் —திருவாசகம்.

மூலாதாரச் சக்கரம் நான்கு இதழ்களுடன் கூடியது. சிவப்பு நிறமும் கிச்சிலி நிறமும் கொண்டது. சுவாதிஷ்டானம் சிவந்த ஆறு இதழ்களுடன் கூடியது. இவை இரண்டின் காரியமே விந்து நீக்கம் அமைவது.

மானேர் நோக்கி மணவாளா
 மன்னே நின்சீர் மறப்பித்திவ்
வூனே புகஎன் தனைதூக்கி
 உழலப் பண்ணு வித்திட்டாய்
ஆனல் அடியேன் அறியாமை
 அறிந்து நீயே அருள்செய்து
கோனே கூவிக் கொள்ளுநாள்
 என்றென் றுன்னைக் கூறுவதே. —திருவாசகம்.

இம் முறையைச் சீக்கியர்களும், தயாள்பாக்கிலுள்ள ராதாசாமி சத்சங்கமும், மகமதியர்களும் கையாள் கின்றனர். இதன் வெளிக்கிரியை கண்ணின் பொட்டுகளில் குட்டிக் கொள்வதிலும், காதுகளைப் பிடித்துத் தோப்புக் கரணம் போடுவதிலும் காட்டியுள்ளனர்.

மற்ளுெரு நெறி :

கண்களைக் குரு காட்டும் வழியில் சேர்ப்பதில் சிரசின் முன்புறம் ஒளிகண்டு உணர்வும் காணும். இது ஒளி நெறி. இது தமிழ் நாட்டில் நீண்டகாலமாகச் சித்தர்களால் கையாளப்பட்ட நெறியாகும்.

நாட்டம் இரண்டும் அறிவுடன் படுத்தற்குக்
கூட்டி உரைக்கும் குறிப்புரை ஆகும்.
—தொல்காப்பியம், 1042

சிந்தனைநின் தனக்காக்கி நாயினேன்தன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கிஐம் புலன்க ளார
வந்தனைஆட் கொண்டுள்ளே புகுந்தவிச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்
தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே.
—திருவாசகம்.

சைவ சமயத்தை ஒளிநெறி என்று கூறப்பட்டதே இதனுல் தான்.

எளிய லாதுசெய் வாரெங்கள் ஈசனை
ஒளியை யுன்னி யுருகு மனத்தராய்த்
தெளிய வோதிச் சிவாய நமவென்னுங்
குளிகை யிட்டுப்பொன் ளுக்குவேன் கூட்டையே.
—திருமந்திரம், 2709

இவ்விரண்டில் எவ்வழி பற்றினும் மற்ருென்று தொடர்ந்து பின்னர் பொருந்தும். ஒளிநெறியிலும் நாதம் பொருந்தும், நாதநெறியிலும் ஒளிபொருந்தும். யானேக்கு சிறு சத்தத்தையும் கேட்கும் ஆற்றலுண்டு.

ஒலியோ, ஒளியோ இயல்பாய் பொருந்திவிடின் அதற்கு பரையோகம் என்று பெயர்.

இதுஞான தரிசனமாம் இதனுள் அடங்கி
யாதுமிசை யாதிதுதான் ஆகி நிற்கில்
அதுஞாஞ தீதம்அவ் வொளிதோன்றி அகலாது
அதிலுறையா துநெகிழா தருளின் செயலாய்ப்
பொதுவான செயலதனில் நின்றிடுவை யாயிற்
புக்கவொளி எவ்விடத்தும் பொதுவொளி
யாய்நிறைந்து
கதிரான முறுகினபோ லாகு மதுதானே
கருதுபரை தெரிசனம்என் றறையும் நூற்கருத்தே
—தத்துவப் பிரகாசம்

இதுசத்தி அனேகம்அரு வுருவாயும் மிக்க
இறைவஞர்க்குயி ராகிக் கரண மாகித்
திதமுற்ற குணம்பொறிகள் ஆகிஉயிர் உடலாய்ச்
சேர்சாங்கம் உபாங்கமாய்த் தேசமொடு
பொருளாய்க்
கதிவைத்த பொருளாய இலிங்கபீ டமுமாய்க்
கருதியநற் குணமாதல் பரைவியாத்தம் காண்டல்
இதமித்த ததுவாதல் யோகம் போகம்
இதன்பயனும் ஓசையின்பம் இசைதல்தானே
—தத்துவப் பிரகாசம்

சங்கோசை கடலோசை முழவோசை மணியில்
தாழோசை சுரும்போசை சேகண் டியோசை
அங்குயிர்நா தத்தோசை யானேவாக் கோசை
அருவிநீ ரோசைஅருள் வயிரின் ஓசை

துங்கயாழோ சைபலவோ சையுமுற் கொண்டு
தோன்றுவதே பரையில்வரு போகம் ஆங்கொன்றி
இங்கிவற்றை விடுவதுவே பரையா தீதம்
இவ்வொளிக்குட் சிவமுளவென் றினியுண ராய்நீயே.
—தத்துவப் பிரகாசம்.

வியாசமுனிவனே! பார்வதி தேவியார் சிவபெருமானை நோக்கி, ''சுவாமி! தேவரீர் திருவாய் மலர்ந்தருளிய மரண காலக் குறிகளைக் கேட்டறிந்தேன். உலகினருயிரை இயமன் வஞ்சித்துக் கவர்ந்து கொண்டு போகின்முனெனக் கூறு கின்றீரே. அவன் அப்பிராணனை யெவ்வாறு வஞ்சித்துப் பிடித்துக்கொண்டு போகின்முன்? அதனையும் விவரமாகச் சொல்ல வேண்மெனக்'' கேட்க, சிவபெருமான், ''உமையே! உலகினருக்கு இதமுண்டாகும்படி அதனையுஞ் சொல்லு கின்றேன். பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமென்னும் பஞ்ச பூதங்களுஞ் சேர்ந்தது சரீரம். அவற்றினுள் ஆகாயம் சர்வவியாபியாய் உள்ளது. மற்றைப் பூதங்கள் எல்லாம் ஆகாயத்திலேயே ஒடுங்கி, மீண்டும் அதனின்றே தோன்றுகின்றன. இந்தப் பஞ்சபூத சரீரம் காரணத்துடன் கூடியதாதலின், ஞானிகளாயிருப்பினும், அவர்கள் சரீரத் திற்கும் நாசமுண்டாகும்; அஃதொரு பொழுதும் ஸ்திர மானதல்ல''வெனக் கூற,

பார்வதிதேவியார் பரமசிவனை நோக்கி, ''சுவாமி! பூர்வம் மன்மதனைத் தேவரீரே தகனஞ் செய்துவிட்டு, அவன் மனைவி இரதி பலவாறு துக்கித்துப் பிரார்த்திக்க அவளுக்கிரங்கி மீண்டும் உயிர் பெறச் செய்தீர். இயமனை உதைத்து அவனதுயிர் போக்கிப் பூமிதேவியின் பிரார்த் தனைக்கிரங்கி அவனுக்கு மீண்டும் உயிர்தந்தருளினீர். இயமனைச் செயித்தவர்கள் தேவரீரையன்றி யெவரேனு முளராகில் அவர் யாரென்று அடியேனுக்குச் சொல்ல வேண்டு''மெனக் கேட்கச் சிவபெருமான் கூறுகின்முர்.

"தேவர்கள், அசுரர்கள், யக்ஷர்கள், ராக்ஷதர்கள், உரகர்கள், மானுடர்கள் முதலியோர்களாலுஞ் செயிக்க முடியாத இயமதருமராஜனைத் தியானத்தால் யோகஞ் செய்பவர்கள் சரீரத்துடனே வெல்லுவார்கள்" என்று கூறியருளினர்.

திரிலோக நாயகனுன சிவபெருமானுடைய திருவார்த் தையைக் கேட்டுப் பார்வதி தேவியார் ஆச்சரியத்துடன் புன்னகை செய்து, "சுவாமி, அத்தகைய ஞானிகளுடைய சரித்திரத்தை எனக்கு விபரமாகச் சொல்லவேண்டு" மெனக் கேட்க,

சிவபெருமான், "ஹே சந்திரவதனே! பஞ்சபூதாத் மகமான தேகமானது பூதகுணத்தையுடையது. பஞ்ச பூதங்களில் ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவினின்று தேயுவும், தேயுவினின்று அப்புவும், அப்புவிலிருந்து பூமியும் தோன்றும். இவ்வைந்தும் சேருவதால்தான் சரீர மாகின்றது. பிருதிவிக்கு ஐந்து குணங்களும், ஜலத்திற்கு நான்கு குணங்களும், தீயினுக்கு மூன்று குணங்களும், வாயுவுக்கு இரண்டு குணங்களும், ஆகாசத்திற்கு ஒரு குணமாகவும் தன் மாத்திரையின் இயல்பு பொருந்தும். ஆகாயத்தின் வியாபகம் சத்த குணத்தினுலமையும்.

"பூதங்கள் தத்தமது குணங்களை நீங்கிய காலத்திற் சரீரம் நாசமடைகின்றது. ஞானியானவன் சரீரத்தை யடைய விரும்பியபொழுது அப் பஞ்சபூத குணங்கள் அவற்றவற்றினின் றுண்டாகின்றன. இயமனை வெல்ல வேண்டுமென்று விரும்பியவன், அவனது பூததேகத்தில் விளங்கும் ஆகாயத்தைத் தன்னுள்ளே கண்டு, அதனிடத்தே சர்வகுணங்களும் இருப்பதாகத் தெரிந்து, மனத்தைப் புறஞ் செல்லாதொடுக்கி யோகத்தில் நிற்க வேண்டிய" தெனக் கூற,

பார்வதி தேவி, "சுவாமி! தியானயோகம் இவற்றால் இமயனை வெல்லலாமென்று கூறியதை விளக்கிச் சொல்ல வேண்டு" மெனக் கேட்க,

சிவபெருமான், "தேவியே! அந்த யோகமார்க்கம் சிரத்தா பத்தியுடையவனுக் கன்றி நாஸ்திகனுக்கும், புனித மில்லாதவனுக்கும், அதர்மிக்கும் கூறத் தகாது. அதனைக் சாதுக்களாகிய யோகிகளின் இதத்தைத் கருதி யுனக்குச் சொல்லுகிறேன்:

"சுகமான ஆசனத்திலிருந்து கொண்டு யோகத்தை அப்பியசிக்கவேண்டும். நாடோறும் ஏகாந்தமானவிடத்தி லிருந்து, தர்ஜனியால் (மோதிர விரலால்) இரண்டு நாழிகைக் காலம் காதுகளைக் மூடிக்கொண்டு, சிவபெருமானைத் தியானிக்க வேண்டும். அப்படிச் செய்யில் வயிற்றிலுள்ள ஜடராக்கினி யினின்றுமோர் சத்த முண்டாகி அவனுக்குக் கேட்கும். அன்றியும், அவ்வோசை ஊதுவது போலக்கேட்டு வயிற்றிலுள்ள ஆகாரத்தையெல்லாம் பசனம் செய்துவிடும். ஜ்வராதி ரோகங்களைப் போக்கி, உபத்திரவங்களை நீக்கிவிடும். இவ்வாறே பிரதி தினமும் இரண்டு நாழிகை வரையில் அப்பியசித்து வந்தவன் மிருத்யுவைச் செயித்து, சுயேச்சையாக என்னைத் தரிசித்து, எல்லாவற்றையுங் கண்டு, சர்வ சித்தியையடைகிறான். மழைக்காலத்தில் ஆகாயத்தில் உண்டாகும் மேககர்ஜனை போன்ற சத்தத் தைக் கேட்டு அப்பியசித்தவன், யோகியாய் ஜனன மரணங்களை நீக்கிச் சூக்ஷமத்திலும் சூக்ஷமாயுள்ள பிரமத்தைத் தரிசித்து, பதரைநீக்கி மணியைக் கொள்வது போன்று சமுசாராதி துக்கங்களை யொழித்துப் பிர்ம ஞானத்தை யடைகிறான். சப்தப் பிர்மம் எனப்படும் இந்த யோகாப்பியாச முடையோர் பசி . தாகங்களையும் போக்கித் தாம் விரும்பியவற்றை யடைவர். இதுவே முத்திக்குக்

காரணம். இது யாவருக்கும் சொல்லக்கூடாதது. நாசரகிதமானது. உபாதிவர்ஜிதமாக வுள்ளது. கால பாசத்தினல் மோகிக்கப்பட்டவர்களும், பாவிகளும், துர்ப்புத்திகளும் சப்தப்பிர்மத்தை அறியார்கள்.

சப்தப்பிரமஞானம் உண்டாகும் வரையில் சமுசார பந்தம் விலகமாட்டாது. சப்தப்பிரமத்தை யறிந்தவர்கள் ஜன்மபந்தத்திலிருந்தும் நீங்குவார்கள். தன் தேகத்தி லுண்டான நித்திரை, சோம்பல், ஆலசியம், காமக் குரோதாதிகள் முதலியவற்றை நீக்கிச், சுகமான ஆசனத்தி லிருந்து, நூறுவயது சென்றவனுயினும், இந்த யோகத்தை அப்பியசிக்கும் பக்ஷத்தில், மிருத்யுஞ்ஜய சரீரத்தையும், ஆரோக்கியத்தையும், தீர்க்காயுளையும் அடைகிருன். இதனை அப்பியசித்தவனுக்கு சர்வேஸ்வரனிடத்தில் மிக்க நம்பிக்கை யுண்டாகிறது. இந்த யோகத்திற்கு ஓங்காரா திகள் பீஜாக்ஷரங்கள் வேண்டுவதில்லை. அப்பியாசத் தாலேயே இவற்றை யடையலாம்.

இந்த சப்தத்தில் ஒன்பது வகைப் பேதங்களுள்ளன. அவற்றையுஞ் சொல்லுகிறேன்: அவை, கோஷம், காம்ஸ்யம், சிருங்கம், கண்டா, வீணை, புல்லாங்குழல், துந்துபி, சங்கம், மேகம் போன்ற ஒன்பது சப்தங்களாகும். விவேகியானவன் இவ்வகையான கோஷங்களைக் கேளாது விடுத்தால் ஓங்காரத்தின் ஓசையுண்டாகும். அதனையே கேட்க வேண்டும். அதுவே சிறந்தது. அவ் வோங்கார சத்தத்தை யதோக்தமாக அப்யசிக்கு மொருவனைப் புண்ணிய பாவங்களணுகா. ஆறு மாதத்திற்கு அசி சப்தத்தை அப்யசித்தவன் மஹாயோகியாய்ச் சர்வலோகங் களிலும் சஞ்சரிப்பன்.

கோஷமென்னும் சப்தத்தை அப்யசித்தவன், ஆத்ம சுத்தியும், சர்வ வியாதிகளினின்று நீங்குதலும், வசியகர முதலிய சித்திகளையு மடைவான்.

காம்ஸ்யம் என்பதை அப்பியசித்தவன் சமஸ்தப் பிராணிகளின் கமனத்தைத் தடுக்கக் கூடியவனுவன். அன்றியும், விஷயங்களைத் தடுக்கவும், பூதம், பேய் முதலிய வற்றை யடக்கவும் வல்லவனுவன்.

மூன்ருவதாகிய சிருங்கம் (கொம்பு) என்னும் சப்தத்தை அப்பியசித்தவன், சத்துரு நாசஞ் செய்யவும், தன்னிஷ்டப்படி நடக்க வைக்கவும் வல்லமையுடைய வனுவன்.

கண்டா (மணி) வென்னுஞ் சப்தத்தை அப்பிய சிப்பவன், சகல தேவர்களையும் தன்னிடம் வரவழைக்கும் திறமுடையவனுவன். அல்லாமல், யக்ஷ, கின்னரர், கிம்புருட, மாநுடர் முதலானவர்களையும் வசப்படுத்த வல்லவனுவன்.

வீணையென்னுஞ் சத்தத்தை யப்பியசிப்பவன் தூர திருஷ்டி யுடையவனுவன்.

புல்லாங்குழல் சத்தத்தை யப்பியசிப்பவன் சர்வக்ஞனுவன்.

துந்துபியென்பதை யப்பியசிப்பவன் ஜனன மரணங்களை நீக்கிச் சுகியாயு மிருப்பான்.

மேகநாதத்தை யப்பியசிப்பவன் ஆகாயத்திற் சஞ்சரிக்க வல்லவனும், சர்வ சித்தியுடையவனுமாவான்.

இவ்வாறு சப்தத்தின் விஷயத்தைப் பற்றி விவரித்தேன். மனமானது அழிந்தவனிடம் பிராண ஜயம் உண்டாகிறது என்பதை அறியவும்.

சிவமகாபுராணம்

3 - 4. பொன் அரை ஞாணும் பூந்துகி லாடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ கெறிப்பப்......

அரை ஞாண் என்பது இடுப்பில் கட்டக்கூடிய கொடி போன்றது. இடுப்பில் சிவபெருமானின் படங்களில் பெரிய

பாம்பு சுற்றியுள்ளதாகக் காணப்படும், இடுப்பே குண்டலினிப் பாம்பு சுற்றியுள்ள இடம். இந்நிலே மாற்ற மடைந்தால்தான் புரியட்டகம் என்ற பிராணமய கோசத் தின் சத்தி மாற்றம் அமையும். குருவால் உணர்த்தப் படும் 'ஆகுஞ்சனம்' என்ற முத்திரையால் மாற்றப் பட்டால், தேகத்தைச் சூழ உள்ள மூலாதாரம், சுவாதிஷ் டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற பூப்போன்ற சக்கரங்கள் மாற்றமடைந்து, தேகத்திற் போர்த்தும் மேலாடை போன்ற ஒளி விளங்குவதைக் காணலாம். தேகத்தின் அழகு தேஜஸ்தான். தேஜஸ் பொருந்தி முகம் பொலிவுறும்.

5, 6, 7. பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்குசிந் தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்......

பேழை வயிறு

மனிதன் கஷ்டப்பட்டுச் சேர்த்து வைக்கும் தனது திரவியத்தைப் பாதுகாக்கப் பூட்டுத் திறப்புள்ள ஒரு பெட்டியைப் பயன்படுத்துகிறுன். விநாயகரின் வயிற்றை ஒரு பெட்டியாக உவமித்துள்ளது. வயிற்றிலுள்ள சக்கரம் மணிபூரகமாகும். இந்தச் சக்கரமே மனிதனின் ஆசை களுக்கிருப்பிடமாக உள்ளது. இதுவே கணேசபுராணத்தில் பத்துத் தலேயுடைய சிந்துரன் என்று உவமிக்கப்பட்ட விஷயமாகும். ஆன்மதத்துவம் 24ம் சுத்தியாக வேண்டில், இந்தச் சக்கரம் மாற்றமடைந்து, இதன் ஆட்சியில் உள்ள பிருதிவிதத்துவ புவனங்கள் 108ம், அப்பு தத்துவ புவனங் கள் 56ம் ஆற்றல் கெட்டு, மேல் உள்ள புவனங்கள் வியாபகம் பெறவேண்டும். உருவமூர்த்திகள் எல்லாம்

இங்கு இடம் பெறுவர். தேகத்தை ஆசரித்துள்ள புருடனின் நிலையும் இங்குதான்.

பெரும்பாரக் கோடு:

பாரம்—எல்லை.

உருவ வழிபாட்டுக்கும் அருவ வழிபாட்டுக்கும் எல்லை வகுப்பதைப் பெரிய தந்தம் என்று கூறினர். யானை தனது வலிய தந்தத்தினுல் பூமியில் வேரூன்றிய மரங்களைப் பேர்த்துத் தள்ளிச் சாய்த்து விடும். அதுபோல், கடைவாய்ப் பற்களில் செய்யப்படும் ஒரு கிரியையினுல், கீழுள்ள ஆசைகளைப் பெயர்த்தெறிந்து ஒளிமண்டலத்தில் உள்ள ஜீவ தெரிசனத்திற்கு வழிசெய்யும் ஆற்றலுள்ளது பெரும் பாரக்கோடு என்பது கருத்தாகும். இது வித்தியாகலையின் இருப்பிடமாகும். இங்கு கன்னத்தில் செய்யும் கிரியையால் வித்தியாகலை சிறப்புறும், இதனுல் முன்னர்க்கூறிய பேழை வயிற்றின் ஆற்றல் கெடும்.

உந்திக் கமலத் துதித்தெழுஞ் சோதியை
அந்திக்கு மந்திர மாரும் அறிகிலார்
அந்திக்கு மந்திர மாரும் அறிந்தபின்
தந்தைக்கு முன்னே மகன்பிறந் தானே.

—திருமந்திரம், 869.

பல்லிலேதான் ருத்திரக் கிரந்தி பேதனம் செய்யும் ஆற்றல் உள்ளது. பழையன அழிந்தால்தான் புதுவீடு கட்ட முடியம். பழைய ஆசைகளின் இருப்பாகிய பெட்டகத்தின் சாவி இங்கு உள்ளது. அறிந்து திறந்தவர் தேகமற்ற ஜீவவொளிக்குப் போக முடியும். அதனுல், கடைவாய்ப்பல், யானையாகிய பிரவணத்தின் வியட்டிப் பிரணவமான அ, உ, ம வையும் விந்து நாதங்களையும் எல்லை பிரிக்குமிடமாயிற்று.

வேழ முகம் :

பிரணவம் தேகமாக இருந்தபோது காரிருளாக



விளங்கியது. குருவின் சகாயத்தால் தேகங்கடந்த தேகி உணர்த்தப்பட்டபோது, இருட்டைக் கிழிக்கும் தும்பிக்கை போன்ற ஒரு உருவம் சில நிமிஷம் விளங்கி, பின்னர் ஒளி மண்டலம் அமையும். அந்த ஒளியானது முகத்தின் முன் ஒரு அடி வரையில் விளங்குவதால், யானையின் துதிக்கை நீட்டினதுபோல் உள்ளதை உருவகப்படுத்தி விளக்கப் பட்டுள்ளது.

விளங்கு சிந்தூரம்

அம் முகத்தில் கீழுள்ள அக்கினிகலை மேலெழுந்து



விளங்குவதில் செவ்வொளி காணப்படும். இது நெற்றிக்கு நேரே விளங்குவதில் திலகமாக உருவகப்படுத்தப் பட்டுள்ளது. புராணத்தில் சிந்துரனைத் தலையில் தேய்த்து அழித்தார் என்ற புராண நிகழ்ச்சியைக் கொண்டு தெளிவு பெறவும்.

அவமாய தேவர் அவகதியில் அழுந்தாமே
பவமாயம் காத்தென்னை ஆண்டுகொண்ட பரஞ்சோதி

நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாம்ஒழிந்து
சிவமான வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ.
—திருத்தெள்ளேணம், திருவாசகம்.

அங்குச பாசம்

அங்குசம் குத்தவும், வெட்டவும் செய்யும். ஆனை யோட்டும் தோட்டி இது. வலதுபுறத்தில் குருவால் தேகியைக் காட்டி உணர்த்தப்படுவதால், முன்புள்ள வியட்டிப் பிரணவத்தின் நிலை கெடுக்கப்படுகிறது. அதாவது சிருட்டி நிலையும், திதிநிலையின் காரியமும் சேதிக்கப்பட்டு வலுவிழக்கின்றன. இது வலப்புறத்தி லுள்ள மூளையின் ஆற்றலாகும்.

சேதிக்கப்பட்டவை மீள உற்பவமாகாதவாறு ஒளி பெருகுவது பாசத்தால் உணர்த்தப்பட்டது. பாசம் என்றால் கட்டுக் கயிறு. பாசங்களை ஒரு எல்லைக்குட்படுத்தி மீளத் தலையெடுக்காவாறு செய்தல். இந்த ஆற்றல் இடது புற மூளையில் உள்ளது.

இவைகள் கைகளாக உவமிக்கப்பட்டுள்ளன. கையின் செயல் ஈதல், ஏற்றல். அதுபோலவே செலுத்தலும், பிரித்தலும், சேர்த்தலும் ஆகியவற்றை அங்குசமும் பாசமும் செய்கின்றன.

(8 = 15)

நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனியும்
நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்
இரண்டு செவியும் இலங்குபொன் முடியும்
திரண்ட முப்புரிநூல் திகழொளி மார்பும்
சொற்பதங் கடந்த துரிய மெய்ஞ்ஞான
அற்புதன் ஈன்ற கற்பகக் களிறே!
முப்பழம் நுகரும் மூஷிக வாகன!

(இ-ள்) அடியேனது மன ந்தில் எப்போதும் நிலையாகத் தங்கித் தோன்றும் நீலவொளியுடன் கூடிய திருமேனியும், கீழ்நோக்கித் தொங்குகின்ற திருவாயும், நான்கு பெரிய தோள்களும், சூரியன் சந்திரன் அக்கினியாகிய மூன்று திருக்கண்களும், கன்னமதம் கபோலமதம் பீஜமதம் என்ற மூன்று மதங்களின் சுவடும், இரண்டு பெரிய செவிகளும், சிரசில் விளங்குகின்ற பொன்முடியும், மூன்று புரிகளைக் கொண்ட வடமாகிய பூணூலும், ஒளி விளங்கும் திருமார்பும், சொல்லினையும் பொருளினையும் கடந்த உருவங்கடந்த ஞான சொருபனாகிய சிவத்தின் குமாரனாகி, வேண்டுவோர்க்கு வேண்டியதை அளிக்கும் கற்பகத்தரு போன்றவனே!

நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனி :

நெஞ்சு—மனம்.

ஊனக் கண்களில் தோன்றாது அகக் கண்ணின் முன் நிலையாகக் குடிகொண்ட நீலவொளி இங்குக் கூறப்பட்டுள்ளது. இந்தத் திருமேனிதான் ஞான தேகமான ஜீவனின் இருப்பாகும்.

1. சகஸ்ர தளம்—ஆத்மாவின் நிலை, இச்சையின் பீடம்.

2. பின்புறம் உள்ள சத்தியோஜாதமுகம் என்ற பினியல் கிளாண்டு— Pineal Gland } அருளும் அறிவும் உருவான ஞானமுடைய ஜீவன்

3. முன்புறமுள்ள தத்புருஷமுகம் என்ற Pituitary Gland—கிரியை உணர்த்தும் சத்தி.

முகத்தின்முன் காணும் நீலவொளி கீழுள்ள கிரியைக்குரிய குண்டலினி சத்தியின் நிலையாகும். இந்த நீலவொளியே அருட்சத்தியின் வெளிப்பாடுமாகும். இது முகத்தின்முன் தோன்ற, ஆத்மாவின் உலகாசை விடப்பட

வேண்டும். அகண்டத்தில் பற்றுதல் வேண்டும். இவ்விரு செயலால் பஞ்சபூதங்களில் முதற்காரணமான பூதாகாய மண்டலம் நெற்றிக்கு நேரே விளங்கும். இதில் அன்பும் அருளும் கலந்து விளங்கும். மனிதன் தக்க அறிவு பெருத போது தூலக் கண்களால் கண்டவைகளே உண்மை என்று நம்பி வந்தான். இந்த நிலேயில் திடம்பட்ட அறிவு பொருந்திஞல், தூல உலகத்திற்கு ஒரு காரணம் இருந்தே காரியமாக அது செயல்படுவது விளங்கும்.

பின்மூளேயில் உள்ள Pineal Gland கண்ணின் கருவிழியின் வஸ்து போன்ற ஒன்ருலானது. அதன் ஆற்ற லும் முன்மூளேயின் ஆற்றலும் பொருந்தியே நீல வொளியை யுண்டாக்குகின்றது. இந்த வித்தையைத் தென்ஞட்டுக்களிக்கவே, தான் தென்ஞடு வந்ததாகத் திருமூலர் கூறுகின்ருர்.

மாலாங்க னேயிங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனியள் நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே.

—திருமந்திரம், 77.

இந்த வொளியைத் தரிசித்தவர் தீவிர சத்தினிபாதம் பொருந்தியவராவர்.

தாங்குமின் எட்டுத் திசைக்குந் தலேமகன்
பூங்கமழ் கோதைப் புரிகுழ லாளொடும்
ஆங்கது சேரும் அறிவுடை யோர்க்குத்
தூங்கொளி நீலந் தொடர்தலு மாமே.

—திருமந்திரம், 1526.

குறிப்பு :

அகண்டவொளி சிவமாகும்.
நீலவொளி சத்தியாகும்,

பின்மூளை இரண்டையும், முன் மூளையையும், சகஸ்ர தளத்தையும் அறிவதால், சிவசத்தியிடையில் உள்ள குமாரனுயிற்று. இக் கருத்துப் பற்றியே, 'அற்புதன் ஈன்ற கற்பகக் களிறே' எனப் பின்னர் வந்துள்ளது கொண்டறிக.

இவ்வொளியைத் தரிசித்தவர் பாலனுவர் என்ருல், சிவகுமாரராவர்.

நீல நிறனுடைய நேரிழை யாளொடுஞ்
சாலவும் புல்லிச் சதமென் றிருப்பார்க்கு
ஞாலம் அறிய நரைதிரை மாறிடும்
பாலனு மாவார் பராநந்தி யாணையே.—திருமந்திரம், 734.

உந்திக் கமலத் துதித்தெழுஞ் சோதியை
அந்திக்கு மந்திர மாரும் அறிகிலார்
அந்திக்கு மந்திர மாரும் அறிந்தபின்
தந்தைக்கு முன்னே மகன்பிறந் தானே.

—திருமந்திரம், 869.

நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனியும் என்று சொல்லி யுள்ளதே தவிரப் புறத்தேயுள்ளதாகக் கூறவில்லை. அதனுல் இதன் தொடர்பான மற்றவைகளுக்கும் மன உடலில் தானே பொருள் காணவேண்டும்.

நான்ற வாயும் நாலிரு புயமும் :

நம்மிடம் அசைதலுக்கு உரிய தாழ்வாயும், அசைதலற்ற மேல்வாயும் உள்ளன. அசைதலுக்குக் காரணமான கீழ்வாயின் இரகசியம் குருவால் உணர்த்தப்பட்டபோது, நான்கு பருத்த புயங்கள் போன்ற சிரசின் முன்புறம், பின்புறம், பக்கம் ஆகிய நான்கு திக்கிலும் ஒளி விளங்கும்

உதிக்கின்ற இந்திரன் அங்கி யமனுந்
துதிக்கும் நிருதி வருணன்நல் வாயு
மதிக்குங் குபேரன் வடதிசை யீசன்
நிதித்தெண் டிசையு நிறைந்துநின் ருரே.

—திருமந்திரம், 2527.

ஒருங்கிய பூவுமோ ரெட்டித மாகும்
மருங்கிய மாயா புரியத னுள்ளே
சுருங்கிய தண்டின் சுழுனையி னூடே
ஒருங்கிய சோதியை ஓர்ந்தெழும் உய்ந்தே.

—திருமந்திரம், 2528.

மொட்டலர் தாமரை மூன்றுள மூன்றினும்
விட்டலர் கின்றனன் சோதி விரிசுடர்
எட்டல ருள்ளே இரண்டலர் உள்ளுறிற்
பட்டலர் கின்றதோர் பண்டங் கனவே.

—திருமந்திரம், 2529.

ஆறே யருவி யகங்குளம் ஒன்றுண்டு
நூறே சிவகதி நுண்ணிது வண்ணமுங்
கூறே குவிமுலைக் கொம்பனை யாளொடும்
வேறே யிருக்கும் விழுப்பொருள் தானே.

—திருமந்திரம், 2530.

மூன்று கண்ணும் மும்மதச் சுவடும :

பிரணவம் விளங்கும் இடக்கண் அகாரமும், வலக்கண் உகாரமும், பிடரிக்கண் மகாரமுமாகும். இவ்வாறு உள்ள மூன்று இடங்களில் மூன்று தன்மையான சிரவங்கள் (ஒழுகும் மதம் போன்றது) இடங்கொண்டுள்ளன. வலப் பாகமான கண்ணொளியில் வெப்பம்தரும் சூரியனொளியால் அமைந்த உலகியலறிவு இடம் பெற்றுள்ளது. இடப்பாக மான சந்திரனொளியில் அன்பினாலறியும் உணர்வுநிலை இடம் பெற்றுள்ளது. உலக அறிவாகவும், உலக இன்பமாயும் உள்ளபோது பின்மூளை சிறந்து தொழிற்படாது உறக்கம் போன்ற நிலையிலிருந்தது. முகத்தின்முன் நீலவொளி கண்ட பிறகு, மூளையின் மூன்று பகுதியும் செயல்படுவது விளங்கும். இதை மும்மதச் சுவடு என்றார். சுவடு என்றால் அடிச் சுவட்டின் குறி என்று பொருள்—மூன்று நேத்திரத்தின் காரியமான ஸ்பந்த உணர்வு (Vibration) பதியும் பாதை.

இரண்டு செவியும் :

புறக்காதுகளின் துவாரங்களின் வழியாக சப்தஅலே பாய்ந்து, மூளேயின் சப்தநாடிகளில் தாக்கி, அறியும் புருஷனுக்கு ஒரு பொருளேயோ, ஒரு கருத்தையோ உணர்த்துகின்றது. இந்தச் செவிஞானம் தூரக்கேள்வியைக் கேட்கும் ஆற்றலேப் பெறவில்லே. புறச் செவியின்றி அகவுணர்வில் உதிக்கும் ஒலிஞானம், உலகில் எங்கும் உள்ள ஒலியை ரேடியோ பெட்டியில் இருந்த இடத்தில் கேட்கும் அறிவுபோல் தூரக் கேள்வி பெறும் செவிகள் முறம் போன்ற பெரிய செவியாக உவமிக்கப்பட்டுள்ளன.

இலங்கு பொன் முடியும் :

சிந்தனேயில் திளேப்பார்க்கு நீல ஒளியுடன் பொன்னொளியோ, அதிகமான பொன்னொளியோ கிட்டும். அவ்வொளியை மகுடமாக்கினர். அநாகத சக்கரமும் சகஸ்ரதள மத்தியமும் பன்னிரண்டு இதழ்களுடன் கூடிய பொன்னொளியே யாகும்.

திரண்ட முப்புரிநூல் :

அந்தணர்கள் முப்புரி அணிவதின் கருத்து, அவர்கள் இடாநாடி, பிங்கலாநாடி சுழுமுனுநாடி மூன்றையும் தொழில்படச் செய்துவிட்டவர்கள் என்று பொருள். பொன்னொளியையோ நீலஒளியையோ தரிசிப்பவர்கள், மூன்று நாடிகளேயும் திறம்படத் தொழிலுக்கு விட்டவரே யாவர்.

நூலுஞ் சிகையும் நுவலிற் பிரமமோ
நூலது கார்ப்பாச நுண்சிகை கேசமாம்
நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்
நூலுடை அந்தணர் காணும் நுவலிலே.

—திருமந்திரம், 230.

வேதாந்த ஞானம்தான் அழிவற்ற பிர்மம் என்ற உண்மையை உணர்த்த, வெளியில் உள்ள சங்கேதக் குறியே பூணூலாயிற்று.

**திகழ் ஒளி மார்பு :**

மார்பு அநாகத சக்கரத்தின் நிலையாகும். இது தேகத்தின் அன்புக்கு நிலைக்களமாகும். மார்பு என்ற சொல்லுக்கு அகலம், முலை, மார்பகம் என்ற பொருள்களுண்டு. அதனுல் அகண்ட ஒளி மண்டலம் என்ற பொருள் தருகிறது.

**சொற்பதங் கடந்த துரிய மெய்ஞ்ஞான**
**அற்புதன் யீன்ற கற்பகக் களிறே :**

காணப்படும் பொருளுக்கு மக்களால் பெயர் வைக்கப் பட்டுள்ளது. மக்கள் தோன்றுமுன்பே உருவத்திற்கு முதல் நிலையில் உள்ள ஒளிக்கு மனிதன் பெயர் வைப்பது ஒரு கற்பிதப் பேரேயாகும். அவனுக்குப் பெயர் ஒன்று இல்லா மலிருந்தாலும் 1000 வகையாக அவனைக் கூப்பிட்டுப் பத்தி நெறியினர் வழிபடுகின்றனர். மனம் இறந்த நிலையில் உருவமேது? சொல்லேது? அந்நிலையில் ஜீவனின் நிலை பொருந்தியபோது அது துரிய நிலையாகும். அந்நிலை எண்ணமும் செயலும் இல்லாத இடமாகும். இதுவே உண்மையான ஞானமாகும். அற்புதம் என்ருல் பிரபஞ்ச சிருஷ்டி. ஞானம் என்ற பொருளுடையது. ருக்வேதத்தில் அக்கினிக்கு அப் பெயர் உள்ளது. ஞானமே வடிவாகவும், சிருஷ்டிக்கு முதல்நிலையுமாகவும் இருப்பதால், சிவகுமாரன் என அழைக்கப்படுகிறது.

விநாயகரை வழிபடுவோர்க்கு கற்பகத்தரு வேண்டிய தைக் கொடுப்பதுபோல் அவரவர் விருப்பத்தையும் பூர்த்தி செய்பவராவர். ஏ—விளி.

**முப்பழ நுகரும் மூஷிக வாகன!**

பழம் என்ற சொல்லுக்கு முதிர்ந்தது, பலன் என்ற பொருள்கள் உள்ளன. சாதாரண மனிதனின் மூளைப் பகுதிகளான சோம, சூரியாக்கினி என்ற முச்சுடர்ப் பகுதி

முன்னர்ப் பக்குவமாகாத நிலையிலிருந்து முதிர்ந்து, அதன் பலனான ஒளியை வெளிப்படுத்தும் நிலையில் கீழே உள்ள மூலாதார கணபதி, ஒலியுடன் சுழுமுனை நாடியில் உள்ள அடைப்பைத் தகர்த்து மேலெழுந்தவரை, பெருச்சாளி வாகனமுடையார் என்றழைக்கப் படுகிறது.

பெருச்சாளி எலிவகையைச் சேர்ந்த பெரிய உருவம் தான். எலி தோண்டுவதைவிட மரம், கல், சுவர்களைத் தகர்த்து, அதன் வழியை அமைத்துவிடும். அம்முறையில் இயல்பாகத் திறக்கமுடியாத சுழுமுனையின் அடைப்புக் களைத் தகர்த்து மேலே வருவதே பெருச்சாளியால் விளக்கப் பட்டுள்ளது.

மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞைகள் ஒவ்வொன்றுக்கும் மற்றொன்றுக்கும் இடையில் அமைப்பு உள்ளது. சிரசை ஒளிவந்தடைந்த போது, இவ்வடைப்புக்கள் எல்லாம் துளைத்தே மேலேறிச் சுழுமுனைநாடி உச்சிக்கு வருகிறது.

புராணத்தில், அகலன் தோளிலிருந்து கொம்பை ஒடித்து கஜமுகா சூரனைக் கொன்றார் என்றுள்ளது. இவன் மூஷிக வடிவத்துடன் மீண்டும் வந்தபோது, விநாயகர் அந்த மூஷிகத்தைப் பிடித்து, அதன்பேரி லாரோகணித்து, அவனுடைய அஞ்ஞான இருளைப் போக்கியருளினர் என்பது புராணக் கதை.

பிரணவமாகிய அ, உ, ம என்ற சிருஷ்டி, திதி, லயம் என்றவைகளுக்கு உட்படும்நிலை காரிருள் நிலை. பல்லின் கிரியையால் இருள் ஒழிக்கப்பட்டு குண்டலினி மேலெழுந்த சுழுமுனைநிலையே மூஷிகவாகனம். அதில் ஆரோகணிப்பவர் ஞான ஒளியாகிய விநாயகராவர். இதனைத் திருமூலர் அண்டாதித்தன் என்ற தலைப்பில் விளக்கியுள்ளார்.

பாருக்குக் கீழே பகலோன் வரும்வழி
யாருக்குங் காணவொண் ணாத அரும்பொருள்
நீருக்குந் தீக்கு நடுவே யுதிப்பவன்
ஆருக்கும் எட்டாத ஆதித்தன் தானே.

—திருமந்திரம், *1982.*

மண்ணை யிடந்ததின் கீழொடும் ஆதித்தன்
விண்ணை யிடந்து வெளிசெய்து நின்றிடுங்
கண்ணை யிடந்து களிதந்த வானந்தம்
எண்ணுங் கிழமைக் கிசைந்துநின் றானே.

—திருமந்திரம். *1983.*

பாரை யிடந்து பகலோன் வரும்வழி
யாரும் அறியார் அருங்கடை நூலவர்
தீரன் இருந்த திருமலை சூழென்பர்
ஊரை யுணர்ந்தார் உணர்ந்திருந் தாரே.

—திருமந்திரம், *1984.*

**இதுவரையில், கணபதியின் உருவத்திற்கும் அவரது உண்மைச் சொரூபத்திற்கும் விளக்கம் காட்டப்பட்டது. இதன்மேல் அருள்விளக்கம் அமைகிறது.**

## (16—24)

இப்பொழு(து) என்னை ஆட்கொள வேண்டித்
தாயாய் எனக்குத் தானெழுந்து அருளி
மாயாப் பிறவி மயக்கம் அறுத்துத்
திருந்திய முதல்ஐந் தெழுத்தும் தெளிவாய்ப்
பொருந்தவே வந்தென் உளந்தனில் புகுந்து
குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திறம்இது பொருள் என
வாடா வகைதான் மகிழ்ந்தெனக்கு அருளிக்
கோடா யுதத்தால் கொடுவினை களைந்தே......

**(இ-ள்)** (ஈசுவர பத்தியில்லாத, அல்லது பக்குவ மற்ற) **அடியேனை ஆட்கொள்ள விரும்பி, எனக்குப் பேரன்பு காட்டும் தாய்போலக் கருணைகொண்டு, தாமாகவே என்**

முகத்தின்முன் எழுந்தருளி, (அநாதியாக அழியாது தொடர்ந்து வரும்) மயக்கமான பந்தத்தில் மயங்கின எனது பந்தங்களை அறுத்துத் திருத்தமாக பஞ்சாக்கர சொரூபம் விளங்குமாறு செய்து, அதன் பயனாக எனது மன மண்டலத்தில் ஒளிவடிவாக நீலோற்பலமாகிய கண்களில் உனது திருவடியை வைத்து, இதுவே உண்மைப் பொருள் என்று, இனிப் பிறவித் துன்பத்தில் உழன்று வருந்தா வகைக்குரிய தீக்ஷையை அடியேனுக்குச் செய்தருளியதும், தந்தமாகிய ஆயுதத்தால் கொடிய சஞ்சித கருமங்களையும் கெட்டுவிடச் செய்ததும்...

விளக்கம் :

இப்பொழுது என்னை ஆட்கொள வேண்டித்
தாயாய் எனக்குத் தானெழுந்து அருளி
மாயாப் பிறவி மயக்கம் அறுத்து :

மனிதன் தேகமே தான் என்றிருந்த நிலையில் தேகியை அறியப் பக்குவம் பெறவில்லை. பல பிறவியில் செய்த புண்ணியத்தால் தக்க சமயத்தில் விசாரணையால் தேகியை அறிந்து கொள்ளும் ஆர்வம் உண்டாகிறது. அப்பொழுது இருளினின்றும் ஒளியை நாடுகிறான். குரு சகாயத்தால் முகத்தின்முன் ஒளி அமைவது சித்சொரூபத்தின் நிலை யாகும். உருவம் காணப்படும் தேகம் அதன் உண்மை உருவமே சொரூபமென்ற ஒளியாகும். அந்த ஒளியே எடுத்த தேகத்தைப் படைப்பதால் அது தாயாயிற்று. தேகம் அதன் குழந்தையாயிற்று.

இறப்பு - பிறப்பு என்ற சக்கரம் சுழன்று கொண்டே யிருக்கிறது. இந்தச் சக்கரத்தைச் சுழற்றும் ஆற்றல் என்னவென்றால், உடலாலும் மனத்தாலும் உலகப் பொருள்களை நுகரவேண்டும் என்ற நம் விருப்பமே. மனத்தால் நித்தியமான ஆத்ம சொரூபம் அல்லது பரப்

பிரமத்தில் பற்றுக் கொண்டு நின்ருல், பிறவிச் சக்கரம் சுழலுதலற்றுவிடும். இதை மாயாப் பிறவி மயக்கம் என்ருர். பல பிறவிகளிலும் நீங்காது வரும் பந்த நினைவே பிறவியை அளித்துக் கொண்டிருந்தது. நித்தப் பொருளான ஒளியே பந்தமறுப்பதுபற்றி, ஒளியுதித்ததுமே அருணோதயம் போல் ஞானம் விளங்கியபடியால், மாயாப் பிறவி மயக்கம் அறுத்து என்ருர்.

திருந்திய முதல்ஐந் தெழுத்தும் தெளிவாய்
பொருந்தவே வந்தென் உளந்தனில் புகுந்து

பஞ்சாக்கரமான நமசிவாய இடாநாடி பிங்கலா நாடியாக பாதத்தில் தொடங்கி, தோள்களில் சிகாரமாய், வாயில் வகாரமாய், சிரசில் யகாரமாய் உள்ளது அதன் நிற்கும் நிலையாகும்.

ஆகின்ற பாதமு மந்நவாய் நின்றிடும்
ஆகின்ற நாபியுள் அங்கே மகாரமாம்
ஆகின்ற சியிரு தோள்வவ்வாய்க் கண்டபின்
ஆகின்ற வச்சுட ரவ்வியல் பாமே. —திருமந்திரம், 941.

அவ்வியல் பாய இருமூன் றெழுத்தையுஞ்
செவ்வியல் பாகச் சிறந்தனன் நந்தியும்
ஒவ்வியல் பாக ஒளியுற நோக்கிடிற்
பவ்வியல் பாகப் பரந்து நின்ருனே. —திருமந்திரம், 942.

சிவாய என்றபோது தோள்களுக்கு மேல் உள்ள ஒளியாகும். இது 'ப' என்ற எழுத்துப்போல் தோள்களில் மேல்முகங்கொண்டு விளங்கும் ஒளி மண்டலமாகும். ஒளி மண்டலத்தில் உள்ள சிவாய ந - ம வான தேகத்தைத் தாழ்த்தி எழுந்து நிற்பதால் இதற்கு ஓதுமுறை சிவாயநம ஆயிற்று. சிவாய என்பதும், பிரணவத்தில் உள்ள விந்து

நாதங்களும் ஒன்றேதான். பிரணவத்தைக் கொண்டோ பஞ்சாக்கரமாகிய சிவாயநம கொண்டோ ஒளியை அறிந் திடில், முகத்தின் முன் ஒளி தோன்றி விடும்.

எளிய வாதுசெய் வாரெங்கள் ஈசனை
ஒளியை யுன்னி யுருகு மனத்தராய்த்
தெளிய வோதிச் சிவாய நமவென்னுங்
குளிகை யிட்டுப்பொன் ஞக்குவன் கூட்டையே

—திருமந்திரம், 2709.

அல்லது சிவாய சிவசிவ என்பதும் மலமற்ற பஞ்சாக்கரமாகும்.

சிவாய நமவெனச் சித்தம் ஒருக்கி
அவாயம் அறவே யடிமைய தாக்கிச்
சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை
அவாயங் கெடநிற்க ஆனந்த மாமே—திருமந்திரம், 2718.

பொருந்தவே வந்தென் உளந்தனில் புகுந்து என்ற தனுல், தேகங் கடந்து சிரசின் மேலுள்ள துவாதசாந்த வெளியில் ஒளியாய் விளங்கி என்று பொருள். சிரசின் மேல் உள்ள ஆகாயப் பகுதியிலேதான் சிவசத்தியின் வியாபகமான நிவர்த்தியாதி கலைகளும் இந்திகையாதி யான சிவகலைகளும் விளங்கும் சாந்தியதீதை கலையுள்ளது. இது ஆங்கிலத்தில் Ethenic Brain என்று கூறப்படுகிறது. இதன் தொழில்நிலை முன்மூளையிலும் பின் மூளையிலுமாக உள்ளது.

உள்ளுதலின் காரியம் மூளையில் உள்ளது; காரணம் தேகமற்றதாய் உள்ளது. மனிதனின் காரண சரீரம் தேகத்தில் இல்லை; தேகங்கடந்ததாய் இருந்துகொண்டே தேகத்தையுண்டாக்கி அதிலும் ஆட்சி செய்கிறது. தேகங் கடந்த நிலையில் அறிவு பதிந்துவிடுவதால், சில ஞானிகள் அறிவின் செயலின்றியே பித்தர், பாலர், பைசாசர் தன்மையில் விளங்குகின்றனர்.

சந்திப் பதுநந்தி தன்திருத் தாளிணை
சிந்திப் பதுநந்தி செய்ய திருமேனி
வந்திப் பதுநந்தி நாமம்என் வாய்மையாற்
புந்திக்குள் நிற்பது நந்திபொற் போதமே.

—திருமந்திரம், 141.

போதந் தரும்எங்கள் புண்ணிய நந்தியை
போதந் தனில்வைத்துப் புண்ணிய ராயினர்
நாதன் நடத்தால் நயனங் களி கூர
வேதந் துதித்திடப் போயடைந்தார் விண்ணே.

—திருமந்திரம், 142.

குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்து திறம்இது பொருள்என

குவலயம் என்பதற்கு கருங்குவளை, செங்குவளைப் பூவென்று பொருள். குவளைமலர் போன்ற கண்களில் ஒளிவடிவான உனது திருவடிகளைப் பதித்து, குரு சொரூப மாக விளங்கி, இதுவே உண்மைப் பொருள் என உணர்த்தியும்...

அக்கினியின் தன்மை வெப்பமும் ஒளியுமாகும். மூலாதாரத்தில் அக்கினியாக இருந்தபோது சம்சார மயமான வெப்பத்தை யளித்தது. குவளை இரவில் சந்திர ஞதிக்கத்தால் மலரும் நீர்ப்பூவாகும். இது அன்புக் குறியை விளக்கும் பூவாகும். கண்களே அன்புக்கு அடிப் படையானவை! தோல்களுக்குமேல் விளங்கும் ஒளியைச் சோம மண்டலம் என்று கூறுவர். இவ்வொளியின் மகிமையே சாந்தி, சாந்தீயதீத கலைகளின் விளக்கமாகும். இது குருவால் உணர்த்தப்பட வேண்டிய விஷயம்.

வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளி
கோடா யுதத்தால் கொடுவினை களைந்தே

கோடு - விலங்கின் கொம்பு; யானை, பன்றிகளின் தந்தம்

யானைக்குத் தந்தம் போன்றதுதான் மனிதனின் கடைவாய்ப்பல். இப்பல்லின் செய்கையால் எனது பழைய வினைகளை அகற்றி. மேலும் நான் பிறவியில் வருந்தாவகை முளைக்கும் வினைகளை அகற்றியும் எனப் பொருள். இதன் சூக்ஷ்மம் குரு காட்டுவார். முகத்தின் முன்னிருந்த இருள்

அகற்றப்பட்டால் பழைய வினைகள் அகன்றுவிடும்.

''வான்பழித்து இம்மண் புகுந்து மனிதரை
ஆட்கொண்ட வள்ளல்'' —குயிற்பத்து, திருவாசகம்.

''இணையார் திருவடி என்தலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்கள் அத்தனையும் துறந்தொழிந்தேன்'
—திருப்பூவல்லி, திருவாசகம்.

மகார நடுவே வளைத்திடும் சக்தியை
ஒகாரம் வளைத்திட் டும்பிளந் தேற்றி
அகாரம் தலையாய் இருகண் சிகாரமாய்
நகார வகாரநற் காலது நாடுமே. —திருமந்திரம், 921.

நாடும் பிரணவ நடுவிரு பக்கமும்
ஆடு மவர்வாய் அமர்ந்தங்கு நின்றது
நாடு நடுவுண் முகநம சிவாய
வர்டுஞ் சிவாயநம புறவட்டத் தாயதே.
—திருமந்திரம். 922.

பல்லின் விஷயமும் கண்களின் விஷயமும் குருகாட்டும் வழியில் தொழில்படுவதுடன், குருவின் சகாயமும் வேண்டும். இதை ஏட்டில் எழுதிக் காட்ட முடியாது. காட்டினாலும் பயன் கிட்டாது.

கருடன் உருவங் கருதும் அளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோல்

திருவின் உருவங் குறித்தஅப் போதே
திருமலந் தீர்ந்து சிவனவ ளுமே. —திருமந்திரம், 2659.

காட்டுங் குறியுங் கடந்தவர் காரணம்
ஏட்டின் புறத்தில் எழுதிவைத் தென்பயன்
கூட்டுங் குருநந்தி கூட்டிடி னல்லது
ஆட்டின் கழுத்தில் அதர்கிடந் தற்றே.

—திருமந்திரம், 2937.

இது சம்பிரதாய ஞானமாக வருவது, 'சம்பிரதாயம்' என்ற திருமந்திரம் பார்க்க விளங்கும்.

பக்குவமற்ருேர்க்குத் தூல உடல்கொண்ட குரு விளக்கினுலும், ஆகாய மண்டலத்தில் விளங்கும் பரமகுரு சகாயமன்னியில் விளங்காது. பரமகுரு பக்குவமில்லாத வர்க்கு அருள் செய்ய மாட்டார் என்பது நிச்சயம். அதன் காரணமாகவே, சங்கேதக் குறியால் புராணக் கதையாக விளக்கப்பட்டது என்பதை அறியவும்.

மண்ணுலகில் வாழும் குருவை மதித்து வணங்குவதும், பொருள் அளிப்பதும், மதவாதிகளின் பிழைப்பு நெறிகளும் மனிதன் உண்மையான அறிவைப் பெறும் வரையில் தொடர்ந்து நடக்கக்கூடியதாகவே உள்ளன. உண்மையை அறிந்தாலும், பழக்க வாசனையால் பழமையை விட முடியாது குழம்புகின்றனர். அவ்விதக் குழப்பத்தில் மக்கள் மயங்குகின்றனர். இந்த நூற்ருண்டிலேயே இவ் விதம் நடை பெறும்போது, கல்வி பெருகாத நிலையில் ஆயிரம் ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்தவர்களின் வாழ்க்கை பக்திநெறிக்கே பெருமை கொடுத்ததில் ஆச்சரியப்படுவதற் கில்லை. அதிலும் வியப்புக்குரிய விஷயம், அந்தப் பக்தி நெறியின் மகா சூக்ஷமமான இரகசிய உண்மையை அடக் கியதே ஆகம ரகசியமாயிற்று. அவ்விதம் இரகசியம் பலவற்றுள்ளும் சிதம்பர இரகசியமும், திருப்பெருந்துறை ரகசியமும், மிகச் சிறந்தவைகளாகும்.

சிதம்பரத்தில் உள்ள கூத்தன் திருவுருவும், அதற்குப் பின்னால் உள்ள ஆகாயமும், உண்மையை அறிய உதவும் சாதன நெறியாகும். இந்த நடராஜ வித்தை சிந்துவெளி நாகரிகத்திலிருந்து தமிழகத்திற்கு வந்திருக்கக்கூடும் என ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். மனிதன், தன்னிடம் அறிவுருவான ஆகாயத்தை அறிந்தனுபவிக்க, ஒரு திருவுருவை அமைத்துத் தத்துவ உண்மைகளை அடக்கி, அதற்கு புறத்தில் புராணம் அமைத்துப் பெருமையைக் கொடுத்துவிட்டுச் சென்றனர். உண்மையை அறியாதபடி, புராணக்கதையும் நம்பிக்கையும் மக்களை ஆட்டிக் கொண் டுள்ளன. இந்த நடராஜவித்தையைத் திருமூலர் தமது திருமந்திர நூலில் சிறப்பம்சமாக முடித்துக் கூறினர். மாணிக்கவாசகர் திருவாசகத்தில் இதை விளக்கினுர். பல பெரியோர்களும் பத்தியைப் பாடிப் பரப்பினர். மக்கள் அறிவில் ஞானநெறி கைகூடுவது அரிது, பக்திநெறி எளிது என்றும் போதித்து விட்டனர். பத்திநெறியில் காலமெல்லாம் உழைத்து, தன்னுண்மையை அறியாதுள்ள வர்க்கு எடுத்துச் சொன்னுலும், எடுத்துக்கொள்ளும் மனம் பக்குவம் பெறவேண்டும். வாசகர்கள் புலமை மிக்கோர் கூறுவதை உண்மை என்று மயங்குவதும் ஒரு காரணமாக உள்ளது. புலமை மிக்கோர் சுருதியில் கண்ட சொற்களுக்கு அவரவர்க்குத் தோன்றும் முறைமையில் விளக்கம் செய்து கற்பனை உலகில் நடைபோட்டு மகிழ்ந் தனர். இவர்களால் பெற்ற பேறு உண்மைக்குப் போட்ட ஒரே முழுக்கில் முடிந்து விட்டது. சில எடுத்துக்காட்டுகள் கொண்டு இப்பகுதியில் விளக்கினுல்தான், பின்வரும் பகுதி களுக்கு விளக்கம் பெறக்கூடும் என்று விளக்குகின்றேன்.

சைவசமயத்தில் சமய குரவர்களாக உள்ளவர்கள் மாணிக்கவாசகர், திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆவார்கள், சந்தான குரவர்கள் வழியில்

மெய்கண்ட தேவருக்குப் பின்வந்தோர் சிறப்பியல்பைப் பெற்றனர். மெய்கண்டாரின் பல மாணவர்களுள் உண்மை விளக்கம் இயற்றிய மனவாசகங்கடந்தாரும், சிவஞான சித்தியாரும் இருபா இருபஃதும் எழுதிய அருணந்தி சிவமும் நூல் இயற்றிய இருவராவர். சிவஞான சித்தியார் நூலில் 'தன்மதம் நிறுவுதல்' என்ற கொள்கை யில் தத்துவ விளக்கங்களும், இறை, உயிர், தளைகளைப் பற்றியும் விளக்கிச் சகலருக்கு நூல் கூறுவதாகக் கூறிச் சென்ருர்.

இந்த நூலில், மேலான அறிவு படைத்த விஞ்ஞான கலருக்கு அடையும் நெறியைக் கூறவில்லை. சிவபூஜை, குண்டமண்டல விதிகளுடன் கூடிய சமய, விசேஷ, ஆசாரிய முறைகளை விஸ்தரித்து, ஞான யோகத்தைச் சுருக்கி, ஆசாரியன்பால் கேட்டறியவும் என்று முடித்து விட்டார்.

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராண
நல்லவாக மஞ்சொல்ல வல்லவா மென்னு
மூனத்தா ரென்கடவ ரஞ்ஞா னத்தா
லுறுவதுதான் பந்தமுயர் மெஞ்ஞா னந்தா
னுனத்தாலது போவதுலர் கதிர்முனி ருள்போ
லஞ்ஞானம் விடப்பந்த மறுமுத் தியாகு
மீனத்தார் ஞானங்க ளல்லா ஞான
மிறைவனடி ஞானமே ஞான மென்பர்.

சூரியகாந் தக்கல் லினிடத் தேசெய்ய
சுடர்தோன்றி யிடச்சோதி தோன்று மாபோ
லாரியனு மாசான்வந் தருளாற் றேன்ற
வடிஞான மான்மாவிற் றேன்றுந் தோன்றத்
தூரியனுஞ் சிவன்றேன்றுந் தானுந் தோன்றுந்
தொல்லுலக மெல்லாந்தன் னுள்ளே தோன்றும்
நேரியனுய்ப் ‍பரியனுமா யுயிர்க்குயிரா யெங்கு
நின்றநிலை யெல்லாமுன் னிகழ்ந்து தோன்றும்,

இறைவனடியை அறியும் ஞானமே சிறந்தது என்று கூறி, சூரியகாந்தக் கண்ணுடி. சூரியன், பஞ்சு என்ற உவமை முகத்தால் ஞானதீட்சையை விளக்கினுர். சூரியன் வெய்யில் இல்லாதபோது சூரியகாந்தக் கண்ணுடியால் பஞ்சைப் பற்றவைக்க முடியாது. வெய்யில் நன்ருக இருந்தாலும், சாதாரணக் கண்ணுடியால் பற்றவைக்க முடியாது. பஞ்சு ஈரமாக இருந்தால் முன்னிரண்டுஞ் சேர்ந்தாலும் பற்ற வைக்க முடியாது. 'மூன்றும் தக்கவாறு பொருந்தில் பற்ற வைக்க முடிகிறதுபோல், மெய்ஞ்ஞான அனுபவம் பெற்ற ஆசிரியன், பக்குவமுள்ள சீடன், இறைவனருள் மூன்றும் பொருந்தில் சாதகனிடம் தன்னுண்மையும், இறைவனது உண்மையும் அனுபவ அறிவாய்த் தொழில்படும் என்று கூறியுள்ளார். அவ்விதம் பொருந்தில் உலக காரணத்தை இருந்தவிடத்தில் இருந்தே பெறலாம் என்று கூறியுள்ளார். அவர் சிவாசாரியராக யிருந்தபடியால் ஞானவிஷயத்தைச் சங்கிரகமாக்கிக் கிரியை விஷயத்தால் தெளிவுபடுத்திச் சென்ருர்.

மனவாசகங் கடந்தார். தத்துவங்களே விளக்கிச் சாதனத்தையும் விளக்கிச் சென்ருர்.

எட்டு மிரண்டு முருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள்—சிட்டன்
சிவாய நமவென் னும்திருவெழுத் தஞ்சாலே
யவாய மறநின்ருடு வான்.

ஆடும் படிகே ணல்லம்பலத் தானேயனே
நாடுந் திருவடி யிலேநகரம்—கூடு
மகார முதரம் வளர்தோள் சிகரம்
பகரு முகம் வாமுடியப் பார்.

எட்டும் இரண்டும் உருவான குறியில் இறைவன் நடித்தருள்வான் என்றும், அவன் மந்திரம் சிவாயநம வென்றும், பஞ்சாக்கரங்கள் நிற்குநிலேயையும் விளக்கிச்

சென்றார். அநுபவமற்ற கிரியைவழிக் குருக்கள் பஞ்சாக் கரத்தை காதில் ஓதிச் சீடர்களை அனுப்பிவிடுகின்றனர். சீடர்களும் ஓதியே அவர்கள் வாழ்நாளைக் கழித்து மறைந்தனர்.

ஞானப் பொக்கிஷத்தையே செய்த மணிவாசகர் அப்பேறு தனக்கு அருளின்வழிக் கிடைத்ததே தவிர, முறையான வழியில் அடையவில்லை என்பதைத் தெளி வாகவே கூறியுள்ளார்.

கட்டறுத் தெனை ஆண்டுகண் ணாரநீறு
இட்ட அன்பரொடு யாவருங் காணவே
பட்டி மண்டபம் ஏற்றினை ஏற்றினை
எட்டி னோடுஇரண் டும்அறி யேனையே.

—திருச்சதகம், திருவாசகம்.

திருமூலர் காலத்திலேயே, கிரியை வழியில் நிற்போர் எட்டும் இரண்டையும் அறியவில்லை என்று காட்டியும் அதை அரிய ஒரு திறவுகோலும் கொடுத்துள்ளார்.

எட்டும் இரண்டும் இனிதறி கின்றிலர்
எட்டும் இரண்டும் அறியாத ஏழையர்
எட்டும் இரண்டும் இருமூன்று நான்கெனப்
பட்டது சித்தாந்த சன்மார்க்க பாதமே.

—திருமந்திரம், 986.

காணகி லாதார் கழிந்தோடிப் போவர்கள்
நாணகி லாதார் நயம்பேசி விடுவர்கள்
காணகி லாதார் கழிந்த பொருளெலாங்
காணகி லாமற் கழிகின்ற வாறே. —திருமந்திரம், 716.

கழிகின்ற அப்பொருள் காணகி லாதார்
கழிகின்ற அப்பொருள் காணலு மாகுங்

கழிகின்ற வுள்ளே கருத்துற நோக்கிற்
கழியாத அப்பொருள் காணலு மாமே.

—திருமந்திரம், 762.

கண்ணன் பிறப்பிலி காணந்தி யாயுள்ளே
எண்ணுந் திசையுடன் ஏகாந்த னயிடுந்
திண்ணென் றிருக்குஞ் சிவகதி யாநிற்கும்
நண்ணும் பதமிது நாடவல் லார்கட்கே.

—திருமந்திரம், 763.

குறிப்பு : கண்ணன்—முக்கண்ணுடைய சிவபெருமான்.

நாடவல் லார்க்கு நமனில்லை கேடில்லை
நாடவல் லார்கள் நரபதி யாய்நிற்பர்
தேடவல் லார்கள் தெரித்த பொருளிது
கூடவல் லார்கட்குக் கூறலு மாமே.

—திருமந்திரம், 764.

கூறும் பொருளி தகார வுகாரங்கள்
தேறும் பொருளிது சிந்தையுள் நின்றிடக்
கூறு மகாரங் குழல்வழி யோடிட
ஆறும் அமர்ந்திடும் அண்ணலு மாமே.

—திருமந்திரம், 765.

அண்ணல் இருப்பிட மாரும் அறிகிலர்
அண்ணல் இருப்பிடம் ஆய்ந்துகொள் வார்களுக்
கண்ணல் அழிவின்றி உள்ளே அமர்ந்திடும்
அண்ணலைக் காணில் அவனிவ னகுமே.

—திருமந்திரம், 766.

வட்டங்க ளேழு மலர்ந்திடும் உம்முளே
சிட்டன் இருப்பிடஞ் சேர அறிகிலீர்
ஒட்டி யிருந்துள் உபாயம் உணர்ந்திடக்
கட்டி யிருப்பிடங் காணலு மாகுமே.

—திருமந்திரம், 768.

காணலு மாகும் பிரமன் அரியென்று
காணலு மாகுங் கறைக்கண்டன் ஈசனைக்
காணலு மாகுஞ் சதாசிவ சத்தியுங்
காணலு மாகுங் கலந்துடன் வைத்ததே.

—திருமந்திரம், 869.

'குல சூடாமணி நிகமம்' என்ற ஒரு சாக்த நூலில் 'ஓம்' என்ற அக்ஷரத்தைக் கூறாமல், மந்திரத்தை மாத்திரம் சொல்லிக் கொடுக்கக் கூறுகிறது. முக்கியமான சிறந்த உத்தம சீடனுக்குப் பிரணவத்தை இரகசியமாகக் கூறும்படி கூறுகிறது. அத்தகைய பிரணவத்தைப் பக்தி காண்டிகள் வாயினுல் பலமாக உச்சரித்தால், ஓம் மந்திரத்தின் செயல் தன்னிடம் அருளாகப் பதிந்துவிடும் என்ற நம்பிக்கையில், ஆரவாரத்துடன் உச்சரித்து மகிழ்கின்றனர்.

அவர்கள் நம்புவது உண்மையாயிருக்கவேண்டுமானுல் மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி. ஆக்ஞை, சகஸ்ரதளம் என்ற ஏழு ஆதாரங்களும் செயல்படவேண்டும்; சுழுமுனு நாடி திறக்க வேண்டும்.

சிரசில் விந்து நாதங்கள் விளங்க வெண்டும்.

சாக்தவழிபாட்டிலோ, சைவ வழிபாட்டிலோ, அவ்வித வெளிப்பாடு புறவழிக் கிரியையில் அமைந்ததாகக் காணப்படவில்லை. எனினும், பழக்கத்தை விடாமல் பற்றிக் கொண்டுள்ளனர். ஏதோ ஒரு சிலருக்கு, அவர்களை அறியாமலே ஆதாரங்கள் தொழில்பட்டுச் சக்திமான்களாக இருந்துள்ளனர். இத்தகையோர் தங்கள் அனுபவத்தைப் பக்தியால் விளைந்ததாகக் கூறிச் சென்றனர்.

போதறி யாது புலம்பின புள்ளின
மாதறி யாவகை நின்று மயங்கின
வேதறி யாவணம் நின்றனன் எம்மிறை
சூதறி வாருச்சி சூடிநின் றுரே.

—திருமந்திரம், 2220

சித்தர்கள் உண்மையை அநுபவமா யறிந்தவர்கள். ஆனுல், திருமூலரைப்போல் விளங்கும்படியாக விளக்க வில்லே அவர்கள். மறைத்துப் பரிபாஷையாகவே பலர் கூறி யிருக்கிருர்கள். உண்மையை அறிந்த பிறகுதான் விளங்கும். உண்மையை அறியாது படித்துத் தெரிந்துகொள்ளலா மென்று முயன்ருல், ஆபத்தில் விடக்கூடிய பரிபாஷை களால் கூறப்பட்டுள்ளது. அவர்களுள், போகரும், கோரக் கரும் உண்மையைச் சூதாக மறைத்தும் மறைக்காத முறையிலும் கூறியுள்ளார்கள். கோரக்கர் சந்திரரேகை என்ற நூலிலிருந்து, கீழே சில பகுதிகள் கொடுக்கப் படுகிறதைக் காணவும்.

காப்பதற்குக் காருண்யந் தாயே யல்லால்
 காசினியி லெவர்க்குண்டு கவலே தீர்க்க
மூப்புபிணி சாக்காடு துன்பம் நீங்க
 முறையுடனே ஞானசித்து யோக மார்க்கம்
ஏய்ப்பின்றிக் காயகற்ப மிகத்து ளோற்கு
 எடுத்துரைப்பேன் நீடுழி கால மோங்க
வாய்ப்புடனே வாசிபரி வமுதஞ் சூட்சம்
 வண்மையுடனே விந்துநிலே வளமே சந்திரன்.

சந்திரனும் விந்துவும் ரவியோ டெய்தி
 சருவாமல் மகாரமேல் வட்ட மாச்சு
மந்திரஞ்சொல் பிரணவமாய் மயங்கா மல்ஓம்
 மணியார பேரிசுர மறைமுன் னெக்கும்
சந்திரஞ்சேர் ஜீவன்மா லும்ருத் திரன்
 சத்திசுழு முனேயமுதபீட சுரபி விந்து
அந்தமதாய் அகரஉயி ரனேத்துள் ளாகி
 அருபவெளி யகண்டா கார மாச்சே.

காரணமாம் பரம்பொருளே கனக வாசல்
 கால் மேலாகும் கீழாகும் ஆத்ம சோதி
வாரணனர் கொலுவிருக்கும் வழிநீர் கோணம்
 வலமிடமாய் சுழன்றுநிற்கும் வட்டம் மத்தி

ஊறலது ஊறியெங்கும் உச்சி மையம்
உண்ணுக்கு மத்தியந்தான் உமையாள் நாட்டம்
தாரகத்தின் தடைப்பூட்டு நந்தி மேரு
தனஞ்செயனு ரிருக்குமிடந் திரமாம் தத்துவம்.

தத்துவங்கள் தொண்ணூற் ருறுங் கோசம்
தாரணையுள் தானன அவஸ்தை கும்பம்
வெத்திதரும் புருவமையம் உதிப்பே உந்தி
விளங்கிவரு மீராறு மிருக்கு மில்லம்
வித்திருந்த இடஞ்சக் கரம்சு ழுத்தி
இருகோணம் மூவரிடை சயனம் மேடே
ஒத்திருந் தாடுமைவர் சிறந்த கொம்பு
ஓராம லாதிவட்டம் பரமு மாமே.

அம்பரமோ டாறுதலம் அன்பா லம்மை
அமைந்தகரு வூராகு அந்தரத் தூசல்
கும்பரச பூரகமே குபேர பிர்மன்
குறையாத பாலமையங் குலவும் நாடு
மும்முதலாம் முச்சந்தி முனையே லிங்கம்
முயங்கா தவட்டம் அயன் பீடம்
தம்பவொளி ஒரெழுத்து நாத மாச்சு
தங்கிநின் றசதாசிவன் தடஞ்சூழ் வெளியே.

வெளியிலிரு வாசல்நவ கோணத் தாடும்
விடங்கோவில் இதக்கமில்லாக் கூற்றன் காவல்
சுழிமாறல் மறலியிட பிறட்டே யாகும்
சோராத ஆத்ம வெளி சூட்சம்
தெளிவான அமுதரசஞ் சூலி மாலி
திரைகடலும் மலைவாரி தீரா நெஞ்சம்
அழிவில்லா மனமாயை அரியின் தூண்டல்
அவனெனவும் நீயெனவு மறைந்த துள்ளே.

உள்மூல மறியாமல் ஒடிஓடி உழன்று
கெட்ட மாந்தர்களும் கோடா கோடி
பள்ளமீதென் றுணராது பார்த்து ஏங்கிப்
பாருலகில் பலவிதமாய்ப் பாவஞ் செய்து

நள்ளிருளை விலக்குதற்கு வழிதான் காணார்
நதிகளெல்லாம் நீராடி நயந்துசென்று
கள்ளமுடை' மனத்தவராய்க் கதைகள்பேசிக்
காரணமாம் பூரணத்தைக் காணார் மாட்டே.

மட்டிலடங்காத நன்னூல்கள் மறைகள் மற்றும்
மனந்தேற உணர்ந்தாலும் மதிதான் காணார்
அட்டியின்றி யதனை அறிந்திட் டாலும்
அலைமனத்தை அகத்தடக்கார் ஆண்மை கொள்வார்
எட்டிரண்டு மின்னதென்று மியம்ப மாட்டார்
எவர்கட்கும் யாங்கள்குரு வேன்றே சொல்வார்
திட்டமுடன் பொருள்கேட்டால் சிவன்தான் விஷ்ணு
திறமையென்று ஓதுவார்தீ விரமாய்த் தானே.

தீவிரமாய்க் காவியங்க ளுணர்ந்தா லென்ன
திறமையுடன் தினகரனைத் திருத்திக் கூட்டார்
கோவிலென்றுங் குளங்களென்றும் குதர்க்கம் பேசிக்
குருவிருக்கும் இடங்காணார் குளத்தைக் காணார்
ஆவியது அடங்கிநிற்கும் தலத்தைக் காணார்
ஆண்பெண்தா னின்னதென்று அறியார் மாடே
காவிகட்டி சாம்பல்பூசி கபடங் கொண்டு
காசுபணம் பறிப்பார் கள்ளர் பாரே.

பாரிலுள்ளோர் குறிப்பதனை அறிய வேண்டி
பட்சமுடன் பரஞ்சோதி நடனங் காண்பீர்
வீரியமாய் மதியதனைத் தூக்கி யூணி
வெய்யவ னிலிறக்கிடவே விசனம் போச்சு
காரிருளுந் துலங்கிபெருங் களங்க மேகிக்
கனியோடு நற்றேனமுதங் கலந்துள் ளாட
கோரியெந் தன்குருபரனும் உமையுஞ் சொன்ன
கொள்கையறி குவலயத்திற் காணிப் பொன்னே.

ஆணிப்பொன் னம்பலத்தில் ஐயன் கொண்ட
ஆட்டமதை அறிந்திட்டா லிரவி நீங்கா
வேணியென்ற என்தாயர் விமலி நீலி
விளங்கிடவே அமுதப்பா லீந்து காப்பாள்

கோணிடாது குருவிருக்கு மிடந்தான் தோன்றும்
கொண்டலொளி திறந்துமலர்க் குமுதம் வீசும்
நாணியது நழுவாமல் நயந்தூ டாடும்
நாதாந்தப் பேரருளா லச்சம் போமே.

அச்சமின்றி அடியேன்கொள் அநுட்டா னத்தை
அறைந்திடுவேன் தீட்சைபெற்ற மார்க்கந் தானும்
இச்சையுட னிலங்கிடவே யினமாய்க் கோரி
இடகலையும் பிங்கலையும் இழுத்து மாறி
பட்சமுடன் பவந்தொலையப் பரனை யுன்னப்
பராபர னும் பார்வதியும் பக்க லெய்தி
நிட்சயமா யெனக்குரைத்தார் ஓம் என்றோர் சொல்
நிலைபிசகா திருந்ததனைத் துதித்திட்டே டனே.

திருமூலர், புறத்தே செய்யும் சதாசிவ பூசையைக் கூறி விட்டு, அகத்தே செய்யும் சிவபூசையைக் கூறியுள்ளார். புறத்தே செய்யும் வழிபாடு பஞ்சோபசாரத்துடன் கூடியது. அதாவது சந்தனம் இடுவது, பூப்போட்டு அர்ச்சிப்பது, தூபம் காட்டுவது, தீபங்காட்டுவது, நைவேத்தியம் காட்டுவ தென்பனவாம்.

ஞானி இவற்றில் ஒன்றையும் செய்வதில்லை. இதன் தத்துவத்தை உணர்ந்து பிருதிவிமயமான ஆசையைக் கடவுள் பத்தியாக மாற்றுவதில், சந்தனம் சாற்றிய காரியம் முடிவுறுகிறது. நைவேத்தியம் எல்லாம் ஜபத்தால் பக்குவப் பட்டவைகளே. மணிபூரகம் ஜலத்தி னிருப்பிடமாகும்; இதுவே உந்திக்கமலம். இதுதான் ஆசையின் உணர்வு தொழிற்படுமிடமாகும். இதை மாற்றினபோது தன்னையே அர்ப்பணம் செய்தவனாகின்றான். தூபம் காட்டுவது வாயுவின் காரியமாகும். அபானனே மேலெழும்பிச் செல்லும்போது வாயுவின் அர்ப்பணம் ஆகிறது. ஆத்ம தேஜஸை அகண்டத்தில் சேர்ப்பதில் தீபமாகிறது. வாசனை

புஷ்பம் ஆகாய மயமான தன்னுண்மையை அகண்டத்தில் சேர்ப்பிக்கிறதால், ஆகாய பூதம் அர்ப்பணமாகிறது.

பஞ்சபூதங்களின் சூக்குமநிலை பஞ்ச தன்மாத்திரை களாகும். சப்த ஸ்பரிச ரூப இரச கந்தங்கள் சப்தத்தில் ஒடுங்கும்போது, ஏனையநான்கும் அதில் ஒடுங்கிவிடுகின்றன. சப்தம்தான் நாதம் எனப்படுவது, நாதம் நாதாந்தத்தில் ஒடுங்கினபோது, தேகதர்மத்தின் ஆற்றல் அடங்கிச் சமாதி யுறும்போது தன்னையே அர்ப்பணித்து விடுகிறான்.

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே.

—திருமந்திரம், *1823.*

இம் மந்திரத்தில் கோயில், ஆலயம் என்னும் சொற்கள் உள்ளன. இவை இரண்டும் ஒன்றல்ல. உள்ளுதலைச் செய்யும் மனமண்டலம் தேகத்தைக் கடந்தும், உள்ளும் சூழ்ந்தும் உள்ளபடியால், உள்ளம் தலைவன் வாழும் பெரிய கோயிலாயிற்று. அத்தகைய தலைவனின் ஆற்றல் தேகத்தில் சுருங்கியுள்ளது என்பதை ஆலயம் (ஆ+லயம்,) என்றார். வள்ளலாகிய சிவத்தையடையத் தொண்டையிலிருந்து மண்டைக்குச் செல்லும் கோபுரவாயிலை அறியவேண்டும். அவ்விதம் அறிந்தவரது ஜீவனே சிவத்தைப் பூசிக்கும் குறி யாகும். அந்நிலை கைவரப் பெறின், ஐம்புலனறிவும் ஒருசேர அமைந்து பெரிய விளக்காய் விடும் என்றார். இவ்விதம் அமையச் சம்பிரதாயத்தில் சூக்ஷமத்தில் விளக்கினார்.

உடல்பொருள் ஆவி உதகத்தாற் கொண்டு
படர்வினை பற்றறப் பார்த்துக்கை வைத்து
நொடியின் அடிவைத்து நுண்ணுணர் வாக்கிக்
கடியப் பிறப்பறக் காட்டினன் நந்தியே.

—திருமந்திரம், *1778*

உயிருஞ் சரீரமும் ஒண்பொரு ளான
வியவார் பரமும்பின் மேவும் பிராணன்
செயலார் சிவமுஞ் சிற்சத்தி யாதிக்கே
உயலார் குருபரன் உய்யக்கொண் டானே.
—திருமந்திரம், 1779

பச்சிம திக்கியே வைத்தஆ சாரியன்
நிச்சலும் என்னை நினையென்ற வப்பொருள்
உச்சிக்குங் கீழது வுண்ணுக்கு மேலது
வைச்ச பதமிது வாய்திற வாதே. —திருமந்திரம், 1780.

பின்னர், விநாயகரகவலிலே இவை,

இடைபிங் கலையின் எழுத்தறி வித்துக்
..........................................
காலால் எழுப்புங் கருத்தறி வித்தே

என்று வருகிறது. அங்கு மேலும் தெளிவாக்குவோம்.

அகப்பூசை செய்பவர் பஞ்சோபசாரம் புறத்தே செய்வது போல் செய்ய வேண்டுமா என்ற வினுவுக்கு எல்லாம், படைத்துள்ள இறைவனுக்கு அர்ப்பணிக்க வேண்டியது நமது அன்பு ஒன்றேதான் என்று திருமூலர் கூறியுள்ளார்.

வேட்டவி யுண்ணும் விரிசடை நந்திக்குக்
காட்டவும் நாமிலங் காலையும் மாலையும்
ஊட்டவி யாவன வுள்ளங் குளிர்விக்கும்
பாட்டவி காட்டுதும் பாலவி யாமே. —திருமந்திரம், 1824.

பான்மொழி பாகன் பராபரன் தானுகு
மான சதாசிவன் தன்னையா வாகித்து
மேன்முகம் ஈசான மாகவே கைக்கொண்டு
சீன்முகஞ் செய்யச் சிவனவ னுகுமே. —திருமந்திரம், 1825.

நினைவதும் வாய்மை மொழிவது மல்லாற்
கனைகழல் ஈசனைக் காண வரிதாங்
கனைகழல் ஈசனைக் காண்குற வல்லார்
புனைமலர் நீர்கொண்டு போற்றவல் லாரே.

—திருமந்திரம், 1826.

மஞ்சன மாலை நிலாவிய வானவர்
நெஞ்சினுள் ஈசன் நிலைபெறு காரணம்
அஞ்சமு தாம்உப சாரம்எட் டெட்டொடும்
அஞ்சலி யோடுங் கலந்தர்ச்சித் தார்களே.

—திருமந்திரம். 1827.

இங்குக் கூறியுள்ள பூவும் நீரும் புறத்தேயுள்ளவைகளல்ல. சாதகனது கண்களும் மேலேறும் உணர்வுந்தான். இப்பூசையில் சாதகன் எல்லாம் படைத்தவனுகின்ருன் என்பதையும், கீழே செல்லும் உணர்வு மேலே மாற்றப் பட்டபோது, பிரணவத்தின் விந்து நாதங்கள் உதிக்கின்றன என்பதையும் அறியவும். விந்துநாத உதிப்பின் உணர்வே சித்தர்காட்டிய நெறியாகும்.

சித்தத் தின்உள்ளே சிறக்கின்ற நூல்களில்
உத்தம மாகவே ஓதிய வேதத்தின்
ஒத்த உடலையும் உள்நின்ற உற்பத்தி
அத்தன் எனக்கிங் கருளால் அளித்ததே.

—திருமந்திரம், 84.

நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான்பற்றப் பற்றத் தலைப்படுந் தானே. —திருமந்திரம், 85.

## (25—30)

உவட்டா உபதேசம் புகட்டிஎன் செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையுங் காட்டி
ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்

இன்புறு கருணையில் இனிதெனக் கருளிக்
கருவிகள் ஒடுங்கும் கருத்தினை அறிவித்து
இருவினை தன்னை அறுத்திருள் கடிந்து

(இ - ள்) வெறுப்பு இல்லாத (மிக இனிய ஏகாட்சர மந்திரத்தை) உபதேச மொழியினை எளியேனது செவிப் புலனில் அளித்து, ஒருபோதும் வெறுக்கத்தகாத தெளிவு பொருந்திய ஞானத்தை அடியேனது அநுபவத்தில் காணும்படி செய்து, உணர்ச்சி, சுவை, ஒளி, வாசனை, ஓசை யாகிய ஐந்து அறிவுகளையும் (உலகப் பற்றில்) செல்லாது தடைப்படுத்தும் தந்திரத்தை, இன்பத்தை அடைவதற்குக் காரணமான (தனது) பேரருளினாலே அடியேனுக்கு இனிமையாகத் தெரிவித்து, (தேகத்திலுள்ள), தத்து வங்கள் (உலக விஷயங்களில் செல்லாது தியானத்தில் பொருந்துமாறு) ஒடுங்குதற்குரிய வழிவகைகளை (அடியேன் தெளியும்படி) அறிவித்து, (ஆகாமியமாகிய நல்வினை, தீவினை என்ற) இருவினைகளின் தொடர்பை நீக்கி, ஆணவ இருளை வலிகெடச் செய்து.........

### விளக்கம்

**உவட்டா உபதேசம் புகட்டிஎன் செவியில் :**

உலகினர் உபதேசம் செய்யும் மந்திரங்கள் குருவால் வாயால் சொல்லிச் சீடன் காதாற் கேட்டுக்கொள்வது தான். ஞான குருவால் பிரணவ உபதேசம் கொடுப்பது வாயினாற் சொல்லிக் காதினால் கேட்பதல்ல. அதனால் அசபை என்று பெயர் வந்தது. இது சபிக்காத மந்திரமாக ஜீவர்களிடம் இயல்பாக உள்ள ஸ்பந்த ஞானமாகும். ஸ்பந்தம் என்றால் ஆகாய நுண்ணணுக்கள் மனிதனின் எண்ண சத்தியால் சலனத்தை யுண்டாக்கி ஒருவித கோஷத்தை எழுப்பும். அதற்கு நாதவொலி என்றும்,

**பிரணவ யோகம் என்றும் பெயர். இந்தச் சத்தினி பாதம் தீவிரம் தீவிரதரம் பொருந்தினவருக்கு உரியது.**

பெற்றிடிற்றீ விரமாகுஞ் சத்தினி பாதம்
பேசியிடுஞ் சாந்திகலைப் பாச நீக்கி
உற்றிடவே சிவசமமா முத்தி யென்றே
உரைசெய்யும் பரமுத்தித் தானமுறவளிப்பன்
பற்றிடுமிப் பதமுத்தி மூவகையோர் தமக்குப்
பரமுத்தி பிரளயத்தேபர மனளித் திடுவான்
சற்றுமோபற் றில்லாத்தீவிர தரமாஞ் சத்தி
தான்பதியிற் சத்தியோநிரு வாணந் தானே

—சிவநெறிப் பிரகாசம்.

சத்தியோநிரு வாணஞ்சஞ் சிதமாம் வினைகள்
தம்முடனே பிராத்தவினை கடனு வாதி
அத்தனையு மொழித்தருளி யகண் டாகாரத்து
அளவிறந்த வானந்த மாகிச் சுத்த
சித்துருவாய் நித்தமாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழுமொளி யாய்மனத்தாற் சிந்திக்க வொண்ணு
நித்தனுடன் வேரறவே நிறுத்த லென்றே
நிகழ்த்தியிடுஞ் சித்தாந்த முத்தியிந்த நிலையே.

—சிவநெறிப் பிரகாசம்

மந்திரங்கள் மருந்துகளோர் தொழில்க ளின்றி
வாய்த்திடவே கருடபா வனைமனத் தினுலே
சிந்தவிட மானதுதான் தீர்க்கும் பார்வைச்
செயலெனவே சிவஞான தேசிகன்முன்
பந்தமறுத் தாணவத்தின் பாச நீங்கப்
பார்த்தருளிப் பரிசத்தால் மாயையறப் பார்த்தே
முந்துவினை கலைகள்சோ தனையாற் போக
முளைக்கும்வினை யொழித்தற்குமூ லமனு மொழிவான்.

—சிவநெறிப் பிரகாசம்.

குறிப்பு : **'மூலமனு' என்பது, பிரணவமாகும். இதற்குச் சாம்பவ தீக்கை என்று பெயர்.**

பிறியாத தண்ணருட் சிவஞா னியாய் வந்து
பேசரிய வாசி யாலே
பேரின்ப வுண்மையையளித் தனையென் மனதறப்
பேரம்பலக் கடவு ளாய்
அறிவா யிருந்திடுநா தவொலி காட்டியே
அமுர்தப்பிர வாக சித்தி
அருளினை யலாது திருவம் பலமுமா கியெனை
ஆண்டனைபின் எய்தி நெறியாய்க்
குறிதா னளித்தனைநன் மரவுரி கொளந்தணக்
கோலமாய் அசபா நலங்
கூறினபின் மௌனியாய்ச் சும்மா இருக்கநெறி
கூட்டினை யெலா மிருக்கச்
சிறியேன் மயங்கிமிக வறிவின்மை யாவனோ
தேடறிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

—தாயுமானவர் பாடல்

**தெவிட்டாத ஞானத் தெளிவு :**

உலகில் உள்ள எந்தப் போக வஸ்துவும் துன்பம் கலவாததாகவிருக்கவில்லை; இறைவன் ஒருவனே துன்பம் கலவாத பொருளாகும் என்ற உண்மையை ஞானிகள் அறிந்து உலகினர்க்குக் கூறினர். ஆனால், அந்தப் பக்குவம் வந்தால்தான் அவ்வுண்மையின் இரகசியம் விளங்கும். சொல்லளவில் உணர்வதும், முடிவுக்கு வருவதும் கடினம்தான்.

அதிக உணவு உண்டவன், தாமச குணமுடையவனாய் உலகில் பவபாவங்களைச் செய்யத் துணிவு பெறுகிறான். மனமும் உடலும் கெட்டு, மரணத்தை அகாலத்தில் வரவழைத்துக் கொள்ளுகிறான். மிகுசெல்வம் பெற்றோர் கள்வரால், அரசரால் கவராமலிருக்க சதாகாலமும் அதைப்

பற்றிய சிந்தனையாகவே யுள்ளனர். பலதுறைக் கல்வியை வருந்திக் கற்ருலும், அதனுல் உயிருக்குப் பயனில்லை.

இறைவன் இன்ப வடிவினன். அவனுடைய உண்மையான சத்து, சித்து நிலைகளை அறிந்து இறைவனுடன் பொருந்தினவர், இன்பமயமாகவே மனம் பொருந்தி விடுவதால், துன்பமயமான உலகின் துடக்கற்ற வராய் விடுகின்றனர், ''குறைவிலா நிறைவே கோதிலா அமுதே'' என்று மணிவாசகர் கூறினுர். அத்தகைய பொருளைச் சேர்ந்தவர்களும் அத் தகுதியை யடைந்து உடலில்லா அறிவுருவாகின்றனர். தகுதியைப் பெற்றபின் உடலுடன் இருந்தாலும் அவர்கள் பாதிக்கப்படுவதில்லை. மதுவை எடுக்கவந்த தேனீக்கள் முதலில் ஆர்வம் தீரப் பருகி மயக்கமுற்றுக் கிடந்து, பிறகு மயக்கம் தெளிந்து, மதுவை எடுத்துச் செல்கின்றன. அதுபோலவே ஞானி களும் அப் பேரின்பநிலையில் தங்குவதைவிட வேருென் றையும் பெரிதாகக் கருதவில்லை. அதுவே,

நியம லக்ஷணமும் இயம லக்ஷணமும்
ஆசனுதி விதபேதமும்
நெடிதுணர்ந் திதய பத்ம பீடமிசை
நின்றிலங்கு மசபாநலத்
தியலறிந் துவளர் குண்டலியை
இனிதிறைஞ்சி யவளருளினுல்
எல்லையற் றுவளர் சோதி மூலவனல்
எங்கள் மோன மநுமுறையிலே
வயமிகுந் துவரும் அமிர்த மண்டல
மதிக்குளே மதியை வைத்துநான்
வாய்மடுத் தமுத வாரியைப் பருகி
மன்றுமா ரமிர்த வடிவமாய்ச்
செயமிகுந்துவரு சித்த யோகநிலை
பெற்று ஞானநெறி யடைவனே
தெரிவதற் கரிய பிர்மமே யமல
சிற்சுகோதய விலாசமே.

—தாயுமானவர் பாடல்

அறிவாகி ஆனந்த மயமா யென்றும்
அழியாத நிலையாகி யாதின் பாலும்
பிறியாமல் தண்ணருளே கோயி லான
பெரியபரம் பதியதனைப் பெறவே வேண்டின்
நெறியாகக் கூறுவேன்கேள் எந்த நாளும்
நிர்க்குண நிற்குளம் வாய்த்து நீடு வாழ்க
செறிவான அறியாமை யெல்லாம் நீங்கச்
சிற்சுகம்பெற் றிடுபந்தந் தீர்க வென்றே.

—தாயுமானவர் பாடல்

பந்தமறு மெய்ஞ்ஞான மான மோனப்
பண்பொன்றை யருளியந்தப் பண்புக் கேதான்
சிந்தையில்லை நானென்னும் பான்மை யில்லை
தேசமில்லை காலமில்லை திக்கு மில்லை
தொந்தமில்லை நீக்கமில்லை பிறிது மில்லை
சொல்லுமில்லை இராப்பகலாம் தோற்ற மில்லை
அந்தமில்லை ஆதியில்லை நடுவு மில்லை
அகமுமில்லை புறமுமில்லை அனைத்து மில்லை.

—தாயுமானவர் பாடல்

இல்லையில்லை யென்னினொன்று மில்லா தல்ல
இயல்பாகி யென்றுமுள்ள வியற்கை யாகிச்
சொல்லரிய தன்மையதா யான்று னென்னத்
தோன்றுதெல் லாம்விழுங்குஞ் சொரூபமாகி
அல்லையுண்ட பகல்போல அவித்தை யெல்லாம்
அடையவுண்டு தடையறவுன் அறிவைத் தானே
வெல்லவுண்டிங் குன்னையுந்தா னுகக் கொண்டு
வேதமாய் பேசாமை விளங்குந் தானே.

—தாயுமானவர் பாடல்

தானான தன்மயமே யல்லால் ஒன்றைத்
தலையெடுக்க வொட்டாது தலைப்பட் டாங்கே
போனாலும் கர்ப்பூர தீபம் போலப்
போயொளிப்ப தல்லாது புலம்வே றின்றாம்

ஞானுகா ரத்தினெடு ஞேய மற்ற
ஞாதுருவும் நழுவாமல் நழுவி நிற்கும்
ஆனுலு மிதன்பெருமை எவர்க்கார் சொல்வார்
அதுவானுல் அதுவாவர் அதுவே சொல்லும்.

—தாயுமானவர் பாடல்

அதுவென்ருல் எதுவென்றென் றடுக்குஞ் சங்கை
ஆதலினுல் அதுவெனலும் அறவே விட்டு
மதுவுண்ட வண்டெனவுஞ் சனக ஞதி
மன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தா ரென்றும்
பதியிந்த நிலையெனவும் என்னை யாண்ட
படிக்குநிர் விகற்பத்தாற் பரமானந்தக்
கதிகண்டு கொள்ளவுநின் னருள்கூ ரிந்தக்
கதியன்றி யுறங்கேன்மேற் கருமம் பாரேன்.

—தாயுமானவர் பாடல்

ஞானத் தெளிவை அடைந்தவர்க்கு மேலும் மேலும் வேண்டுமென்ற ஒரு விஷயமுமில்லை. வேண்டிய நிறை மனம் பெற்றுவிட்டனர். அவர்கள் அடைந்தநிலை போதும் போதும் என்று சொல்லத் தக்கதாயுமில்லை. திருவாசகம், திருவண்டப் பகுதி குவளைக் கண்ணி கூறக் காண்க.

'அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி'

'திருவண்டப் பகுதி பார்க்க, அனுபவநிலை விளங்கும்.

'தெவிட்டல்' என்ருல், மேற்கொண்டு உண்ணமுடியாத ஒரு நிலையைக் குறிக்கும்.

ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம் :

இவ் வரிக்குப் பொருள் எழுதப் புகின், அதுவே ஒரு பெரும் புத்தகமாய்விடும். கூடிய வரையில் சுருக்கிக் கூறுகிறேன். ஆகமம் என்பது தந்திர சாஸ்திரம். அதாவது உண்மையை நேரே கூருமல் அதில் கூறியபடி செய்தால்

ஞானம் இயல்பாகவே பொருந்திவிடும் என்று கூறும். இது நேரே பிர்மத்தைக் காட்டாத படியால், விட்ட லக்கணையாகும். வேதாந்தம் காணும் பிரபஞ்சம் அசத்து, பிர்மமே சத்து என்றும், சத்தான பிர்மத்தை பற்றிக் கொண்டால் அசத்தான பிரபஞ்சம் இயல்பாகவே விட்டுவிடும் எனப் போதிக்கும். அதனுல், இது பிர்மத்தை விடாதலக்கணை என்பர்.

இந்த இருநெறியையும் ஒப்புக்கொண்டு, தேகத்தில் புதைந்து கிடக்கும் அறிவுருவான ஆன்மாவைத் தேகப் பிரக்ஞையினின்றும் பிரித்து, அகண்ட வஸ்துவுடன் இணைக்கும் நெறிக்கு விட்டுவிடாதநிலை என்பர். இப்போது எடுத்துக்கொண்டுள்ள இந்நூல், ஐம்புலனறிவேதான் தனதுரிமை என்ற ஆன்மாவைத் தேகஅறிவினின்றும் பிரிப்பதை விட்டுவிடாத லக்கணை என்பர். அதற்கு உபமானம் 'தசமபுருஷ நியாயம்' என்பர். அதாவது பத்துப்பேர் சேர்ந்து ஓர் ஆற்றைக் கடந்தனர். கரையேறின பிறகு அக் கூட்டத்தலைவன் தன்னைவிட்டு எண்ணிக் கண்ட போது ஒன்பது பேரையே கண்டான். அவன் தன்னைக் கணக்கில் சேர்க்காதபடியால் இழப்பை எண்ணி வருந்திக் கொண்டிருந்தான். வேறு ஒரு வழிப்போக்கன் இவர்களை எண்ணிக் காட்டி பத்துப்பேரும் உள்ளீர் என்று காட்டின பிறகு, தலைவனுக்குக் கவலைவிட்டு மகிழ்ச்சியடைந்தான். இது யோக நெறியாகும். ஒவ்வொருவகை யோக நூலும் ஒவ்வொரு வகையான அடிப்படையைக் கொண்டுள்ளது. ஹடயோகம் மூச்சுக் கதியைக் கும்பகம் செய்துவிட்டால் மனத்தின் செயல் நிறுத்தப்பட்டுச் சமாதியை அடையக் கூறும். கேசரியோகத்தில் பெருநாக்கை மடித்து உள்ளுக்குத் தள்ளிவிட்டால் சுவாசம் நின்றுவிடும், மனம் ஒய்ந்துவிடும் என்று கூறும். சித்தர்கள், பைரவி வித்தை, சாம்பவிவித்தை என்று இருநெறியைக் கண்டு, உலகினர்க்குப் பகிரங்கமாக்

காமல் மறைத்து, ஒரு சிலருக்கே சம்பிரதாயக் கிரமமாய் வழங்கிப் பக்குவான்மாக்களை உறுதிபெறும்படி செய்கின்றனர்.

பைரவி வித்தை:

ஒரு சத்தியே உலகமாய், இன்பப் பொருளாம் பல கோடி வகையாகப் பிரிந்து, தேகமாயும், தேகியாகவும், ஆத்மாவாகவும் உள்ளது. சத்தி சித்து ரூபிணி; அதில் விளங்கும் சத்து சிவம். ஆனந்த ரூபமானது ஆன்மாவாக உள்ளது. அகண்ட வியாபகமான ஆன்மா ஒரு அண்ட கோசத்தில் (முட்டை போன்ற வடிவத்தில்), பல கோடி ஆகாய அணுக்களின் சேர்க்கையால், ஒரு ஸ்பந்த (அசைவு) உணர்வுடன் கூடி, தேகத்தினுள்ளும் தேகத்தைச் சூழவும் இருந்து சிலந்தி வலையசைவைக் கொண்டு இறையைப் பற்றிக் கொள்வதுபோல், ஒவ்வொருவகை அசைவால் ஒவ்வொரு அறிவையும் பெற்றுத் திருப்தியடைகிறது. பஞ்சு மெல்லிய இழையாகி வடமாவதுபோல், ஆகாய மயமான ஆன்மா குணபேதத்தாலாகிய பலவான அறிவைப் பெற, அந்தக்கரணம் என்ற நுண்ணிய ஒளி அணுக்களுக்கு அறியும் ஆற்றலுடன் கூடிய ஜீவன் என்ற ஒரு பிரதிநிதியைப் படைத்து, அதன் வாயிலாக யாவற்றையும் அறிந்து கொள்ள ஏற்பாடு செய்துள்ளது.

அந்த ஜீவன் சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தம் என்ற ஞானத்தை, ஞானேந்திரியங்களாகிய காது, தோல், கண், நாக்கு, மூக்கு இவைகளில் பொருத்தி, அவ்வகையில் ஏற்படும் அசைவினால் ஒவ்வொருவகை அறிவைப் பெறுகிறது. பொறிகள் ஒவ்வொன்றும் ஒவ்வொருவகை அறிவைத் தான் அறிந்து ஜீவனுக்குச் சேதி சொல்லும். ஜீவனிடம் எல்லா அறிவையும் ஒருசேர வாங்கிக் கொள்ளவும், அவைகளைப் பரிசீலனை செய்யவும் உள்ள ஆற்றல் தேகங்கடந்தும் தேகத்திலும் உள்ளது. தேகத்திலுள்ளது மூளையின்

அணுக்களாகும். விளக்கின் சுடர் வெளிச்சத்தை அளிப் பதுபோல் ஜீவன் மூளையைக் கொண்டு செய்தவைகளேயும் செய்ய வேண்டியவைகளேயும் நிர்வாகம் செய்து கொள்ளு கிறது. மூளேயோ நாடிகளாலும், நாளமில்லாச் சுரப்பி களாலும், இரத்தத்தாலும், ஆதார சக்கரங்களாலும் நிர்வாகம் செய்கிறது. தேகம், ஜீவனுல் ஆளப்படுகிற தெனினும், ஆத்மாவின் ஒளி அணுக்கூட்டத்தால்தான் செயல்படுகிறது. ஜீவவொளியான ஆத்மா, எவ்விதம் மண்ணில் விதைத்த விதை தண்ணீர், மண்சத்து, சூரிய வொளியைக் கொண்டு வளருகின்றதோ, அதுபோல் அகண் டத்தில் சகலமும் இருந்தாலும் கொள்ளும் ஆற்றலுக்கு ஏற்பவே கிரகிக்கப்படுகிறது. அதுபோல ஜீவன் பிரம மாவாவதற்கு 'தன்னுண்மை' என்ற அகண்ட ஞான ஆற்றல் தன்னிடம் இருப்பதை அறிவது, உரை அறிவு எனப்படும்.

தக்கோர் கண்ட அநுபவத்தைக் கூறும் நூல் ஆசுமப் பிரமாணமாகும். அதை அநுபவத்தில் பெறக் கண்ட ஒருவன், 'தசமபுருஷ நியாயம்' போல் விளக்கவேண்டும். அவன் உணர்த்துவது உபாயமாயிற்று. குரு உணர்த்தியது, "நீ தேகி என்ற அளவில் நின்றுமொண்டு தேகத்தைச் செயல்படுத்திஞல், இதுகாறும் விளங்காமலிருந்த ஜீவன் உணரப்பட்டு தேகங்கடந்து விளங்கும் அண்டகோசத்தை அறிய முடியும்' என்ற உண்மைதான். அதற்குக் கிரியை வழியில் உள்ளவர்கள், பஞ்ச பிர்மமந்திரத்தால் ஜீவ வொளி பிரகாசமடைய அங்கநியாசம், கரநியாசம், தண்ட பங்கி, முண்டபங்கி, வக்த்ரபங்கி முதலியவைகளால், தின மும் நினேப்புக் கொள்ளுவதில் மாறிவிடும் என்று கூறுவர்.

மனிதனிடம் உள்ள ஆசையே மாபெரும் சத்தியாக மனிதனே ஆட்டிப் படைக்கிற படியாலும், அதனுல் பயத்தை அடைவதாலும், பயத்தைப் போக்கிக்கொள்ள

மிக்வும் பலமுள்ள ஒரு வழிபாட்டைக் கொண்டபோது அது பைரவி வித்தையாயிற்று. பைரவி—பயமுறுத்து பவள் என்று பெயர்.

தேகத்தின் ஆற்றல் பிராணனில் உள்ளது. பிராணன் வாயு உருவத்தில் உள்ளது. பிராணன் கீழ்முகங்கொண்டு காமத்தில் செயல்படும்போது அதற்கு அபானன் என்று பெயர். ஆப் என்ருல், நீர் என்று பொருள். நீர்த்தன்மை யான சுக்கிலம், சிறுநீர் முதலியவைகள் சிறப்பிடம் பெறுவது உந்தியின் கீழ்ப்பாகமாகும். ஆனந்தமடையும் போதெல்லாம் சத்தியின் நினைவிலிருந்தால் அபானனின் கீழிழுப்புத்தன்மையே மேல் முகங்கொண்டு, பிராண கதியை மாற்றி ஜீவவிளக்கம் பெற்று சமாதியடையலாம் என்பதேயாகும். இதுவே இல்வாழ்வான் மனைவியுடன் பொருந்தி இல்வாழ்க்கையை யோகமாக மாற்றும் நெறி. இதை நன்கு அறியவேண்டில், திருமந்திரம் பரியங்க யோகம், விந்து ஜயம் பார்க்க விளங்கும். இது சுந்தரர் தமிழ்நாட்டுக்கு •வாழ்ந்து காட்டிய நெறியாகும். இது மறைமுகமாக, ஆத்மஸமர்ப்பண பாவனையால் வெறும் பேச்சு ஜபமாகவும், கைத்தொழில் அனைத்தும் முத்திரை யாகவும், நடை பிரதக்ஷிணம் செய்வதாகவும், உண்டி முதலியன ஹோமமாகவும், படுத்துக் கொள்ளுதல் நமஸ் காரமாகவும், இன்னும் சுகமாக முயற்சியின்றி எனது செயல் எது உண்டோ அது எல்லாம் உன்னுடைய பூஜை முறையாகவும் ஆகட்டும் என்று ஆனந்த லஹரியில் கூறப் பட்டுள்ளது.

சமயா சாரமானத பூஜை
மொழிவது உன்செபம் முத்திரை பாணியின்
முயல்வது, எங்கும் நடப்பன கோயில்சூழ்
தொழில், அருந்துவ முற்றும் உன் ஆகுதி,
துயில்வணங்கல், களிப்பன யாவும்நீ,
ஒழிவுஅறும் களிஎன் செயல் யாவையும்

உனது நன்செய் பரிச்செய லாகவே
அழிவு:அறும்பதம் வைத்து அருள், பேர்ஒளி
அளிவிளைந்து, களிப்பு எழுநாதமே!

உலகில் உள்ள எல்லாச் சமயங்களையும் மூன்று வாக்கியத்தி லடக்கிவிடலாம்.

1. ஸ்பர்ச உணர்ச்சி ஆற்றல்.
2. சூரியனின் ஒளி ஆற்றல்.
3. ஆத்மாவின் ஆற்றல்.

ஸ்பர்ச உணர்ச்சி ஆற்றல் என்பது உடலாலோ மனத்தாலோ பொருள்களைப் பற்றிக் கொள்ளும் தன்மையால் உண்டாகும் உணர்ச்சி ஆற்றல். உடலால் பற்றிக் கொள்வது காமமாதிய வேகங்கள். இவைகளுக்கு இருப்பிடம் உருவ மனம். உருவ வழிபாட்டில் உள்ள பக்தன் தனக்கு வேண்டியதையெல்லாம் இறைவனுக்கு அர்ப்பணித்து உண்ணுவதால் ஸ்பரிச உணர்ச்சியின் வேகம் குறைவதுடன், அதன் பயனும், தெய்வபாவனையால் அவன் கொள்ளுவதெல்லாம் தீமையாய் இருப்பினும் நாளுக்கு நாள் தனக்கென்று எண்ணும் எண்ணம் தெய்வத்திற்கு என்ற எண்ணத்தில் அமைந்தபோது, அது உந்து சக்தியாய் விடுகிறது. பிறகு, பொருளின் தொடர்பின்றியே உந்து சத்தி மனத்தின் ஆற்றலுக்குத் தொழில்படத் தொடங்கி விடும். பிறகு, அது, தன் தோற்றத்துக்குக் காரணமாகிய தேகத்தையே அழித்துவிடும். இது பாஷாணத்தைச் சிறிய அளவில் மருந்தாகப் பயன்படுத்துவதுபோலாகும். இத் தந்திர நுட்பம் பலவகையான தந்திர சாதனைகட்கும் பொருந்தும்.

ஓர் உதாரணம்:

ஒரு நாய்க்குத் தினமும் மணிஅடித்து உணவுவைப்பது என்ற ஒரு பழக்கம் ஏற்பட்டால், மணியோசையைக் கேட்ட

நாய் சாப்பிடத் தயாராய் நாக்கை நீட்டி நிற்க, நாக்கில் நீர் சொட்டுவதைக் காணலாம். பழக்க வாசனையால் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டுணரப் படுவதைப் பழக்கத்திற்கு உரிய பொருளின்றியே உணர்ச்சி பற்றிக் கொள்ளும். குடிகாரன் பழக்கத்தால் குடிக்காத ஒருவன் குடிகாரனாய்விடுகிறான். துஷ்ட மனிதர் சகவாசத்தால் நல்லவர்கள் துஷ்டராகின்றனர். சிருங்கார கலை யிலுள்ளவன் காமுகனாகின்றான். பக்தியைப் பேசிக் கொண் டிருப்பவன் பக்தனாகின்றான். சற்சனரோடு கூடினவன் நல்ல வனாகின்றான். தக்க குருவோடு கூடில் இவனும் குருத்துவ மடைகிறான். இவையெல்லாம் ஸ்பர்ச உணர்ச்சியும் பிரதி காரியமும் ஆகும். இதை ஆங்கிலத்தில் Reflex Action என்று கூறுவர். இவை முதலில் கூறிய ஸ்பர்ச உணர்ச்சியில் அடங்கும். இதையே (உராய்வு ஆற்றல்) Frictional Energy என்பர். காட்டுத்தீ மரத்திலுண்டாகி காட்டையே அழித்துவிடுகிறது என்பதை அறியவும். இத் தத்துவ முறையில், காமநிலையிலிருப்பினும் கடவுள் நினைவிலிருப் பவன், காமச்செயலி லிருந்து விடுபட்டுவிடுகிறான்.

சூரியன் வெப்பம் ஒன்றாகவிருப்பினும், கடற்கரை அரு கில் உள்ளவர்க்கும் மலைப்பகுதியிலுள்ளவர்க்கும் ஒரே மாதிரியாக இல்லாமல் மாறுபடுகிறது. கடற்கரை அருகில் உள்ளவர்களுக்கு மாலையில் குளிர்ந்த காற்று வீசுகிறது; மலைப் பகுதியில் இரவெல்லாம் வெப்பக் காற்றாகவிருக் கிறது. மலையின் உயரத்தில் சமவெளியில் உள்ள வெப்பத்தை உணராமல் இருக்க முடிகிறது. சூரியனின் ஆற்றல் சூழ்நிலைக்கேற்ப மாற்றத்தை அடைவதற்கு இயற் கையில் காரணம் உள்ளது. சூரிய வெப்பத்தால் உஷ்ண மடைந்த நீர் வெப்பத்தைச் சீக்கிரத்தில் விட்டுவிடுவதால் வெப்பம் மாறாமலிருக்கும். கடற்கரையையடுத்த பூப்பிர தேசத்திற்குக் காற்று வருகிறது; நீர்ப் பிரதேசத்திலிருந்து

வருவதால் குளிர்ச்சியாக உள்ளது. மலேயின் உஷ்ணம் சூடாறுவதற்குத் தாமதமாவதால் இரவெல்லாம் உஷ்ணக் காற்ருக அது வெளியிடுகிறது. சமவெளியிலிருந்து உயரம் போகப்போக ்00 அடிக்கு ஒரு டிகிரி வீதம் சமவெளியின் உஷ்ணம் குறைந்துபோகிறது. இந்த அடிப்படையில், மனிதனின் வெப்பமான அதர்மமும் தட்பமான தர்மமும் இடம்பெறுகின்றன.

மனிதனின் அறிவே ஆத்ம சூரியன். அறிவு அக்கினி மண்டலமான மூலாதாரத்தைப் பற்றியபோது, காமமாதி இடம்பெற்று மனிதனேத் தகிக்கிறது. அறிவு சந்திரமண்டலத்தை இடம் பெற்றபோது சாந்த புருஷனுகி வெப்பம் தாக்காமலுள்ளான். அப்போது அவனது பிராணமய கோசம் சூரியாகாயம் சித்தாகாயம் இடம்பெற்று தேகத்தைச்சூழ உள்ள அண்டாகாயத்தில் ஒளியாய்விடுகிறது. இதைச் சம்மியம் செய்வதில், தேகத்தைவிட்டு அறிவில் நிற்கவும், தேகத்தில் நிலேபெறவும் தகுதியைப்பெறுகிருன். இது சித்த தர்மம். அவர்கள் பூதாகாயமும் குணமய ஆகாயமும் அடக்கப்பட்டு, குணரகித ஆகாயமும் சூரியா காயமும் சித்தாகாயமும் அண்ட கோசத்தில் இடம்பெற்று கூடுகிறபடியால், உடலின் உபாதியின்றி எங்கும் சூக்கும தேகத்தில் சஞ்சரிக்கும் ஆற்றலேயும் பெற்றுவிடுகின்றனர்.

ஆத்மா தனது நெகடிவ் பாசிடிவ் ஆற்றலால் அண்டா காயத்தில் சலனத்தைச் செய்துகொண்டேயுள்ளது. மனிதன் கீழ்த்துருவம் என்ற காமக்கவர்ச்சியில் உள்ள போது, மேல் துருவமான பாசிட்டிவ் ஆற்றல் சிறப்புற வில்லே. மெத்தெனத் ‡தொழில்படுகிறது. அறிவு மேல் துருவத்தைப்பெற்றபோது கீழ்த்துருவ ஆற்றல் கெட்டுவிடுகிறது. அதனுல் தேகத்தையே விட்டுச் சமாதியை அடைகிருன்.

இம்முறையில் சாம்பவி தீக்ஷையால், கண், பல் இவை களைக்கொண்டு செய்யும் ஒரு தந்திரத்தால், அசைவின்றியே சிலநாளில் அறிவின் ஸ்பந்தமாகச் சமாதி அமைந்துவிடும். பல்லின் சூக்ஷமம் விநாயகர் வழிபாட்டினுல் உணர்த்தப் பட்டுள்ளது. கண்ணின் சூக்ஷமம் நடராஜ வித்தையால் உணர்த்தப்பட்டுள்ளது. ஸ்திரீயுடன் பொருந்தி மாற்றம் பெறும் வித்தை சோமாஸ்கந்த மூர்த்தத்தால் உணர்த்தப் பட்டுள்ளது. லலிதா சகஸ்ரநாமத்தில்,

ஆக்ஞா சக்ராந்தாலய தாயை நம ;
ருத்திரக் கிரந்திவிபே தின்யை நம :

என்று கூறப்பட்டுள்ளது. புருவமத்திய ஆக்ஞாசக்கிரத்தி னுலேயே ருத்திரக்கிரந்தி பிளக்கப்படும் என்பதை அறியவும். இது திறந்தால், இதன் மேலுள்ள நிலைகளை அடையமுடியும். புருவ மத்தியத் திறப்பிற்கு ராஜயோகம் அல்லாத இதர வழிகளும் உள்ளன. அவைகள் கிரியை பற்றிய நெறிகளாகும்.

வருத்த மிரண்டுஞ் சிறுவிரன் மாறிப்
பொருத்தி அணிவிரற் சுட்டிப் பிடித்து
நெரித்தொன்ற வைத்து நெடிது நடுவே
பெருத்த விரலிரெண் டுள் புக்குப் பேசே.

—திருமந்திரம், 1094.

பேசிய மந்திரம் இகாரம் பிரித்துரை
கூசமி லாத சகாரத்தை முன்கொண்டு
வாசிப் பிராணன் உபதேச மாகைக்குக்
கூசிய விந்து வுடன் கொண்டு கூவே. —திருமந்திரம், 1095.

சனகாதி முனிவர்க்குப் பரமன் ராஜயோக வித்தையைக் காட்டவில்லை; மந்த தரத்தினர்க்குக் காட்டும் உபாயத்தையே காட்டினர் என்றுல் ஆச்சரியமாக விருக்கும். புராணங்கள் அதைத் திரித்து தீவிரதர சத்தினி பாத தீக்ஷைபோல் கூறிவிட்டன.

அத்தத்தில் உத்தரங் கேட்ட அருந்தவர்
அத்தத்தில் உத்தர மாகும் அருள்மேனி
அத்தத்தி ஞலே யணையப் பிடித்தலும்
அத்தத்தில் தம்மை யடைந்துநின் ருரே.

திருமந்திரம், 2424

இதை வேதாந்திகள் பஹிரங்கமாய்க் கூறிக்கொள்வதில்லை. சிலர் அந்தரங்கத்தில் செய்து பலனடைகின்றனர். பலர் வாய்ப்பேச்சால் ஞானம் வரும் என்று சொல்லிக் கொண்டுள்ளனர். விநாயகரகவலில் மூலாதார மாற்றத்திற்கு ஆகுஞ்சனமும், தந்த வித்தையும், பல்லின் வித்தையும் சேர்த்துக் கூறப்படுவதால், இந்த வித்தை யாவரும் பயிலக்கூடிய சிறப்பு வித்தையாகும். இதுவே ஐம்புலன் தன்னையடக்கும் உபாயமாகும்.

அகண்டத்தில் எல்லாவற்றையும் ஒருங்கே அறியும் ஆற்றல் இயல்பாயிருந்ததே ஐம்புலனறிவாய்ப் பிரிந்தது. இவை ஒருங்கிணைந்து சிரசுக்கு மேல் அறிவு நிலைபெற்ற போது, யானை துதிக்கையை முகத்திற்கு நேரே நிமிர்த்து நீட்டுவதுபோல் நீலவொளியில் வெண்ணிற ஒளி தோன்றும். அதில், தன்னையும் பிறவற்றையும் அறியும் ஆற்றல் கருவியின்றிக் கிட்டும். இதனுல் ஐம்புலன்களும் செயல்படாது போகும். இதன் மேற்கொண்ட விபரத்தை அறிய விரும்புவோர், திருவாசகம் கோயில் திருவிருத்தம் கொண்டறியவும்.

'இன்புறு கருணையில் இனிதெனக் கருளி'

இன்பமளிக்கும் சத்தியின் கிருபைக்கு என்னைப் பாத்திரமாக்கி என்பது இதற்கு பொருள். முன்னர் சக்தியுடைய ஆற்றலால் தேகம் பல பிறவிகளெடுத்து அழிந்து கொண்டே வந்தது. அப்போது அவள் சம்ஹார சொருபிணியான காளியாகவே விளங்கினுள். அவளே சிரசுக்கு மேல் குண்டலினியாக வந்தபோது, அவள் தன் பக்தனை ஆனந்தக் கடலில் அழுத்துபவளாக உள்ளாள்.

தேன்புக்க தண்பணைசூழ் தில்லைச்சிற் றம்பலவன்
தான்புக்கு நட்டம் பயிலுமது என்னேடீ?
தான்புக்கு நட்டம் பயின்றிலனேல் தரணியெல்லாம்
ஊன்புக்க வேற்காளிக்கு ஊட்டாங்காண் சாழலோ.
—திருவாசகம்

காளியின் ஆட்டம் முடிவுற்றுச் சித்சொரூபிணியான சிவகாமியின் கருணைக்குப் பாத்திரமாகிறபோது, சம்ஹார விஷயமான கோரத் தலைகளும் கைகளும் இல்லாத புன்சிரிப்புத் தவழும் முகமாகவே விளங்குகின்றது. கல்கத்தா காளி சதாசிவத்தின் மேனின்று தாண்டவம் புரிகிறாள். சதாசிவ அம்சமான கூத்தன் தாண்டவமாடும் நடனத்தைச் சிவகாமி கண்டு களிக்கிறாள். காளி அடக்கப் பட்டனளே அன்றி அழிக்கப்படவில்லை. அவளுக்கும் திருவருளின் புன்சிரிப்பே என்றதால், தேகமுங் கெடவில்லை என்றபடி.

எழில்பெரும் இமயத்து இயல்புடை அம்பொன்
பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடம்நவில்
கனிதரு செவ்வாய் உமையொடு காளிக்கு
அருளிய திருமுகத்து அழகுறு சிறுநகை

என்னும் திருவாசகம் கீர்த்தித் திருவகவல் காண்க.

தேகத்தின் ஆற்றலை அடக்கிச் 'சிதாகாயத்தில் நிற்ப தற்குத் தகுதியை உண்டாக்கிச் சிரசில் ஓர் இன்பக் கிளுகிளுப்பையும் உண்டாக்கி நிற்பதில், தேகத்தால் அடையக் கூடிய எவ்விதமான துன்பத்தையும் உணராத வாறு செய்வதையே, 'கருவிகளொடுங்கும் கருத்தினை யறிவித்து' என்கிறார் ஔவையார்.

திருவாசகத்தில்,

"ஐயா றதனில் சைவனாகியும்" என்றார்.

ஓர் அகண்ட அறிவே கருவிகளோடு பொருந்திப் பல அறிவாக விளங்குகின்றது. எங்கு இவைகள் பல அறி

வாகப் பிரிகின்றனவோ, அங்கே நின்ருல் பிரிவின் எல்லை யைக் கடந்துவிடலாம். பிரிவின் எல்லை உருவ மனத் திற்கும் அருவ மனத்திற்கும் இடையிலுள்ள காரண சரீரத்தில் உள்ளது. காரணங் கடந்த புத்தி தத்துவத்தில் நின்ருல் தேகமற்ற அறிவு உறுதியாய்விடும். வேதாந்திகள் கூறும் நிலையும் இதுவேதான். ஆனுல் அவர்கள் கருவிகளை யொடுக்கிக் காணும் கருத்தைக் கூறவில்லை. இந்த நெறியில் கருவிகளை யொடுச்கும் கருத்துக் கூறப்பட்டுள்ளது.

இருவினை தன்னை அறுத்துஇருள் கடிந்து

(இ-ள்) நல்வினை தீவினை ஆகிய இரு தளைகளையும் அறுத்து, அறியாமை இருளை அகற்றி, திருவாசகத்தில்,

நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமல்
பரகதி பாண்டியற்கு அருளினை போற்றி

—போற்றித் திருவகவல்

என்ருர்.

நரகம் இரும்பு விலங்கு; சொர்க்கம் பொன்விலங்கு. கட்டும் தன்மையில் இரண்டும் ஒன்றே. உலகியல் நிலையில் பாவம் கெட்ட சூழ்நிலையில் மீண்டும் பிறக்கச் செய்யும்; புண்ணியம் நல்ல சூழ்நிலையில் பிறக்கச் செய்யும். இவ்விரண்டுக்கும் காரணம் காரண சரீரத்தில் உள்ளது. காரணசரீரத்தின் ஆற்றலைக் கெடுத்து அகண்ட அறிவாய்ப் போனவரை வினைகள் பந்திக்க முடியாது. அதனுல், அவைகள் அறுக்கப்பட்டன. காரணம் இருக்கும்வரையில் இருளும் இருக்கவே செய்யும். ஒளியாக ஜீவநிலை மாற்ற மடைந்தபோது, பந்திக்கும் இருளுமில்லை, மலமுமில்லை என்பதை அறியவும்.

அஞ்சு புலனின் வழியறிந்தால் பின்னைத்
துஞ்சு வதில்லை யுடம்பு. —ஔவைக் குறள்

இதனுல், ஆன்மதத்துவம் 24உடன், வித்தியாதத் துவம் 7உடன், சுத்த வித்தை, மகேசுவரம் கடந்து சிவ தத்துவம் விந்துநாதத்தால் சாதாக்கிய மண்டலத்தில் விளங்குவர்.

## (31 - 36)

தலமொரு நான்குந் தந்தெனக் கருளி
மலமொரு மூன்றின் மயக்கம் அறுத்தே
ஒன்பது வாயில் ஒருமந் திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதுங் காட்டி
ஆரு தாரத் தங்கிசை நிலேயும்
பேரு நிறுத்திப் பேச்சுரை அறுத்தே...

(இ - ள்) சதாசிவமூர்த்தி விளங்கும் சிரசில் சத்தியோ சாதம் (பின் மூளே) வாமதேவம் (இடப்பக்க மூளே) தத்புருஷம் (முன்பக்க மூளே) அகோரம் (வலப்பக்கத்து மூளே) இவைகளே எனக்கு விளங்கும்படி செய்து, ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களால் பொருந்தும் மயக்க அறிவினேப் போக்கி, நவத்துவாரவழிச் செல்லும் மனத்தை ஐம்புலனறிவினின்றும் ஒப்பற்ற பிரணவத்தால் தடுப்பதையுங் காண்பித்து, மூலாதார முதலாக உள்ள ஆறு ஆதாரங்களேயும் கடந்து, சகஸ்ரதளத்தில் பொருந் தும்படி செய்து, அதையே உடலெடுத்த பிறவியின் பயன் என்று மௌனநிலேயில் (என்னே) இருத்தி...

### விளக்கம்

தலமொரு நான்கும் தந்தெனக் கருளி

மனிதனின் மூளேயில் தேகத்தை ஆளும் ஆற்றலும், தேகத்தைக் கடந்த அறிவின் ஆற்றலும் கலந்து கிடக் கின்றது. 'தேகமே தான்' என்ற நிலேயில், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் நான்கும் உருவமனத்திஞல் சிறப் பாகச் செயல்படுகிறது. அருவமனம் சிறப்புருமல் உள்ளது,

மனிதன் உருவத்தைப் பற்றி நிற்கும் பிரமையை விட்ட போது, சதாசிவரின் ஈசானமும் சிறப்புறுகிறது. ஈசான முகம் ஒளிமயமானது. சாதாக்கியத்தில் இது அமூர்த்தி சாதாக்கியம் எனப்படும். இது தொழிற்பட ஆரம்பித் தால் தலையில் தாம்பாளத்தை மேல்புறம் நிமிர்ந்து வைத்ததுபோல் கவிழ்ந்திருந்த சகஸ்ரதளம் நிமிர்ந்து விளங்கும். அப்போது மனத்தின் எண்ணும் ஆற்றல் தொழில்படாது. புத்தியின் பரிசீலனை இராது. சித்தம் விஷயங்களைச் சேகரிக்கும் தன்மையை விட்டுவிடும். ஆத்மாவின் ஆணவம் (செலுத்தும் ஆற்றல்-இச்சை) கெட்டுவிடும். சிறு குழந்தை பராக்குப் பார்ப்பதுபோல் அங்கு உள்ள விந்துநாதத்தில் அமையும் சுகநிலையில் செய லற்று நின்றுவிடும். இந்நிலையில் ஈசானர் ஒருவரே சிறப் புறுகின்றார். அதர்வசிரோ உபநிஷத் பார்க்க இவ்வுண்மை விளங்கும். அவரே சிருஷ்டிக்குமுன் இருந்தவர். பிரளயத் திற்குப் பின்னும், பிர்மா விஷ்ணு உருத்திரர் அழிந்த பிறகும் இருப்பவர். இந்நிலை உருவமூர்த்திகளின் வியாபக மான நான்கு எல்லைகளையும் கடந்து நிற்கும் நிலை. இதனை அடைந்தவர் நிவர்த்திகலை, பிரதிஷ்டைகலை, வித்தியாகலை, சாந்திகலை என்ற நான்கு கலைகளையும் கடந்தவராகின்றார். சாந்தியதிதை கலையில் சதாசிவருக்கு ஆதிக்கம் இல்லை. அங்குள்ளது சிவம் சத்தியே யாகும். ஆன்மா, சிவம், சத்தி மூன்றும் தனித்துவிடும் நிலையாகும்.

மலம் ஒரு மூன்றின் மயக்கம் அறுத்தே:

ஆன்மா விகாசமுறை வளர்ச்சியின் காரணமாக, ஆணவ மலப்பற்றினால், தேகம் போகம் முதலியவைகளில் பற்றுக்கொண்டு சுயநல நோக்கத்தில் விளங்கி வந்தது. பிறர்நலம் பேணும் சிறப்புப் பொருந்தியபோது, சுயநலம் மறைந்தும் கெட்டும் விடுகிறது. தானும் சமஷ்டி

ஆத்மாவில் உறையும் மனம் உறுதிப்படவே, ஆணவம் கர்மம் ஆகியவற்றின் மாயை அகன்று விடுகின்றது.

ஒன்பது வாயில்:

| | | |
|---|---|---|
| கண்கள் | — | 2 |
| காதுகள் | — | 2 |
| மூக்குத் துவாரங்கள் | — | 2 |
| வாய் | — | 1 |
| குதம் | — | 1 |
| குறி | — | 1 |
| | | 9 |

தேகமாகிய கோட்டைக்கு ஒன்பது வாயில்கள் உள்ளன.

ஐம்புலன்:

சத்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் இவைகளை அறியும் அறிவு.

ஒரு மந்திரம்-பிரணவம்:

புராணங்கள், 'இதன் பெருமை சொல்ல முடியாதது' என்றே கூறி முடித்தன. இதை விவரித்து எழுதப்புகின் பெரும்பகுதியாகிவிடும். திருமந்திரங் கொண்டு சில பகுதிகளை விளக்குகின்றேன்.

ஓங்காரத் துள்ளே யுதித்தஐம் பூதங்கள்
ஓங்காரத் துள்ளே யுதித்த சராசரம்
ஓங்காரா தீதத் துயிர்மூன்றும் உற்றன.
ஓங்கார சீவ பரசிவ ரூபமே. —திருமந்திரம், 2677,

வேதாந்திகள், காணும் உலகை மித்தியா உலகம் என்று கூறுகின்றனர். சித்தாந்தம் உலகம், கடவுள், ஆன்மா என்ற மூன்றும் அடிப்படைப்பொருள் என விளக்கு கின்றது. காணும் உலகின் காரணம் எதுவோ அதைப் பிரணவம் என்றனர். அதனுல், அதன் வியாப்பியத்தில் உருவருவான பலபேதங்கள் உள்ளன. ஐம்பூதங்களும், நடப்பவை, நிற்பவை முதலியனவும் சகலர், பிரளயாகலர் விஞ்ஞானகலர் ஆகிய சீவ வர்க்கங்களுமுள்ளன. அதுவே உயிர்த் தொகுதிக்கும் பரசிவத்தின் உருவத்திற்கும் காரண மாகவுள்ளது. கண்முன் காணும் உலகின் காரணம் ஆகாயத்தில் உள்ளது.

இதனை,

நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப் பகலோன்
புலனுய மைந்தனுே டெண்வகையாய்ப் புணர்ந்து நின்ருன்
உலகேழெனத் திசை பத்தெனத் தான் ஒருவனுமே
பலவாகி நின்றவா தோணுேக்கம் ஆடாமோ.

எனத் திருவாசகம் கூறும்.

இதனுல், எங்கும் நிறைந்த ஒருபொருளே பரப்பிர்மம்' சத்தி, சிவன், கணபதி, சூரியன், விஷ்ணு, முருகன் என்ற பலபேரால் வழங்கப்படுகிறது. எங்கும் நிறைந்த பொருள் ஆகாசமே யாகும் ஆகாய சத்தைச் சார்ந்தே மற்றைய பூதங்கள் உள்ளன. ஆகாசத்தைத் தனியாகக் கண்டால் மற்றப் பூதங்கள் அவற்றின் குணங்கள், எல்லாம் அடங்கி விடும். இவ்வகையில் சாதாக்கிய தத்துவத்தை முதற் காரணம் என்றனர். சாதாக்கிய தத்துவம் அகண்டமாய், ஏகமாய், சர்வவியாபியாய், அனைத்திற்கும் ஆதாரமும் ஆதேயமுமாய், நாமரூப பேதங்களற்றதாய், குணங்கடந்த தாய், நித்தியமாய், நிரந்தரமான உயிர்த்துடிப்புடைய தாய், இடைவிடாது ஓமெனும் இன்பப் பரவச இன்னெலி

யுடன் கூடியதாய், வித்தில் மரம்போன்று, சத்து சித்து ஆனந்த உணர்வுகளைத் தன்னகத்தே அடக்கிக் கொண் டுள்ளதாய் உள்ள, ஓர் உணர்வுப்பொருள் என்றே கொள்ள வேண்டும். திருமூலர் கேசரி யோகத்தில் விளக்கியுள்ளதைக் கண்டு தெளிவு பெறுக. 'கேசரி' என்றால், ஆகாயம்.

வாய்ந்தறிந் துள்ளே வழிபாடு செய்தவர்
காய்ந்தறி வாகக் கருணை பொழிந்திடும்
பாய்ந்தறிந் துள்ளே படிக்கத வொன்றிட்டுக்
கோய்ந்தறிந் துள்ளுறை கோயிலு மாமே.

—திருமந்திரம், *810*.

கோயிலின் உள்ளே குடிசெய்து வாழ்பவர்
தாயினும் நல்லார் தரணி முழுதுக்குங்
காயினும் நல்லவர் காய்ந்தவர் தம்முளுந்
தீயினுந் தீயாத் தீவினை யாளர்க்கே. —திருமந்திரம், *811*.

தீவினை யாளர்தஞ் சென்னியி லுள்ளவன்
பூவினை யாளர்தம் பொற்பதி யானவன்
பாவினை யாளர்தம் பாவகத் துள்ளவன்
மாவினை யாளர் மதியினுள் ளானே. —திருமந்திரம், *812*.

மதியினெழுங் கதிர் போலப் பதினாறாய்ப்
பதிமனை நூறுநூற் றிருபத்து நாலாய்க்
கதிமனை யுள்ளே கணைகள் பரப்பி
எதிர்மலை யாமல் இருந்தனன் தானே.

—திருமந்திரம், *813*.

இருந்தனள் சத்தியு மக்கலை சூழ
இருந்தனள் கன்னியு மந்நடு வாக
இருந்தனள் மானே முகநில வார
இருந்தனள் தானும் அமுதம் பொழிந்தே.

—திருமந்திரம், *814*.

பொழிந்த இருவெள்ளி பொன்மண் ணடையில்
வழிந்துள் ளிருந்தது வான்முத லங்குக்
கழிந்தது போகாமற் காக்கவல் லார்க்குக்
கொழுந்தது வாகுங் குணமது தானே.

—திருமந்திரம், 815.

குணமது வாகிய கோமள வல்லி
மணமது வாக மகிழ்ந்தங் கிருக்கில்
தனமது வாகிய தத்துவ ஞானம்
இனமது வாக இருந்தனன் தானே. —திருமந்திரம், 816.

இருந்த பிராணனும் உள்ளே எழுமாம்
பரிந்தஇத் தண்டுடன் அண்டம் பரிய
விரிந்தஅப் பூவுடன் மேலெழ வைக்கின்
மலர்ந்தது மண்டலம் வாழலு மாமே.

—திருமந்திரம், 817.

மண்டலத் துள்ளே மனவொட்டி யாணத்தைக்
கண்டகத் தங்கே கருதியே கீழ்க்கட்டிப்
பண்டகத் துள்ளே பகலே ஒளியாகக்
குண்டலக் காதனுங் கூத்தொழிந் தானே.

—திருமந்திரம், 818.

ஒழிகின்ற வாயுவும் உள்ளே அமருங்
கழிகின்ற வாயுவுங் காக்கலு மாகும்
வழிகின்ற காலத்து வட்டக் கழலைப்
பழிகின்ற காலத்துப் பையகற் றீரே.

—திருமந்திரம், 819.

பையினி னுள்ளே படிக்கத வொன்றிடின்
மெய்யினி னுள்ளே விளங்கும் ஒளியதாங்
கையினுள் வாயுக் கதித்தங் கெழுந்திடின்
மையணி கோயில் மணிவிளக் காமே.

—திருமந்திரம், 820.

விளங்கிடும் வாயுவை மேலெழ உன்னி
நலங்கிடுங் கண்டத்து நாபியி னுள்ளே
வணங்கிடு மண்டலம் வாய்த்திடக் கும்பிச்
சுணங்கிட நின்றவை சொல்லலு மாமே.

—திருமந்திரம், 821.

சொல்லலு மாயிடு மாகத்து வாயுவுஞ்
சொல்லலு மாகு மண்ணீர்க் கடினமுஞ்
சொல்லலு மாகும் இவையஞ்சுங் கூடிடிற்
சொல்லலு மாந்தூர தெரிசனந் தானே.

—திருமந்திரம், 822.

தூர தெரிசனஞ் சொல்லுவன் காணலாங்
காராருங் கண்ணி கடைஞான முட்பெய்தி
ஏராருந் தீபத் தெழிற்சிந்தை வைத்திடிற்
பாரா ருலகம் பகன்முன்ன தாமே. —திருமந்திரம், 823.

முன்னெழு நாபிக்கு முந்நால் விரற்கீழே
பன்னெழு வேதப் பகலொளி யுண்டென்னும்
நன்னெழு நாதத்து நற்றீபம் வைத்திடத்
தன்னெழு கோயில் தலைவனு மாமே. —திருமந்திரம், 824.

ஆரு தாரத்(து) அங்கிசை நிலையும்
பேரு நிறுத்திப் பேச்சுரை அறுத்தே :

மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி என்பன, தேகத்தில் சிரசுக்குக் கீழுள்ளவை களாகும். ஆக்ஞையும் சகஸ்ரதளமும் சிரசிலுள்ளவை களாகும். சிரசில் பின்மூளையும் முன்மூளையும் ஒருங்கிணைந்து செயல்பட்ட பிறகே, சிரசின் உச்சியில் உள்ள சகஸ்ரதள உணர்வு உண்டாகும். முன்மூளை, பின்மூளை, உச்சி மூன்றிடங்களும் நன்கு வளர்ந்தால், கவிழ்ந்திருந்த சகஸ்ர தளம் நிமிரத் தொடங்கும். அப்போது சிரசில் நாதமும் விந்தும் நிலை கொண்டிருக்கும். அதுவே 'அங்கு இசை' நிலையும் என்று கூறப்பட்டுள்ளது.

இதைப் பரையில் வரும் யோகம், போகம், அதீதம் என்பர். இதை முன்னர்ப் 'பாதச்சிலம்பு பலவிசை பாட' என்பதின்கீழ் விளக்கப்பட்டுள்ளது. சகஸ்ரதளம் மேலெழு வதைப் பெரும் பேருகக் கருதி, அங்கு நிலைபெற்றால், பிரணவத்தின் ஆற்றலாகிய நாதமும் ஒய்ந்துவிடும். அதுவே நாதாந்தமாகிய பெரு நிலையாகும்.

"மோனம் என்பது ஞான வரம்பு"

—ஆத்திச்சூடி

வைச்சன வாறாறு மாற்றி யெனைவைத்து
மெச்சப் பரன்றன் வியாத்துவ மேலிட்டு
நிச்சய மாக்கிச் சிவமாக்கி ஞேயத்தால்
அச்சங் கெடுத்தென்னை யாண்டனன் நந்தியே.

—திருமந்திரம், 1608.

முன்னை யறிவறி யாதஅம் மூடர்போற்
பின்னை யறிவுஅறி யாமையைப் பேதித்தான்
தன்னை யறியப் பரனாக்கித் தற்சிவத்
தென்னை யறிவித் திருந்தனன் நந்தியே.

—திருமந்திரம், 1609.

காணாத கண்ணுடன் கேளாத கேள்வியுங்
கோணாத போகமுங் கூடாத கூட்டமும்
நாணாத நாணமும் நாதாந்த போதமுங்
காணா யெனவந்து காட்டினன் நந்தியே.

—திருமந்திரம், 1610.

மோனங்கை வந்தோர்க்கு முத்தியுங் கைகூடும்
மோனங்கை வந்தோர்க்குச் சித்தியும் முன்னிற்கும்
மோனங்கை வந்தூமை யாமொழி முற்றுங்காண்
மோனங்கை வந்தைங் கருமமும் முன்னுமே.

—திருமந்திரம், 1611 ,

## (37—44)

இடைபிங் கலையின் எழுத்தறி வித்துக்
கடையிற் சுழுமுனைக் கபாலமுங் காட்டி
மூன்றுமண் டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்திக்
குண்டலி யதனிற் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து
மூலா தாரத்து மூண்டெழு கனலைக்
காலால் எழுப்புங் கருத்தறி வித்தே...

(இ - ள்) இடைநாடி பிங்கலைநாடி இவற்றிற்கு முறையே உள்ள அகர உகாரங்கள் தேகத்தில் விளங்கும் நிலைகளை உணர்த்தி, சுழுமுனை நாடியினிறுதியில் விளங்கும் தலைமண்டை ஓட்டின் நடுவின் உள்ள மகாரமான பிரமப் புழையைக் காண்பித்து, அக்கினி மண்டலம், சூரிய மண்டலம், சந்திரமண்டலமாகிய மூன்று மண்டலங்களிலும் பொருந்த நிறுத்தப்பெற்ற தூணைப்போன்ற வீணாதண்டின் அடியில் தூங்கிக் கொண்டிருந்த பாம்பு விழித்தெழுவது போலக், குண்டலினி சத்தியுடன் பொருந்திய பிரணவ சத்தியை எனது உண்ணாக்குப் பிரதேசத்திற்குக் கொண்டு வருவதை உணர்த்தியும், வாய்விட்டு எழுகின்ற மந்திரத்தை வெளிப்படையாக உரைத்தும், மூலாதாரத் தானத்தில் பற்றி எரிகின்ற விந்து என்ற மூலாக்கினியைத் திருவடிகளால் மேலேறச் செய்யும் கருத்தை அடியேற் குணர்த்தி...

### விளக்கம் :

இனி வருவன குரு சீடர்க்கு உணர்த்திய விஷயங் களாகும். இவைகள் பரமரகசியமாகப் பாதுகாக்கப்பட்டு வந்தவைகளாகும். காலப்போக்கில் ஆஸ்திகத்திற்கே ஆட்டங்கொடுக்கும் மனப்பாங்கு மக்களிடம் வருகிறதினால், உண்மையறிய விரும்புவோர்க்குப் புராணக் கதையால்

ஏற்பட்ட மயக்கம் தீர உண்மையைக் கூற வேண்டிய தாகிறது.

இடைபிங்கலையின் எழுத்து அறிவித்து (அகர உகரங்களாகும்)

பிரணவத்தின் பாதமானவை அகர உகரங்களாகும். இவை இரு கண்களாகும்.

மகார நடுவே வளைத்திடுஞ் சத்தியை
ஒகாரம் வளைத்திட் டும்பிளந் தேற்றி
அகாரம் தலையாய் இருகண் சிகரமாய்
நகார வகாரநற் காலது நாடுமே.

—திருமந்திரம், 921.

கடையிற் சுழுமுனை கபாலமுங் காட்டி :

கிரியை வழி தீக்ஷை செய்வோர், சீடனுக்கு மகாரத் தொனி சிரசில்·காணுமாறு காட்டுவதே முடியாத காரியம். சிறப்புள்ள நடராஜவித்தை யாரும் அறியாத வித்தை.

சிய குருநந்தி திருஅம் பலத்திலே
ஆயுறு மேனியை யாரும் அறிகிலர்.

—திருமந்திரம், 2802

ஆதி நடஞ்செய்தான் என்பர்கள் ஆதர்கள்
ஆதி நடஞ்செய்கை யாரும் அறிகிலர்
ஆதி நடமாட லாரும் அறிந்தபின்
ஆதி நடமாட லாமருட் சத்தியே.

—திருமந்திரம், 2787.

இடங்கொண்ட சத்தியும் எந்தை பிரானும்
நடங்கொண்டு நின்றமை நானும் அறிந்தேன்
படங்கொடு நின்றஇப் பல்லுயிர்க் கெல்லாம்
அடங்கலுந் தாமாய்நின் றுடுகின் றுரே.

—திருமந்திரம், 2768.

இவ்வாறு திருமந்திரம் இதனைக் கூறுகிறது.

புராணிகர் கதையைக் கேட்டு ஒருவித அநுபவமும் பெறமுடியாது. நம்பிக்கையில் கோயிலைச் சுற்றுவதுதான் நடக்கும். திருமூலர் காலத்திற்கு முன்பே நடராஜவித்தை தென்னாட்டில் நிலைபெற்று விட்டது. தில்லையம்பதியில் திருநடனத்தை யாரும் அறியமாட்டார்கள்; அதை அறிந்தவர் அருளைப் பெறுவர் என்று முடித்துள்ளார். இந்த வித்தை சீனா, ஜப்பான் எல்லாம் பரவியுள்ளது.

சீன மொழியில் உள்ள ஒரு பழைய நூல்

The Secret of Golden Flower என்று ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுக் கண்களின் வழியே கடவுளை அறியும் நெறி கூறப்பட்டுள்ளது. நம் தமிழகத்தில் கூத்தாடுபவனைத் தோத்திரம் பாடிக்கொண்டு புராண படனம் செய்து கொண்டு உள்ளனர். இந்நெறியே இன்று Zen Buddism என்று ஜப்பானில் வழங்குகின்றது. திருமூலர் கூத்தன் கதையைச் சொல்லுபவர் ஆதர்கள் என்றார். அவன் சகல உயிர்களிலும் பரமாகாயத்தில் நடிக்கின்றான் என்றார். சிரசுக்கு மேலுள்ள ஆகாயத்தில் கூத்தன் திருவடிகளான அகர உகரத்தை அறிந்தால், அவனது பறக்கும் ஜடாமுடியை அறியலாம். இதுவே உபநிஷதங்களில் பேர் பெற்ற தகர வித்தை

அணுவுக்கு அணுவாயும் பெரிதுக்குப் பெரிதாயும் உள்ள ஆத்மா இந்த ஜீவனுடைய உள்ளத்தில் உறைந்துள்ளது. செயலைக் கடந்த அந்த ஆத்மாவை அந்தக் கரணங்களின் தெளிவால் ஒருவன் காண்கிறான். (அப்போது) சோகமற்றவனாய், அந்த ஆத்மாவின் பெருமையையும் உணர்கிறான்.

அந்த ஆத்மாவினிடமிருந்தே ஏழு பிராணன்களும் உண்டாகின்றன. அதனிடமிருந்தே ஏழு ஜ்வாலைகளும், ஏழு சமித்துகளும், ஏழு நாக்களும், எவ்வேழாய் விரிந்த

பிராணன்கள் சஞ்சரிக்கும் ஏழு உலகங்களும், (அதனிட மிருந்தேயாம்). அதனிடமிருந்தே எல்லாச் சமுத்திரங்களும் மலைகளும், அதனிடமிருந்தே பலவாருய்ப் பெருகும் நதி களும், அதனிடமிருந்தே எல்லாச் செடிகொடிகளும், எந்த ரசத்தால் பஞ்சபூதங்களுடன் கூடி அந்தராத்மா (சூஷ்ம சரீரம்) நிற்கிறதோ அந்த ரஸமும் (அதனிடமிருந்தே தான்).

தேவர்களுள் பிர்மதேவனுகவும், கவிகளுள் சொல்லிற் சிறந்தவனுகவும், விப்ரர்களுள் ரிஷியாகவும், மிருகங்களுள் (மிருகத்தன்மை மிக்க) எருமையாகவும், பறவைகளில் கருடனுகவும், வெட்டுக் கருவிகளில் கோடாரியாகவும், சோமனே (மந்திரங்களால்) துதிக்கப் பெற்றவனுய்ப் பாவனமான அனைத்தையும் கடந்து நிற்கிருன்.

சிவப்பும் வெளுப்பும் கருப்புமாயுள்ள ஒரு ஆட்டுக் கிடாரியை ஒரு ஆட்டுக்கடா விரும்பிக் கூடித் தன் வடிவிற் கொத்த பல குட்டிகளைப் போட்டுக் கொண்டுள்ளது. மற்ருெரு ஆட்டுக்கடா அதை அனுபவித்துவிட்டு விலக்கி விடுகிறது.

சுத்தமான ஆகாயத்தில் சூரியனுகவும், இடைவெளி யில் காற்ருகவும், யாகமேடையில் அக்கினியாயும், வீட்டில் அதிதியாகவும், (ஜீவ சைதன்னியமாக) மனிதர்களிடையும் தேவர்களிடையும் நேர்மையான நடத்தையாகவும், வானில் வாழ்வதாயும், நீரில் பிறப்பதாயும், சூரிய கிரணங் களில் பிறப்பதாகவும், உலகின் அழகிலும் ஒழுங்கிலும் தோன்றுவதாயும், மலையில் பிறப்பதாயும் பேருண்மை உள்ளது.

(முன்னேர்கள்) நெய்யை (அக்னியில்) ஹோமம் செய் தார்கள். நெய் அக்கினிக்குப் பிறப்பிடம், நெய்யிலே உறைவிடம். நெய்யே இவனுடைய சக்தி.

சிறந்து விளங்குபவனே, ஒவ்வொரு ஆஹுதியிலும் தேவர்களை அழைத்து வந்து, அவர்களை மகிழ்விப்பாயாக, ஸ்வாஹா காரத்துடன் அளித்த ஹவிஸ்ஸை அவர்களிடம் சேர்ப்பாயாக.

சமுத்திரத்திலிருந்து அலைகளைப்போல் பரமாத்மா வினிடமிருந்து (பிராணிகளுக்கு) இன்பமளிக்கும் பிரபஞ்சம் தோன்றிற்று. அந்தப் பரஞ்சோதியின் ரகஸ்ய நாமம் (ஓம்) எதுவுண்டோ, அதை மெதுவாக ஜபித்து ஒருவன் சாகா நிலையை எய்துவான். இது தேவர்களின் (ஒளிமிக்க ஞானி களின்) நாவில் உறைவது. அழியாத ஆனந்தத்திற்கு நடுவில் ஆதாரமாய் உள்ளது.

நெய்யைத் தாரையாக ஹோமம் செய்வது போன்ற தாரணையால், இந்த ஞானயக்ஞத்தில் நமஸ்காரங்களுடன் இந்த நாமத்தை (ஓங்காரத்தை) ஜபிப்போம். அகர, உகர, மகார நாதமாகிய நான்கு கொம்புகளையுடையதும், வெண்மையான ரிஷபம் போன்று சிறந்ததுமான இந்த ஓங்காரம் துதிக்கப்பெற்று, உடனிருப்பவர் காதில் கேட்கும் படி (சப்த வடிவில்) பரப்பிர்மத்தைத் தோற்றுவித்தது.

(ரிஷபத்திற்கு ஒப்பிடப்பட்ட ஓங்காரமாகிய) இதற்குக் கொம்புகள் நான்கு, கால்கள் மூன்று, தலைகள் இரண்டு. இதற்குக் கைகள் ஏழு. முப்பிரியால் கட்டப் பட்டுள்ள இந்த ரிஷபம் 'மஹ' என்னும் பிர்மதத்துவத்தை உரத்திக் கூவி விளக்குகிறது. ஸ்வயம்பிரகாசப் பொரு ளான தெய்வம் மனிதர்களிடம் புகுந்துறைகிறது.

(விழிப்பு, கனவு, உறக்கம்) என்ற மூன்று நிலைகளில் வைக்கப்பட்டுள்ளதும், (வேத வாக்கியங்களால் போற்றும்) ஆசாரியர்களால் ரகசியமாகக் கருதப்படுவதும் ஆகிய (பாலில் நெய் போன்று எங்கும் நிறைந்திருக்கும்) ஸ்வயம் பிரகாசப் பொருளைத் தெய்வீக புருஷர்கள் கிரமமாக

அடைந்தார்கள். இந்திரன் (விராட்) ஒரு நிலையை (விழிப் புலகைச்) சிருட்டித்தான். சூரியன் (ஹிரண்யகர்ப்பன்) ஒரு நிலையைக் (கனவுலகை) சிருஷ்டித்தான். அக்கினியிலிருந்து (அவ்விய கிருதத்திலிருந்து, மற்றொரு நிலை (உறக்கம்) தோன்றிற்று. தனக்குத்தானே ஆதாரமான பரம்பொரு ளால் (இம்மூன்று நிலைகளும்) நிர்மாணம் செய்யப்பட்டன.

எவனுக்கு அப்பால் வேறொன்றும் சிறியதாயினும் இல்லையோ, எவனைவிடச் சிறியதோ பெரியதோ ஏது மில்லையோ, அந்த ஒரே புருஷனால்—வானுலகில் அசையா திருக்கும் விருக்ஷம்போன்ற—அவனால், இது அனைத்தும் நிறைந்திருக்கிறது.

கர்மத்தாலோ, மக்கள் பேற்றாலோ, பொருளாலோ அன்று; தியாகத்தாலேதான் சிலர் சாகாநிலையை அடைந் திருக்கின்றனர். ஸ்வர்க்கத்திற்கு மேலானதும், அறிவாளிகளின் புத்தியாகிய குகையில் வைக்கப்பட்டுப் பிரகாசிப்பதுமான இதை, ஞான வாழ்க்கையில் முயல்வோர் அடைகின்றனர்.

செம்மையான வேதாந்த ஞானத்தால் நிச்சய புத்தி யுடையவர்களும், சந்நியாச யோகத்தால் பரிசுத்தமான அந்தக்கரணமுடையவர்களுமான துறவிகளாகிய அவர்கள் எல்லோரும், பராம்ருதமாகிய பிர்மத்தில் நிலைபெற்று (ஜீவன் முத்தர்களாகவே வாழ்ந்து), அந்திய காலத்தில் (சரீரம் விழுந்தபின்) பற்றனைத்தினின்றும் அறவே விடுபடு கின்றனர். (விதேஹ முக்தர்களாய் எங்கும் நிறைந்த பிரமத்தில் லயிக்கின்றனர்.)

ஒரு நகரத்தின் நடுவில் உள்ள ராஜகிருஹம் போன்ற இருதய கமலமாக எது உள்ளதோ அது பரமாத்துமாவின் உறைவிடம்; அது சின்னஞ் சிறியது; களங்கம் அற்றது. அதனுள் இன்னும் சிறிய ஒரு ஆகாசம் (சிற்றம்பலம்) உளது. அது துக்கம் நீங்கியவிடம். அதனுள் எது

உள்ளதோ அதைத்தான் தியானத்தில் தேடி அறிய வேண்டும்.

வேதத்தின் ஆரம்பத்தில் கூறப்படுவதும், வேதத்தின் முடிவிலுள்ள உபநிஷத்தில் நிலைபெற்றுள்ளதுமான ஓங்காரம் எனும் எந்த ஒலி உண்டோ, அது பிரகிருதியின் லயமடைந்தபின் விராட்டுக்கும், ஹிரணிய கர்ப்பனுக்கும் மூலப்பிரகிருதிக்கும் அப்பால் (அ, உ, ம வுக்கு அப்பால் —நாதமாக) எது எஞ்சி நிற்கிறதோ, அதுவே மஹேசுவர ஸ்வரூபம்.

—மஹா நாராயண உபநிஷதம்.

மூன்று மண்டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவிலுணர்த்தி

அக்கினி மண்டலம், சூரியமண்டலம், சந்திர மண்டலம் என்ற மூன்று மண்டல வியாபகத்தில் ஆத்மா உள்ளது. ஆத்மா சுயஞ்சோதியான அக்கினி சொருப மாகும். அது நெகடிவ் பாசிடிவ் சத்திகளால் தேகத்தை ஆளுகிறது. நெகடிவ் சத்தி என்றால் கீழிழுப்பு ஆற்றல். இதை ஒரு பாம்பு தலைகீழ் உள்ளதாக உவமிக்கப் பட்டுள்ளது. குண்டலினி சத்தி மூலாதாரத்தில் மூன்றரைச் சுற்றுவட்டத்தில் சுருட்டிக்கொண்டு உறங்கு கின்றது. இதுவே ஆத்மாவின் கிரியா சத்தியாகும். இந்தச் சத்தியை சிரசிலுள்ள உண்ணுக்குப் பிரதேசத் தைக் கடக்கச்செய்தால் சந்திரமண்டலம் அமையும்.

முன்னர் இந்தச் சந்திரனே உரகம் ஆற்றலால் அக்கினி மண்டலத்தில் விளங்கினன். உலக அறிவால் சூரியனாகப் புத்திதத்துவத்தில் விளங்கினான். உருவத்தை விட்ட மனம் திடப்பட்டபோது, இவனே ஆத்ம சொருப மாக சிரசுக்குமேல் உள்ள நிராதார நிலையில் விளங்கு

கின்றான். சந்திரன் ஆத்மாவில் நிலைபெற்றபோது யாவற்றையும் சாக்ஷியாகப் பார்க்கும் ஆற்றலைப் பெறு கிறான். இதைக் கார்த்திகை தீபத்தால் விளக்கினர்.

கார்த்திகை நக்ஷத்திரத்தில் வரும் நிறைமதி, சூரியன் விருச்சிகராசியில் உள்ளபோதும், சந்திரன் கார்த்திகை நக்ஷத்திரத்தில் உள்ளபோதும் நிகழ்வது. விருச்சிகராசி கால புருடனுக்குக் குறித்தானமாகும். ரிஷபராசி (கார்த்திகையின் முக்கால் பங்கு உள்ளது) கால புருஷனின் கண்ணாகும். கண்ணுக்கும் குறிக்கும் தொடர்பு விளக் கினர். நிறைமதி பதினாறு கலைகளுடன் கூடியது. ஆதார கலைகள் எட்டும் நிராதார கலைகள் எட்டுமாக விளங்கு கின்றது.

அகரம், உகாரம், மகாரம், விந்து, அர்த்தசந்திரன், நிரோதினி, நாதம், நாதாந்நம் இவை எட்டும் தேகத்தி லுள்ள சோமகலைகளாகும்.

சத்தி, வியாபினி, வியோமரூபினி, அநந்தை, அநாதை, அநாசிருதை, சமனை, உன்மனை இவை எட்டும் தேகங்கடந்து விளங்கும் சோமகலைகளாகும்.

மூலாதாரமும் சுவாதிஷ்டானமும் அக்கினி மண்டல மாகும்.

மணிபூரகமும் அநாகதமும் சூரிய மண்டலமாகும்.

விசுத்தி, ஆக்ஞை, சகஸ்ரதளம் எல்லாம் சந்திர மண்டலமாகும்.

உன்னைக்குக்கு மேலே உணர்வு சென்றால், முன்னர் நெகடிவ் ஆற்றலாக எது இருந்ததோ அது, தன் தன்மை கெட்டுப் பாசிட்டிவ் என்ற புத்தியும், நெகடிவ் என்ற உணர்வும் பொருந்தி, அதனால் ஆத்மவொளி மண்டலத்தை அமைக்கிறது.

குண்டலி அதனில் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து :

(இ - ள்) சுருண்டு கிடக்கும் குண்டலிப் பாம்பை அசபா வித்தையால் மேலே எழும்படியாகச் செய்து...

அஜபை என்றால் ஜெபிக்காத மந்திரம் என்பது பொருள். அதாவது, ஏனைய மந்திரங்கள் மதஉணர்வினால் ஜபம் செய்வதனால் அமைபவை. அஜபாவித்தை என்றால் யாதொரு ஜபமும் அன்னியில் குருகாட்டும் வழியில் திருவடிகளையும் ஆகுஞ்சனத்தையும் செய்வதில் அமைவது.

சபை என்பது தெய்வத்திற்கும் மனிதனுக்கும் உறவு காணும் இடமாகிய சகஸ்ரதளம். இஃது அல்லாதவை அசபையாகும். அதாவது இடைகலை பிங்கலை நாடிகள் கத்திரி மாறலாகப் பின்னிக்கொண்டு சந்தித்து நிற்கும் குறித்தானம், இருதயம், சிரசின் உச்சி ஆகிய மூன்று இடங்களும் அசபையாகும்; அவற்றின் மேலுள்ளது சபை.

உலகில் இரண்டு சத்திகள் உரசுவதால் அக்கினி உண்டாகிறது என்பதை யாவரும் அறிவர். காமத்தினால் ஸ்திரி புருஷ சேர்க்கை ஏற்படும்போது, மூலாதாரத்தி லுள்ள அக்கினி மண்டலம் ஜ்வலிக்கிறது. ஞானத்தினால் மூலாதாரத்திலுள்ள அக்கினி சிரசைக் கடந்து மேலேறி விடுகிறது.

மந்திரம் என்ற சொல்லுக்குக் குகை என்ற பொருள் உண்டு. அறிவின் நிலைக்களமான சிரசில் அமைந்த சகஸ்ர தளத்தில் உள்ள குகையைப் பிளந்து மேலேறும்படி மறைவாக உள்ள இரகசியத்தை எனக்கு வெளிப்படுத்தியும் என்பது, மேலே சொன்ன அடிகளின் கருத்தாகும்.

அ - இடாநாடி - இடக்கண் பார்வை

உ - பிங்கலாநாடி - வலக்கண் பார்வை.

ம - சிரசின் உச்சியில் பொருந்தும் சுழுமுனை நாடியில் உள்ள ஆத்மாவின் ஒளி (அக்கினி).

மூலா தாரத்து மூண்டெழு கனலைக்
காலால் எழுப்பும் கருத்தறி வித்தே

(இ - ள்) குரு காட்டும் நெறியில், குருவின் சகாயத் தால், மூலாதாரத்திலுள்ள அக்கினியை (காமாக்கினியை) இரு நேத்திரங்களாகிய திருவடிகளால் எழுப்பி மேல் கொண்டு வரும் விதத்தை உபதேசித்தருளியும்...

இடாநாடி பிங்கலாநாடி ஊடுருவிச் செல்லும் கண்களே கால்களாகும்.

கால் - நாலில் ஒன்ருகிய கால் பாகத்தைக் குறிக்கும் 'வ' வுக்குப் பெயர் - (வ - அமிர்த பீசம்)

தேருருள், நெசவுத்தறியின் மிதிமுனை, கிரணம், இயமன், வெளியிடு முதலிய பல பொருள்கள் 'கால்' என்னும் சொல்லுக்கு உள்ளன.

எமனை உதைத்த இடக்காலின் சூக்ஷமம் இடக் கண்ணில் உள்ளது.

மூலத் துவாரத்து மூளும் ஒருவனை
மேலைத் துவாரத்து மேலுற நோக்கிமுற்
காலுற்றுக் காலனைக் காய்ந்தங்கி யோகமாய்
ஞாலக் கடவூர் நலமாய் இருந்ததே.

—திருமந்திரம், 345.

'சுழுமுனை' என்பது மூலாதாரத்திலிருந்து முதுகந் தண்டின் ஊடே இடைகலை பிங்கலை வழியே செல்லும் ஒரு நாடி. இடாநாடி இடது கால் பெருவிரலிலும், பிங்கலா நாடி வலதுகால் பெருவிரலிலும் புகுந்து, குறி இரத்தா சயம் தாண்டி, சிரசின் உச்சியில் சுழுமுனை நாடியுடன் கலக்கிறது. இது மூன்று வட்டங்களாகச் சுற்றி, மேலே இரண்டு பாம்புகள் எதிர்முகமாய் நிற்பதுபோல் நாகப் பிரதிஷ்டையில் விளக்கப்பட்டிருக்கும். சிரசுக்குமேல் மூன்று

நாடிகளும் ஒளிவடிவாகக் கலந்து பின்னிக்கொள்ளுகின்றன. அங்கு நாடியற்ற ஆகாயவெளிப் பாதையும் உள்ளது.

மூன்று மடக்குடைப் பாம்பிரண் டெட்டுள
வேன்ற வியந்திரம் பன்னிரண் டங்குலம்
நான்றவிம் முட்டை யிரண்டையுங் கட்டியிட்
டூன்றி யிருக்க உடலழி யாதே.

—திருமந்திரம், 728.

பிண்டத்துள் உற்ற பிழக்கடை வாசலே
அண்டத்துள் உற்று அடுத்தடுத் தேகிடில்
வண்டிச் சிக்கு மலர்க்குழல் மாதரா
கண்டிச் சிக்குநற் காயமு மாமே.

—திருமந்திரம், 736.

## (44—45)

அமுத நிலேயும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையுங் கூறி
இடைச்சக் கரத்தின் ஈரெட்டு நிலேயும்
உடற்சக் கரத்தின் உறுப்பையுங் காட்டிச்
சண்முக தூலமுஞ் சதுர்முகச் சூக்கமும்
என்முக மாக இனிதெனக்கு அருளிப்
புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரிஎட்டு நிலேயும் தெரிசனப் படுத்திக்
கருத்தினிற் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி இனிதெனக்கு அருளி
என்னே அறிவித்து எனக்கருள் செய்து...

(இ - ள்.) இறவாத நிலேயினேயும், சூரியனின் இயக்க நிலேயினேயும், சந்திரகலேயின் தன்மையினேயும், அவன் இயக்கமான பதினறு நிலேகளேயும், உடலாகிய இயந்திரத்தில் உள்ள பஞ்ச கோசங்களேயும், அவை பொருந்தும் தத்துவங்களேயும், உடலில் உள்ள ஆறு ஆதாரங்களும்

அவைகளில் சூக்குமமாக விளங்கும் அந்தக்கரணங்களைப் பற்றிய அறிவும் அடியேனுக்கு அனுபவப்படும்படி,இனிதான இன்பநிலை உண்டாக அருள்புரிந்து, மனம், புத்தி, சித்தம், சப்தஸ்பரிசம், ரூபரசகந்தம் என்றவைகள் பொருந்திய புரியட்டகம் என்ற ஆகாயமய தேகத்தை எனக்குப் புல னாகும் வண்ணம் செய்து, தேகத்திலுள்ள ஏழு நிலைகளையும் துவாதசாந்தம் என்றதையும் சேர்த்த எட்டு நிலைகளையும் அறியச்செய்து, சித்தத்தில் பொருந்தி, பிர்மப் புழையைத் திறக்கும் வழியினைக் காண்பித்து, அங்கு என்னை நிலை பெறச் செய்து...

விளக்கம் :

அமுதநிலை :

மிருதம் என்றால் மரணம். இதற்கு எதிர்மறைப் பொருள் உள்ள அமிர்தம் என்ற சொல், மரணமற்றது அல்லது இறவாதநிலை என்று பொருள்படும். உயிர் பிரிந்த போது உள்ள உடலைப் பிணம் என்கிறோம். பிணம் ஆனவர் மீண்டும் பிழைத்தெழ முடியாது. யோக சமாதியில் உடலின் சேஷ்டைகளை நிறுத்திவிட்டவர் மீண்டும் உடலுக்கு வரலாம் என்று யோகசாஸ்திரம் கூறுகிறது. உலகநிலையில் உள்ள பொருள்களெல்லாம் கஷ்டப்பட்டுச் சம்பாதிக்க வேண்டிய பொருள்களேயாகும். தன்னிடத் துள்ள உண்மைப்பொருளை (நித்தியப்பொருளை) எங்குச் சென்றும் காணமுடியாது. உலகப் பொருள்களுடைய மிருதத்திற்கு எதிர்மறைப் பொருள் அமிர்தமாகும்.

வாயு வழக்க மறிந்து செறிந்தடங்கில்
ஆயுட் பெருக்க முண்டாம்.
துரியங் கடந்த சுடரொளியைக் கண்டால்
மரணம் பிறப்பில்லை வீடு.

உரைசெயு மோசை உரைசெய் பவருக்கு
நரைதிரை யில்லை நமன்.

வாக்கும் மனமும் இறந்த பொருள்காணில்
ஆக்கைக்கு அழிவில்லை யாம்.

மறவா நினையா மவுனத் திருக்கில்
பிறவார் இறவார் பின்.

—ஔவைக் குறள்.

கால்பிடித்து மூலக்கனலை மதிமண்ட லத்தின்
மேலெழுப் பிற்றேகம் விழுமோ பராபரமே.

—தாயுமானவர் பாடல்.

'அழியுந் தன்மைத்தான தேகம், அழியாத ஒரு முதற் காரணத்தை ஆதாரமாகக் கொண்டே இயங்குகின்றது' என்பதைப் பல நூற்றுண்டுகளுக்குமுன் வாழ்ந்த சித்தர்கள் கண்டே, நுட்பமாய் அறிவித்துச் சென்றனர். இதை விரிக்கின் பெரும் புத்தகமாய்விடும். விரும்புவோர், காய சித்தி அல்லது சாகாக்கலை என்ற நூல்கொண்டு தெளிக.

ஆதித்தன் இயக்கம்

இதைப்பற்றி நன்கறிய விரும்புவோர், திருமந்திரம் ஆதித்தநிலை என்ற தலைப்பில் ஏழாம் தந்திரத்தில் கூறப் பட்டுள்ளது கொண்டறியவும். சூரியன் வெப்பந்தரும் இயல் புடன் ஒளியுடன் கூடிய உலகப்பொருள் ஆகும். அதன் ஆற்றல் மனிதனிடம் பிராணசத்தியாகப் புகுந்து தேகத்தை இயக்குகின்றதென்பது யாவருக்கும் தெரியும். அவ்வாற்றல் கட்புலனுக்குப் புலப்படாத ஓர் ஒளியாக உள்ளது என்றும் முன்னோர் கண்டனர். அண்மையில், விஞ்ஞான அறிவு, சூரியனொளிக் கற்றையை ஒரு முப்பட்டைக் கண்ணாடியி னூடே விடுத்தால், அது ஏழு வர்ணங்களாகப் பிரியு

மென்பதையும், மீண்டும் அதையே மற்றுமொரு முப் பட்டைக் கண்ணுடி வழியாகப் பாய்ச்சினுல் அது வெண்ணிற வொளியாய்விடும் என்றும் கண்டுள்ளது. ஏழு ஒளிகள் தக்க அளவுடன் கூடிய ஒரு தகட்டை விரைவாகச் சுற்றிய போது, அதுவும் வெண்ணிறவொளியைஉண்டாக்குகின்றது என்றும் கண்டனர். மனிதனது அண்டகாயம், குணங் களுக்கேற்ற ஒளிகளை மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணி பூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற சக்கரங்களால் வெளியிலிருந்துவரும் பிராணசத்தியை ஜீவசத்தி ஏற்று, மாறிமாறிப் பின்னிச் சிரசையடைந்து பேரொளியாக விளங்குகின்றது. இதன் தெளிவுவிளக்கம் சமய கிண்டர் கார்டன் என்ற புத்தகம் பார்க்க விளங்கும். அநாகதம், விசுத்தி, ஆக்ஞை முதலிய சக்கரங்கள் சிறப்புக் கதிபெறக் கீழுள்ள ஆதாரங்களின் கதி மாற்றமடைய வேண்டும். மேலுள்ள ஆதார சக்கரங்கள் விரைவாகத் தொழிற் பட்டால் கீழியல்பு கெட்டுவிடும், கீழ்ப்பதுமங்கள் சுய நலத்தி லீடுபடுபவை. மேலுள்ளவை சுயநலமற்ற பக்தி, அன்பு முதலிய குணங்களால் தொழிற்படுபவை யாகும்.

சூரியனுடைய ஒளியில் சிவசத்தி என்ற மூலப்பொருள் கலந்துள்ளது. அதுவே உயிர்வாழ்வனவற்றிற் கெல்லாம் ஆதாரமாக உள்ளது. மூலப்பொருள் நமது தூலக் கண்ணுக்குப் புலப்படாமல் உள்ளது. நாம் காண்பது சூரியனின் ஒளியைத்தான். நாம் நம் உடலில் அம்மூலப் பொருளை ஏற்றுக்கொண்டே உயிர் வாழ்கிறோம். மனித னிடம் குண்டலினிசத்தி ஜீவசத்தி இரண்டும் கவிழ்ந்துள்ள மூலாதாரத்தின் வழியாக வெளியிலிருந்து உள்புகுகின்றது. பிராணசத்தி மண்ணீரல் (Spleen) வழியாக உட்புகு கின்றது. புகுந்து, அது அங்கு ஐந்து வாயுக்களாகப் பிரிந்து, உடலின் வெவ்வேறு இடத்தையடைந்து, வெவ் வேருன தொழில்களைச் செய்கின்றது.

முதல் பிரிவு : பிராணவாயு

இது மஞ்சள் ஒளியுடன் பொருந்தி, இரத்தாசயத்தை யடைந்து, இரதித ஓட்டம், சுவாசப் பை இவற்றின் வேலைகளை நடத்தும். தேகத்திற்கு மூச்சும் இரத் தோட்டமும் சூரியனொளியால் உண்டாவதால், அவன் சிறப்பொளி மஞ்சள் நிறம் ஆதல்பற்றி, இதன் இயக்கம் பொருந்திய நாடியைப் பிங்கலா (பொன்) நாடி 'என்று பெயரிட்டனர். வாயு பரிசத்தால் உணரப்படுவது. நாடி அந்த ஆற்றல்கொண்ட நரம்பாற்றலாகும். பிராண சத்தியின் ஒவ்வொரு பகுதிக்கும் வெவ்வேறு பெயரான படியால், பிராணசத்தியின் ஒரு பிரிவே பிராணவாயுவாக ஹ்ருதயம் சுவாசப்பைகளில் தொழிற்படுகிறது. வலக்கண் ணொளியிலும் நாடியாக இயங்குகின்றது. தேகத்தின் ஹிருதயத்திற்கு அதிபராக உள்ளவரை, "அகோர ஹ்ருதயாய நம:" என்று வலப்பக்கம் சிரசில் நியாசம் செய்கின்றனர்.

பஞ்ச வாயுக்களில் இரண்டாவது கிச்சிலிச் சிவப்பு நிறங் கொண்டது. அது மூலாதாரத்துட்சென்று, மலம் ஜலம், விந்து இவற்றைக் கழிக்கும். இதன் ஆதிக்கம் இடக் கண்ணில் இடாநாடியாக மூளைக்குச் செல்லுகிறது. அதனுல் இடப்பக்க மூளையில், "வாமதேவ குஹ்யாய நம" வென்று நியாசம் செய்கின்றனர்.

மூன்ருவது பச்சை நிறங் கொண்டது. அது நாபிச் சக்கரத்தில் (மணிபூரகத்தில்) ·வேலைசெய்து உண்ட அன்னத்தைச் சீரணிக்கச் செய்யும். இதன் ஆதிக்கம் நடு நெற்றியில் உள்ளபடியால், அந்த இடத்தில் "தத்புருஷ வக்த்ராய நம" என்ற மந்திரம்கொண்டு நியாசம் செய் கின்றனர்.

நான்காவதான உதானவாயு, தொண்டைச் சக்கரத் தில் விளங்கிப் பேசும் சத்தியை யளிக்கிறது. இது நீலத்

தடாகத்தில், நிலவொளிபோல் உள்ளது. குண்டலினி குரு காட்டும் நெறியால் கண்பார்வை ஒன்றுபட்டு விளங்கும்போது, முகத்தின்முன் நீலவொளி விளங்கும். அப்போது சந்திரனுதிக்கம் பெற்றவராவர். அப்போது, சிரசில் நாத முழக்கமும் நீலவொளியும் விளங்கும். இதுவே பிரணவ உதிப்பின் அநுபவம் தொடங்கும் நிலையாகும். இந்த நிலைகைவரப் பெற்றவர்க்கு வீரியம் காலக்கிரமத்தில் வற்றிப்போகும். இதுவே திருப்பாற் கடல் கடைந்த இரகசியமாகும். முன்னர்க் கருமையான ஒளியே பின்னர் நீலவொளியாக மாற்றமடைந்து தேகத் திற்கு அமுத ஊற்ருக மாறுகிறது.

அண்டமோ டெண்டிசை தாங்கும் அதோமுகங்
கண்டங் கறுத்த கருத்தறி வாரில்லை
உண்டது நஞ்சென் றுரைப்பர் உணர்விலோர்
வெண்டலை மாலை விரிசடை யோற்கே.

—திருமந்திரம், 521.

செய்தான் அறியுஞ் செழுங்கடல் வட்டத்துப்
பொய்யே யுரைத்துப் புகலும் மனிதர்கள்
மெய்யே யுரைக்கில் விண்ணோர் தொழச்செய்வன்
மைதாழ்ந் திலங்கு மிடறுடை யோனே.

—திருமந்திரம், 255.

ஐந்தாவதான வியானவாயு, இளஞ்சிவப்பு நிறத் துடன் உடம்பு முற்றிலும் நரம்பாற்றலாக உள்ளது. இதன் ஆற்றலே தேகத்திற்கு வலுவை யளிக்கிறது.

மூளையின் வலுவும் வலுக்குறைவும் புருவ நடுவிலுள்ள நெற்றிச் சக்கரத்தைப் பொறுத்துள்ளன. இது நெற்றிக்கு நேரே ஒரு முழம் நீண்டவொளி காணும்போது, யோகி யின் இச்சை உடம்பு மாற்றமடைவதைக் காணலாம். இந்த மாற்றத்தினுல் ஆறுதாரங்களும் வளர்ச்சியுறும்,

## பிராண சக்தியின் பஞ்சவாயுக்கள்

| | வாயு | நிறம் | மண்ணீரலிலிருந்து நோக்கிச் செல்லும் சக்கரம் | வேலை |
|---|---|---|---|---|
| 1. | பிராணன் | மஞ்சள் | இதயம் | இரத்தோட்டம், சுவாசம். |
| 2. | அபானன் | கிச்சிலிச் சிவப்பு | குதம், குய்யம். | மலம், ஜலம், விந்து பாகம் பண்ணல். |
| 3. | சமானன் | பச்சை | நாபி | ஜீரணம். |
| 4. | உதானன் | கருநீலம் | கழுத்து | குரல், பேச்சு. |
| 5. | வியானன் | இளஞ் சிவப்பு | மண்ணீரல் | நரம்பு, மூளை பண்படுதல். |

இந்தச் சூரியவொளியில் விளங்கும் சிவசத்தியை சூக்ஷும திருஷ்டியில் கண்ட முன்னோர்கள் சிவலிங்கமாக அமைத்து வழிபட்டனர். அதைச் சங்கேதக்குறியாக எழுத்தாலும் விளக்கினர். சூரியவொளியில் செங்குத்தாக இயங்கும் ஆற்றலுள்ள அணுக்களும், வட்டமாகப் பறந்துசெல்லும் அணுக்களும் பொருந்திய சேர்க்கையாலே உலகம் பல்வேறு வகையாகப் படைக்கப்பட்டுள்ள தென்பதைக் கண்டுள்ளனர். செங்குத்தாக மேலும் கீழும் சென்றுகொண்டிருப்பதை ஆண் அணுவென்றும், வட்ட வடிவமாக மையத்தினின்றும் பிரிந்து சுற்றுவதைச் சத்தி

என்றும் கண்டனர். இந்த அடிப்படையைக் கொண்டு தத்துவ உண்மையை விளக்கினர். அ, என்றபோது சுழி, வட்டம், படுக்கைக் கோடு, செங்குத்துக்கோடு ஆகிய நான்கு உறுப்புகளும் ஒருங்கிணைந்துள்ளன. உ, என்ற போது சுழியின் பகுதியும், படுக்கைக்கோடும்தான் உள்ளன. சுழியும், நேர்கோடும் அகரத்தில் அடங்கிவிடுவதால் 'சத்தி தொழிலறுதியானபோது, சிவத்தில் ஒன்றிவிடும்' என்றனர். சூரியன் ஒரே மாதிரியாக உள்ளவன் ஆதல் பற்றிச் சூரியனை உகாரம் என்ற சத்தியாக வழிபட்டனர். காயத்திரி தேவியின் ஆற்றலே பெரிய வைதிகர்களுக் காயிற்று. வைஷ்ணவர் காணும் சூரியனை நாரயணனின் தூல உருவென்கின்றனர். சைவர்களும் சாதசிவத்தின் தூல உடலைச் சூரியன் என்று கூறுகின்றனர்.

பகலவன் மாலவன் பல்லுயிர்க் கெல்லாம்
புகலவ னுய்நின்ற புண்ணிய நாதன்
இகலற ஏழுல கும்முற வோங்கும்
பகலவன் பல்லுயிர்க் காதியு மாமே.

—திருமந்திரம், 1976.

ஆதித்தனுக்கு ஆதி குருவென்று ஒரு பெயருண்டு. சத்தியாகவோ, சிவமாகவோ, விஷ்ணுவாகவோ, சூரியனாகவோ, அவ்வொளியை வழிபடில், அவரவர் ஜீவவொளியும் பெருகும் என்றார்.

ஆதித்தன் அன்பினொ டாயிர நாமமுஞ்
சோதியி னுள்ளே சுடரொளி யாய்நிற்கும்
வேதியர் வேண்டினும் விண்ணவர் சொல்லினும்
ஆதியில் அன்பு பழுக்கின்ற வாறே.

—திருமந்திரம், 1977.

தானே யுலகுக்குத் தத்துவ ஞய்நிற்குந்
தானே யுலகுக்குத் தையலு மாய்நிற்குந்
தானே யுலகுக்குச் சம்புவு மாய்நிற்குந்
தானே யுலகுக்குத் தண்சுட ராகுமே.

—திருமந்திரம், 1978·

மண்ணீரல் பகுதியிலிருந்து சுவாதிஷ்டானம் மூலா தாரம் வந்து சிரசை அடையும் அண்டாதித்தனை யாரும் அறியமாட்டார்.

பாருக்குக் கீழே பகலோன் வரும்வழி
யாருக்குங் காணவொண் ணுத அரும்பொருள்
நீருக்குந் தீக்கு நடுவே யுதிப்பவன்
ஆருக்கும் எட்டாத ஆதித்தன் தானே.

—திருமந்திரம், 1982.

குறிப்பு : பாருக்குக் கீழே பகலோன் வரும்வழி என்பது சுழுமுனை நாடி.

நீருக்குந் தீக்கு நடுவே என்பது, மணிபூரகத்திற்கும் அநாகதத்திற்கும் இடையேயுள்ள மண்ணீரல் ஆகும்.

கண்களில் செய்யும் கிரியைக்கும் தோத்திரத்திற்கும் இசைந்து, சிரசின் பகுதியில் வெளிப்படுபவன்.

மண்ணை யிடந்ததின் கீழோடும் ஆதித்தன்
விண்ணை யிடந்து வெளிசெய்து நின்றிடுங்
கண்ணை யிடந்து களிதந்த வானந்தம்
எண்ணுங் கிழமைக் கிசைந்துநின் ருனே.

— திருமந்திரம், 1983.

பாரை யிடந்து பகலோன் வரும்வழி
யாரும் அறியார் அருங்கடை நூலவர்
தீரன் இருந்த திருமலை சூழென்பர்
ஊரை யுணர்ந்தார் உணர்ந்திருந் தாரே.

— திருமந்திரம், 1984.

நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும்
கன்றுய நந்திக் கருத்துள் இருந்தனன்
கொன்று மலங்கள் குழல்வழி யோடிட
வென்று விளங்கும் விரிசுடர் காணுமே.

—திருமந்திரம், 1985.

ஆதித்தன் ஓடி யடங்கும் இடங்கண்டு
சாதிக்க வல்லவர் தம்மை யுணர்ந்தவர்
பேதித் துலகம் பிதற்றும் பிதற்றெல்லாம்
ஆதித்த னேடே யடங்குகின் ருரே.

—திருமந்திரம், 1986.

குறிப்பு : ஆதித்தனுல் அடைந்த அறிவெல்லாம் சுட்டி அறியும் பிரபஞ்ச ஞானமேயாகும். சுட்டி அறிதலின் செயல் மடங்கினபோது, ஆதித்தனது நிலே முடிவுறும்.

உருவிப் புறப்பட் டுலகை வலம்வந்து
சொருகிக் கிடக்குந் துறையறி வாரில்லை
சொருகிக் கிடக்குந் துறையறி வாளர்க்
குருகிக் கிடக்குமென் னுள்ளன்பு தானே.

—திருமந்திரம், 1987.

வலப்புறச் சூரியனுக்கும் இடப்புறச் சந்திரனுக்கும் இடையில் ஆத்மா உள்ள நிலேயாகும். இதுவே சகஸ்ரதள நிலேயாகும். இது உள்ளத்தில் விளங்கும் ஆதித்தனுகும்.

எறிகதிர் ஞாயிறு மின்பனி சோரும்
எறிகதிர் சோமன் எதிர்நின் றெறிப்ப
விரிகதி ருள்ளே விளக்குமென் ஆவி
ஒருகதி ராகில் உவாவது வாமே.

—திருமந்திரம், 1988.

சந்திரன் சூரியன் தான்வரிற் பூசனை
முந்திய பானுவில் இந்துவந் தேய்முறை
அந்த இரண்டும் உபய நிலத்திற்
சிந்தை தெளிந்தார் சிவமாயி னாரே.

—திருமந்திரம், 1989.

சோமவொளி, சூரியவொளி, அக்கினிவொளி, (பிடரிக்கண்) மூன்றும் சேர்ந்ததே ஆத்மா. இம் மூன்றும் சேர்வதே உள்ளத்தின் பௌர்ணமியாகும்.

ஆகுங் கலையோ டருக்கன் அனல்மதி
ஆகுங் கலையிடை நான்கென லாமென்பார்
ஆகும் அருக்கன் அனல்மதி யோடொன்ற
ஆகுமப் பூரணை யாமென் றறியுமே. —திருமந்திரம், 1990.

அவ்வொளி பூலோக புவர்லோக வொளிகளுக்கப்பாற் பட்டது.

ஈரண்டத் தப்பால் இயங்கிய வவ்வொளி
ஓரண்டத் தார்க்கும் உணரா வுணர்வது
பேரண்டத் தூடே பிறங்கொளி யாய்நின்ற
தாரண்டத் தக்கா ரறியத்தக் காரே. —திருமந்திரம், 1991.

ஒன்பதின் மேவி யுலகம் வலம்வரும்
ஒன்பது மீசன் இயலறி வாரில்லை
முன்பதின் மேவி முதல்வன் அருளிலார்
இன்ப மிலாரிருள் சூழநின் றாரே. —திருமந்திரம், 1992.

இதன்மேல், சதாசிவ தத்துவ விளக்கம் கூறப்படுகிறது;

விந்து அபரம் பரமிரண் டாய்விரிந்
தந்த அபரம் பரநாத மாகியே
வந்தன தம்மிற் பரங்கலை யாதிவைத்
துந்தும் அருணோ தயமென்ன வுள்ளத்தே

—திருமந்திரம், 1993.

குறிப்பு :

பரங்கலை யாதிவைத்து உந்தும் சாந்தியதீதகலை சிறப்புற்றபோது, அதன் கீழான சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவர்த்தி முதலியனவும். அங்குச் சூக்குமமாய் இடம் பெறும் என்றபடி. இது சூக்குமை வாக்கின் நிலையா கும். அபரம் மற்ற வாக்குகளின் நிலையாகும்.

உள்ள அருணோ தயத்தெழும் ஓசைதான்
தெள்ளும் பரநாதத் தின்செய லென்பதால்
வள்ளல் பரவிந்து வைகரி யாதிவாக்
குள்ளன ஐங்கலைக் கொன்றும் உதயமே.

—திருமந்திரம், 1994.

தேவர் பிரான்திசை பத்துத யஞ்செய்யும்
மூவர் பிரானென முன்னொரு காலத்து
நால்வர் பிரான்நடு வாயுரை யாநிற்கும்
மேவு பிரான் என்பர் விண்ணவர் தாமே.

—திருமந்திரம், 1995.

பொய்யிலன் மெய்யன் புவனா பதியெந்தை
மையிருள் நீக்கு மதியங்கி ஞாயிறு
செய்யிருள் நீக்குந் திருவுடை நந்தியென்
கையிருள் நீங்கக் கலந்தெழுந் தானே

—திருமந்திரம், 1996.

தனிச்சுட ரெற்றித் தயங்கிருள் நீங்க
அனித்திடு மேலை யருங்கனி யூறல்
கனிச்சுட ராய்நின்ற கயிலையில் ஈசன்
நனிச்சுடர் மேல்கொண்ட வண்ணமு மாமே

—திருமந்திரம், 1979.

நேரறி வாக நிரம்பிய பேரொளி
போரறி யாது புவனங்கள் போய்வருந்
தேரறி யாத திசையொளி யாயிடும்
ஆரறி வாரிது நாயக மாமே. —திருமந்திரம், 1998.

மண்டலத் துள்ளே மலர்ந்தெழும் ஆதித்தன்
கண்டிடத் துள்ளே கதிரொளி யாயிடுஞ்
சென்றிடத் தெட்டுத் திசையெங்கும் போய்வரும்
நின்றிடத் தேநிலே நேரறி வார்க்கே. —திருமந்திரம், 1999.

இந்த ஆதித்தனே உடலில் காண வேண்டும்.

நாபிக்கண் ணுசி நயன நடுவினுந்
தூபியோ டைந்துஞ் சுடர்விடு சோதியைத்
தேவர்கள் ஈசன் திருமால் பிரமனும்
மூவரு மாக வுணர்ந்திருந் தாரே. —திருமந்திரம், 2000.

இந்தச் சிவாதித்தனேதான் ஆத்மா, சிவசத்தி என்றெல்லாம் வழங்கப்படுகிறது.

அன்றிய பாச இருளுமஞ் ஞானமுஞ்
சென்றிடு ஞானச் சிவப்பிர காசத்தால்
ஒன்று மிருசுட ராம்அரு ணோதயந்
துன்றிருள் நீங்குதல் போலத் தொலைந்ததே.
—திருமந்திரம், 2001.

கடங்கடந் தோறுங் கதிரவன் தோன்றில்
அடங்கிட மூடில் அவற்றில் அடங்கான்
விடங்கொண்ட கண்டனு மேவிய காயத்
தடங்கிட நின்றதும் அப்பரி சாமே.
—திருமந்திரம் 2002,

தானே விரிசுடர் மூன்றுமொன் ருய் நிற்குந்
தானே யயன்மா லெனநின்று தாபிக்குந்
தானே யுடலுயிர் வேறன்றி நின்றுளன்
தானே வெளியொளி தானிருட் டாமே.

—திருமந்திரம், 2003.

ஆறு ஆதாரங்களிலும் ஐந்து மூர்த்திகளும் உளர்; மூன்று சுடர்களுமுள்ளன; பஞ்சபூத நிலேகளும் உள்ளன.

தெய்வச் சுடரங்கி ஞாயிறுந் திங்களும்
வையம் புனல்அனல் மாருதம் வானகஞ்
சைவப் பெரும்பதி தாங்கிய பல்லுயிர்
ஐவர்க் கிடமிடை யாறங்க மாமே.

—திருமந்திரம், 2004.

குமுத சகாயன் குணம் :

குமுதம் -

அல்லிப் பூவுக்குப் பெயர். இது மாலேயில் மலர்வது பற்றிச் சந்திரனுக்குகந்த புஷ்பமாயிற்று. சந்திரன் வீரியத்திற்கும் ஜீவனின் சாந்த ஒளிக்கும் காரணமாகும். இவனது திசை வடக்கைக் குறிக்கும் இடக்கண் பக்கமாகும். இங்கு உணர்வுதித்துச் செயல் படுவதே உத்திராயண புண்ணிய காலமாகும். பௌதிகச் சூரியனல்லவென்பதை அறியவும். அறிவுருவான சூரியன் ஈசான திக்கில் விளங்குவதே சந்திரனின் பிராபல்யம் ஆகும். இப்பகுதியில் உணர்வுபெற்ருேர் காமக்குரோத லோப மோகங்கஃாயும், சிற்றின்ப இச்சைகஃாயும் அடக்கத் திறம் பெற்ருேராவர். முன்னர்க் காமக்கழிவு செய்தபோது சந்திரன் ஒருகலே யுடையவனுய் சுவாதிஷ்டானத்தில் பொருந்தியிருந்தான். இங்கே உணர்வு சிறப்புற்றபோது சிரசில் நாதமுழக்கம் உண்டாகும். நாத சம்மியத்தால் வாழ்நாள் நீடிக்கும். இந்த நிலேயை ஆங்கிலத்தில் Speech Centre என்பர். கிரியை

**வழிப் பூசிப்போர் புறத்தே வாகீஸ்வரன், வாகீஸ்வரி என்று ஈசானத் திக்கில் பூசிப்பர். இந்நிலை விளங்கப் பெற்றவர் சாந்தகுண சீலராயிருப்பர். சிரசில் ஒரு இன்பக் கிளுகிளுப்பும் பொருந்தும்.**

விடாத மனம்பவ னத்தொடு மேவி
நடாவு சிவசங்கின் நாதங் கொளுவிக்
கடாவிடா ஐம்புலன் கட்டுண்ணும் விடு
படாதன இன்பம் பருகார் அமுதமே.

—திருமந்திரம், *880.*

அமுதப் புனல்வரு மாற்றங் கரைமேற்
குமிழிக் குட்சுட ரைந்தையுங் கூட்டிச்
சமையத் தண்டோட் டித்தரிக்க வல்லார்க்கு
நமன் இல்லை நற்கலை நாள்இல்லை தானே.

—திருமந்திரம், *881.*

உண்ணீ ரமுத முறுமூ றலைத்திறந்
தெண்ணீர் இணையடித் தாமரைக் கேசெலத்
தெண்ணீர்ச் சமாதி யமர்ந்துதீ ராநலங்
கண்ணுற் றுடேசென்று கால்வழி மாறுமே.

—திருமந்திரம், *882.*

**இடைச் சக்கரத்தின் ஈறெட்டு நிலை:**

| | பெயர் | | நிலை |
|---|---|---|---|
| *1.* | அகரம் (மேதை) | — | உந்தி |
| *2.* | உகரம் (அர்க்கீசம்) | — | ஹ்ருதயம் |
| *3.* | மகாரம் (விஷம்) | — | கண்டம் |
| *4.* | விந்து | — | புருவமத்தி |
| *5.* | அர்த்த சந்திரன் | — | நடுநெற்றி |
| *6.* | நிரோதினி | — | மேல்நெற்றி |
| *7.* | நாதம் | — | சிரசு |
| *8.* | நாதாந்தம் | — | சிரசு |

| | பெயர் | | நிலை |
|---|---|---|---|
| 9. | சத்தி | — | இவை எல்லாம் சிரசின் மேல் நிமிர்ந்த சகஸ்ரதளத்தில் விளங்குபவை |
| 10. | வியாபினி | — | |
| 11. | வியோமரூபினி | — | |
| 12. | அநந்தை | — | |
| 13. | அநாகிருதை | — | |
| 14. | அநாதை | — | |
| 15. | சமனை | — | |
| 16. | உன்மனை | — | |

உடற்சக்கரத்தின் உறுப்பையும் காட்டி

உடலாகிய இயந்திரத்தில் தூலநிலையில் பொருந்தியுள்ள பிராணமயகோசம் இயங்கும் மூலாதாரமாகிய ஆறு ஆதாரங்களையும் காட்டி...

சண்முக தூலமும் சதுர்முக சூக்கமும் என்முகமாக இனிதெனக் கருளி:

என்னறிவில் புலப்படும்படியாகத் தூலமான ஆறு ஆதாரங்களையும் உருவ, அருவ, விஞ்ஞானமய, ஆனந்தமய கோசங்களையும் காட்டியருளியும், அதனல் இன்பமடையச் செய்தும்...

புரியட்ட காயம் புலப்பட எனக்குத் தெரிஎட்டு நிலையும் தெரிசனப் படுத்தி:

புரியட்ட காயம் என்பது சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், மனம், புத்தி, அகங்காரம் பொருந்திய சூக்கும உடலுக்குப் பெயர். இது தெரியவேண்டுமானல் முகத்தின் முன் ஒருமுழ அளவுள்ள மனமண்டலம் (உள்ளத்தின் சோதி) விளங்கவேண்டும். இது புலப்பட்டு அவ்வறிவு பெற்ருல், எங்கெங்கும் உள்ள மக்கள் செயலை இருந்த இடத்தில் நினைத்தபோதே அறியும் ஆற்றல் கிட்டும்.

மக்கள் இவ்வெட்டின் காரியத்திலீடுபடுவதை அறிவதைக் காணும் திறனை உண்டாக்கிக் கொடுத்து—என்றபடி...

கருத்தினில் கபால வாயில் காட்டி, இருத்தி :

மனத்தின் ஆற்றலால் பிர்மப் புழையைக் கடந்து, ஊர்த்துவ சகஸ்ரதளம் பெற்று, அங்கு என்னை நிலைபெறும்படி செய்து(சிவராஜயோக சமாதியிலிருத்தி)...

முத்தி இனிதெனக் (கு) அருளி:

தேகங்கடந்து சிவசாதாக்கியத்தில் பொருந்திய அழியாத நிலையைச் சிவானந்தம் பெற்றுய்யுமாறு எனக்களித்து...

என்னை அறிவித்து :

ஆத்ம சொரூபம் சுயம் சோதியானது. அது மனம், புத்தி, அகங்காரம், தேகோபாதைகள் யாவும் கடந்து விளங்கும் அகண்ட அறிவு நிலையாகும். அப்படிப்பட்ட நிலையை எனக்கு அறிவித்து...

எனக்கு அருள் செய்து :

மேலே கண்டவைகளையெல்லாம் எனக்கு உனதருளால் கிடைக்கச் செய்து...

(56 - 62)

முன்னை வினையின் முதலைக் களைந்தே
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்து
இருள்வெளி இரண்டிற்கு ஒன்றிடம் என்ன
அருள்தரும் ஆனந்தத்து அழுத்திஎன் செவியில்
எல்லை இல்லா ஆனந்தம் அளித்து
அல்லல் களைந்தே அருள்வழி காட்டிச்...

(இ - ள்.) அநாதி காலந்தொட்டு இடையறாது வரும் பிறப்பு இறப்புகளுக்குக் காரணமாகிய வினைகளை

யெல்லாம் (செயல்படாமல்) வேரோடு பறித்து எறிந்து, வாக்கினுற் சொல்லுதற்கும் மனத்தினுல் நினைத்தற்கும் எட்டாத, மனம் தொழில்படாத மௌன நிலையை நிலை நிறுத்தி, ·(அதனுல்) அடியேனது சிந்தையினைத் தெளிவு பெறச் செய்து, அறியாமை அறிவு என்ற இரண்டிற்கும் ஆத்மாவே பிறப்பிடம் என்றுரைத்து, அடியேன் செவியில் திருவருட்பேற்றைத் தரும் சிவானந்த மாவெள்ளமாகிய நாதவொலியில் அடியேனை மூழ்கும்படி செய்து, வரம்பு இல்லாத சிவானந்த சுகத்தை (அடியேனுக்கு) வழங்கிப் பிறவித் துன்பத்தை வேரோடு அறுத்துத் திருவருள் நெறியினைக் காண்பித்து...

### விளக்கம்

முன்னை வினையின் முதலைக் களைந்தே
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்து

முன்னை வினையின் முதல் அசுத்த மாயையிலும், சுத்தா சுத்த மாயையிலும் உள்ளது. அசுத்த மாயை ஆன்மதத்துவம் 24லும், சுத்தா சுத்தம் வித்தியாதத்துவம் ஏழிலும் பொருந்தியே தேகம் எடுக்கக் காரணமாக உள்ளன. பக்குவான்மாக்களுள், பண்டைய பிறவி களில் சரியை, கிரியை, யோக நெறிகளைக் கடைப்பிடித்து வந்தவர்களே உண்மையான ஞானயோகத்திற்குத் தகுதி பெறுகின்றனர்.

யோகியர்க்கே ஞானம் ஒழுங்காம் பேரன்பான்
தாகியரும் யோகம்முன்னே சார்ந்தோர் பராபரமே.
—தாயுமானவர்.

இங்கு, யோகம் என்பது ஹடயோகம் அல்ல. மந்த்ர சாதனத்தால், வாசியோகத்தால் அடையும் யோகமே யாகும்.

காலையுயிர் என்னும் கலதிகள்சொற் கேளாமல்
சீலமுடன் எம்மைத் தெளிந்துகொள்வ தென்னுளோ?

—தாயுமானவர்.

**பாவனையால் இறைவனை யடைய முடியாது.**

வான்காண வேண்டின் மலையேற லொக்கும் உன்னை
நான்காணப் பாவனைசெய் நாட்டம் பராபரமே.

—தாயுமானவர்.

**கிரியை வழியால் இறைவனை அடைய முடியாது.**

கானுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுற மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி யுணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே.

—திருமந்திரம், 1848.

தன்னை யறிந்தருளே தாரகமாய் நிற்பதுவே
உன்னை அறிதற் குபாயம் பராபரமே.

—தாயுமானவர்

ஞானயோகத்தில், தன்னுண்மை ஒளிவடிவு என்று அறிந்தபோது அருள்வயப்பட்டவராகின்றனர். சிவதத்துவம் திடப்படுகிறது. அதனால் இருள் கெடுகின்றது. இருள் கெட்டொழிந்தபோது வினைக்குக் காரணமான காரண சரீரம் அழிந்துவிடுகிறது. உருவமனம் அழிந்தவர்க்குக் காரண சரீரம் அழிந்துவிடுகிறது. தேகங்கடந்து அறிவொளியில் நிற்பவர்க்கு முன்னை வினையாகிய இருள்முதல் அகற்றப்பட்டுவிடுகிறது.

வாக்கும் மனமும் உள்ளவரையில் சிரசில் நாதமுழக்கம் என்ற நாதம் இருந்துகொண்டிருக்கும். அந்நிலையில் காண்போன், காட்சி, காணப்படுபொருள் மூன்றும் விளங்கிக்கொண்டேயிருக்கும். நாதாந்தம் சென்றபோது, திரிபுடி என்ற இம்மூன்றும் அற்று, அகண்டத்தில் நிற்கக்

கூடும். அதனுல், வாக்கும் மனமும் இல்லா மனேலயம் என்று கூறப்பட்டுள்ளது.

கற்றகலை யால்நிலைதான் காணுமோ காண்பதெல்லாம்
அற்றவிடத் தேவெளியாம் பராபரமே.

நேரே நினதருளென் நெஞ்சைக் கவரின் ஒன்றும்
பாரேன் பராாபரமே.

வாதனைவிட் டுன்னருளின் மன்னினல்லால் வேறுமொரு
சாதனைதான் உண்டோ சாற்ருய் பராபரமே.

ஒப்புயர் வொன்றின்றி ஒலிபுகா மோனவட்டக்
கப்பலுக்காம் வான்பொருள்நீ கண்டாய் பராபரமே.

சிந்தனைபோய் நானெனல் போய்த் தேக்கவின்ப
மாமழையை
வந்து பொழிந்தனைநீ வாழி பராபரமே.

—தாயுமானவர் பாடல்.

உரையிறந்தால் உன்னு முணர்விறந்தால் மாயைத்
திரையிறந்தால் காண்கின்ற தேவை—வரைபெருக
வாசிப்ப தும்நாவால் வாழ்த்துவதும் நாடகமாய்ப்
பூசிப்பதுஞ் சுத்தப் பொய்.

—சிவபோக சாரம்.

சித்தத் தடாகத்தில் மனம், புத்தி, அகங்காரம் பொருந்திய அந்தக் கரணம் உள்ளது. சித்தம் மனம் செயலொழிந்தபோது புத்திக்கும், செலுத்தும் அகங்காரத் எற்கும் வேலையில்லை. கரைகட்டிய நீர்த்தேக்கம் போல் தன்னிலையில் நிற்கும்போது, ஆத்மாவின் செயல் கருவி களான தத்துவங்கள் 36ம் சேட்டையற்றன. அதனுல், ஆத்மாவின் தனிநிலையில் உள்ளதைத் 'தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்து' என்ருர். ஆத்மா தனது நிலையில் சத்து, சித்து, ஆனந்தமயமாய் உள்ளது.

இருள்வெளி இரண்டிற்கு ஒன்றிடம் என்ன
அருள்தரும் ஆனந்தத்து அழுத்தி :




சாதாரண மனிதனின் கீழ்முகங்கொண்ட அந்தக் கரணச் செயலுக்குரிய நிலையை இப்படம் காட்டுகிறது. ஆத்மா அந்தக் கரணத்தைக் கீழ்நோக்கிச் செலுத்தும் இயக்க நிலை இது ஆகும்.




ஞானியின் மேல்முகங் கொண்ட சித்தத்தடாக நிலையை இப்படம் காட்டுகிறது.

முன்னர்ப் பாசபந்தியா யிருந்தபோது 'தேகமே தான்' என்றிருந்தான். தேகம் தானல்ல; தான் தேகங்கடந்த

வெளியே என்றிருந்தபோது, வெளிமயனுக ஞானி ஆனுன். முன்னர் இருளாக இருந்து தன்னையுணராது மறைத்ததும், ஒளியாகத் தன்னுண்மையை உணர உணர்த்தியதும், இந்த ஒரே ஆகாயந்தான் என்பதை அறிகிருன். அறிந்தபோது இருளும் ஒளியாகவும், தனக்குப் பாசபந்தமாகவும் அருளாகவும் இருப்பது, ஆகாயத்தை இடமாகக் கொண்டு விளங்கும் ஒரு சத்தி என்பதை உணரமுடிந்தது. அந்தச் சத்தி பாசபந்தியாக இருந்தபோது உலகப்பொருளை நாடிப் பெற்று, அதனுல் இன்பம் பெறச் சுட்டறிவாகச் செயல் படுத்தியது. ஒளியான ஞான சத்தியானபோது, புறத்தே நாடுவதைவிட்டு, அகநிலையில் இன்பத்தையளித்து, அதிலே என்னைத் திளைக்கச்செய்து, அகண்ட ஞானத்தை அளித்தது.

ஆகாச வண்ணன் அமரர் குலக்கொழுந்
தேகாச மாசுண மிட்டங் கிருந்தவன்
ஆகாச வண்ணம் அமர்ந்து நின்றப்புறம்
ஆகாச மாயங்கி வண்ணனு மாமே.

—திருமந்திரம், 2809.

சிரசில் ஒரு இன்பக் கிளுகிளுப்புத் தோன்றுவதில் இது தன்னையே மறக்கச் செய்துவிடும். திருப்பாண்டிப் பதிகம், திருவாசகம் பார்க்க இது நன்கு விளங்கும்.

நீரின்ப வெள்ளத்துள் நீந்திக்
　　குளிக்கின்ற நெஞ்சங் கொண்டீர்
பாரின்ப வெள்ளங் கொளப்பரி
　　மேற்கொண்ட பாண்டிய ஞர்
ஓரின்ப வெள்ளத் துருக்கொண்டு
　　தொண்டரை உள்ளங் கொண்டார்
பேரின்ப வெள்ளத்துட் பெய்கழ
　　லேசென்று பேணுமினே.

மாய வனப்பரி மேல்கொண்டு
மற்றவர் கைக்கொளலும்
போயறும் இப்பிறப் பென்னும்
பகைகள் புகுந்தவருக்
காய அரும்பெருஞ் சீருடைத்
தன்னரு ளேயருளும்
சேய நெடுங்கொடைத் தென்னவன்
சேவடி சேர்மின்களே.

அழிவின்றி நின்றதோர் ஆனந்த
வெள்ளத் திடையழுத்திக்
கழிவில் கருணையைக் காட்டிக்
கடிய வினையகற்றிப்
பழமலம் பற்றத் தாண்டவன்
பாண்டிப் பெரும்பதமே
முழுதுல குந்தரு வான்கொடை
யேசென்று முந்துமினே. —திருவாசகம்.

### என் செவியில்

**எல்லை யில்லா ஆனந்தம் அளித்து**
**அல்லல் களைந்தே அருள்வழி காட்டி :**

**ஆகாய பூதத்தின் செயல் சத்தம். சத்த தன்மாத் திரையை செவிப்புலன் வழியே அறிவது அறிவு உருவான ஆத்மா ஆகும். மந்திரத்தின் வாச்சியார்த்தப் பொருள் பிரணவ கோஷமாகும். இது நுண்புலனறிவு. எந்த மகாமந்திர செபமும் சித்திக்கும் அறிகுறி நாதகோஷ மாகும். அதில் திளைப்பதில் துன்பமயமான உலக வாசனை விட்டு, அருள்மயமான ஆகாசப்பேறு கிட்டும்.**

முக்குணம் புலனைந் துடனடக்கி
மூல வாயுவை யடைத்திரு விழியைச்
சிக்கெனும்படி யடைத்தொரு வழியைத்
திறந்து தாண்டவச் சிலம்பொலி யுடன்போய்த்

தக்க வைந்தெழுத் தோரெழுத் துருவாய்த்
தன்மை கண்டவர் தரும்பெரு வெளிக்கே
புக்கழுந் தினரெமதுருப் பெறுபவர் புவியில்
வேட்டுவ னெடுத்தமண் புழுப்போல்.

—வாதவூரர் புராணம்.

திருச்சிலம் போசை ஒலிவழியே சென்று
நிருத்தனைக் கும்பி டென்றுந் தீபற
நேர்பட அங்கே நின்றுந் தீபற
மருளுந் தெருளும் மறக்கும் அவன்கண்
அருளை மறவா தேயுந் தீபற
அதுவே யிங்குள்ள தென்றுந் தீபற.

—திருவுந்தியார்.

முன்னரே சிலம்பொலி பரையோகம், பரைபோகம், பரையிலதீதம் என்றவிடத்தில் விளக்கப் பட்டுள்ளது.

பிறியாத தண்ணருட் சிவஞானியாய் வந்து
பேசரிய வாசியாலே
பேரின்ப வுண்மையையளித் தனையென் மனதறப்
பேரம்பலக் கடவுளாய்
அறிவா யிருந்திடு நாதவொலி காட்டியே
அமுர்தப் பிரவாக சித்தி
அருளினை யலாதுதிரு வம்பலமு மாகியெனை
ஆண்டனைபின் எய்தி நெறியாய்க்
குறிதா னளித்தனைநன் மாவுரி கொளந்தணக்
கோலமாய் அசபாநலங்
கூறினபின் மௌனியாய்ச் சும்மா இருக்கநெறி
கூட்டினை யெலா மிருக்கச்
சிறியேன் மயங்கிமிக வறிவின்மை யாவனோ
தேடறிய சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்த மே.

—தாயுமானவர் பாடல்

## (63-67)

சத்தத்தி னுள்ளே சதாசிவங் காட்டிச்
சித்தத்தி னுள்ளே சிவலிங்கங் காட்டி
அணுவிற்கு அணுவாய் அப்பாலுக்கு அப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்...

(இ - ள்.) சிரசின்மேல் சாதாக்கிய நிலையில் அமூர்த்தி சாதாக்கியத்தை வெளிப்படுத்தி, எனது அருவ மனமண்டலத்தில் விந்து நாதரூபமான சிவலிங்கத்தைக் காட்டி, மகா சூக்ஷமமான ஒளிக்கிரணத்திற்கு நுண்ணியதாயும், அண்டங்களைக் கடந்த பரவொளியாயும், கணுக்களையுடைய கரும்பு முற்றினபோது வெடித்துச் சாற்றினை வெளிப்படுத்துவது போல, என்னிடம் மறைந்திருந்த விந்துநாதங்களை வெளிப்படுமாறு செய்து, துறவியர் அணியும் காவி ஆடை, திருநீறு இவற்றின் உண்மைத் தத்துவமான செவ்வொளியும் வெண்ணிறவொளியும் கலந்து விளங்குமாறு செய்து (ரோஜாப்பூ நிறம்)...

### விளக்கம் :

**சத்தத்தி னுள்ளே சதாசிவங் காட்டி :**

காணும் உருவமான உடல் 24 தத்துவங்களுடன் கூடியுள்ளது. அதில் அந்தக் கரணம் நான்கும் அறிவினால் ஊகிக்கப்படுவதே தவிர்த்து, நேரே அறியப்படாதது. பிரேரகம் செய்யும் சிவதத்துவம் ஊகித்தறியப்படுவதே தவிர நேரே அறியப்படாததுதான். பிரேரகம் செய்யும் சிவதத்துவம் சுத்தவித்தை, மகேசுவரம், சாதாக்கியம், விந்துநாதம் என்ற தத்துவங்களாலாயது.

ஆத்மாவின் அண்டகோசத்தில் 36 தத்துவங்களும் தொழிற்படுகின்றன. ஆத்மாவின் சொரூபம் விந்துநாத

மாக உள்ளது. விந்துநாதம் என்பது ஆகாயத்தில் உள்ள Electro Magnetism என்ற ஆகாசக் கூறுகும். இதில் எண்ண அலைகளும் சொல்லலைகளும் தொழிற்படுகின்றன. டிரான் ஸிஸ்டரில் இந்த ஆகாயஅலை ஆற்றலால்தான் எங்கேயோ பேசுவதைக் கேட்கிறோம். டெலிவிஷனில் எங்கேயா நடப்பதைப் பார்க்கவும் கேட்கவும் முடிகிறது. அத்தகைய அலைபொருந்திய நுண்ணுகாயம் சாதாரண மனிதனிடம் கருவாக விளக்கமன்னியில் உள்ளது. யோகியினிடம் அந்த ஆகாயக்கூறு சிறப்புற்று வளர்ந்துள்ளது. அதன் பெருக் கத்தால் யோகி சூக்ஷமப் பார்வையும் சூக்ஷமக் கேள்வியும் பெறும் ஆற்றலுடையவனுகின்றுன். சிவம் என்பது எங்கும் நிறைந்த எண்ண அலைகள் விளங்கும் ஆகாயக் கூற்றில் உள்ளது.

விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டா
விழுப்பொரு ளேஉன தொழுப்படி யோங்கள்
மண்ணகத் தேவந்து வாழச்செய் தானே
வண்திருப் பெருந்துறை யாய்வழி யடியோம்
கண்ணகத் தேநின்று களிதரு தேனே
கடலமு தேகரும் பேவிரும் படியார்
எண்ணகத் தாய்உல குக்குயி ரானாய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே.

முகத்துக்கு முன்னுள்ள ஆகாயத்தில் ஒளியும் சிரசில் நாதமும் உண்டாவதே சிவத்தின் அருளுக்கு அடையாள மாகும். சதாசிவம் சிவத்தின் தூல உடல் என்பது முன்னமே விளக்கப்பட்டுள்ளது. சதாசிவத்தின் ஈசான முகந்தான் ஒளியை விளக்கிக்காட்டும் முகம். இம்முகத்தின் ஆற்றல் சாதாரண மக்களுக்கு மறைவாக உள்ளது. யோகிக்குச் சிறப்புற அமைந்து தேகத்தைச் சூழவும் தேகத் தினுள்ளும் ஒளியாக உள்ளதை அறிய முடியும். இந்த ஒளி

உண்டாக ஆகாய நுண்ணணுக்களின் உரசலினுல் சத்தம் உண்டாகிறது.

இன்பால் மொழிக்கிள்ளாய் எங்கள் பெருந்துறைக்கோன்
முன்பால் முழங்கும் முரசியம்பாய்—அன்பால்
பிறவிப் பகைகலங்கப் பேரின்பத் தோங்கும்
பருமிக்க நாதப் பிறை.

—திருத்தசாங்கம், திருவாசகம்.

சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தனெனக் கருளியவா றூர்பெறுவார் அச்சோவே.

—திருவாசகம்.

சிவமாக்குதல் என்ருல், கண்டஞானத்தைக் கடந்து அகண்டஞானத்தைப் பெறுதல் எனப் பொருள். சதாசிவ புவனவாசிகள் எல்லாம் அகண்டஞானம் பெற்றவர்களே யாவர். அதனுல், அத்தகையோர் எல்லார் அறிவிலும் தொழில்படும் ஆற்றலைப் பெற்று விளங்குகின்றனர்.

சித்தத்தி னுள்ளே சிவலிங்கங் காட்டி :

மலமற்ற அந்தக்கரணத்தில் அகண்ட உருவான விந்து நாதத்திலமைந்த பரவெளியைக் காட்டி.

பரவெளியேதான் சிவலிங்கம் ஆகும்.

அணுவிற்கு அணுவாய் அப்பாலுக்கு அப்பாலாய் :

சூரிய ஒளி அணுவில் எலக்ட்ரோ மாக்னடிக் அலைகள் மகா சூக்ஷுமமாய்க் கலந்தும், அண்டவெல்லையைக் கடந்தும் விளங்குகின்றன. அணுவென்ற வார்த்தை ஆன்மாவுக்கு உண்டு. அவ்வொளி ஆன்மாவின் அண்டகோசத்தி னுள்ளும், அண்டகோசத்தைக் கடந்த பரவெளியிலும் நிறைந்து...

கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி :

இயற்கையில் கரும்பின்சாறு வெளியாகாதிருக்கக் கணுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. கரும்பு முதிரும்

வரையில் கணுக்களின் பாதுகாப்புடன் சாறு வெளிப் படாமல் உள்ளது. கரும்பு முதிர்ந்தபிறகு கணுக்களுக் கிடையே வெடித்துச் சாற்றை பிலிற்றுகிறது. அதுபோல, மனிதனுக்கும் சூக்ஷமதேகத்திற்கும் அடைப்புப்போன்ற பிராணமய கோசத்தின் இருள் நீக்கப்பட்டுத் தேகத்தி னுள்ளும் வெளியிலும் ஒரே ஒளியாகக் காணுமாறு செய்தும்...

மொக்கணி அருளிய முழுத்தழல் மேனி
சொக்கு அதாகக் காட்டிய தொன்மையும்.

—கீர்த்தித்திருவகவல், திருவாசகம்.

வேடமும் நீறும் விளங்க நிறுத்தி :

வெளியில் அணியும் சிவவேடமும் திருநீறும், சிவத்தை அறிந்துள்ள சான்ருேர்கள் என்று உலகினர் கண்டுகொள்ளவே அமைக்கப்பட்டுள்ளது. வேடத்தை யணிந்து உண்மையை அறியாவிடில் வேடத்தால் பயன் இல்லே. உண்மை ஞானியின் உடலே நடமாடும் சிவாலய மாகும்.

ஞானத் திருற்பத நண்ணுஞ் சிவஞானி
தானத் தில்வைத்த தனியா லயத்தனும்
மோனத் தருதலின் முத்தனுஞ் சித்தனும்
ஏனைத் தவசி இவனென லாகுமே.

—திருமந்திரம், 1674.

உண்மை ஞானி ஒளிவடிவானவன் என்பதுபற்றிப் பூதி சாதனம் கூறப்பட்டுள்ளது. ஆவின் சாணம் சுட்டெரித்த பிறகு, முத்துப் போன்ற வெண்ணெளியைப் பெறுகிறது. அதுபோல, ஞானி எப்போதும் அவ்வொளியை உண்மையிலேயே தன்னில் கண்டுகளித்துக் கொண்டுள்ளான். அவனிடம் இருந்த மலக்குற்றம் ஞானக்கினியால் சுட்டெரிக்கப்பட்டு விட்டது.

(68-72)

கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தின் அரும்பொருள் தன்னை
நெஞ்சக் கருத்தின் நிலையறிவித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை ஆண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே.

(இ - ள்.) ஆகாய மண்டலத்தில் அறிவுடன் உலாவும் பிரளயாகலர் விஞ்ஞானகலர்களின் கூட்டதில் ஒருவனாக என்னைச் சேர்த்து, பஞ்சாக்கரத்தில் நடுநாயகமான சிகாரத்தால் குறிப்பிடப்படும் அரிய பொருளை எனக்கு உணர்த்தி, அதன் பயனான நிலையை எனக்களித்து, என்னை ஆண்டு கொண்ட சகல சாமர்த்தியம் உடைய பெருமானே! மேலாகிய விநாயகக் கடவுளே! விந்துநாத மாகிய உனது திருவடிகளைச் சரணடைகின்றேன்.

கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி :

மண்ணுலகில் தேகத்தோடுகூடிய எத்தகைய பெரியவரும் உண்மை மெய்யடியார்கள் அல்லர் என்பதை அறியவும். உடலைவிட்டோ, உடலோடேயோ சாதகனது அறிவுக்கறிவாய் நின்றுணர்த்த வல்லவர்களே மெய்க் குருவாவர். அத்தகையோரின் திருக்கூட்டம், சம்பிரதாய முறைப்படி ஆதிமகாபுருஷன் முதலாகத் தொடர்புள்ள ஒரு கூட்டமே, வாழையடிவாழையாக வளர்ந்து பெருகியுள்ள மெய்யடியார் கூட்டமாகும். அப் பேறுபெற்ற அடியார் கூட்டத்துடன் என்னைக் கூட்டி...

அஞ்சக் கரத்தின் அரும்பொருள் தன்னை
நெஞ்சக் கருத்தின் நிலையறி வித்து :

பஞ்சாக்கரம் சைவமந்திரத்தில் சிறப்புடையது. அது சிவாயநமவாகும். அதன் அரும்பொருள் சிவம், சத்தி,

ஆன்மா, மலம், மாயை என்று கூறுவர். சீவன் சிவத்துடன் சேர்ந்தால் ஆன்மாவின் பாசங் கழன்றுவிடும். அப்போது சிவஞான யோகங் கிட்டும். மலம், மாயையாகவிருப்பது ஜீவனின் இருள்மண்டலமாகும். ஜீவன் "வேடமும் நீறும் விளங்க நிறுத்தி" என்ற நிலையில், ஒளிமண்டல புருஷனாய், விளங்கும் பஞ்சாக்கரத்தின் நெஞ்சாகிய சிகரத்தின் உண்மை நிலையை எனக் கறிவித்து...

சிவன்சத்தி சீவன் செறுமல மாயை
அவஞ்சேர்த்த பாச மலமைந் தகலச்
சிவன்சத்தி தன்னுடன் சீவனர் சேர
அவர்சேர்த்த பாசம் அணுககி லாவே.

—திருமந்திரம், 2710.

சிவனரு ளாய சிவன்திரு நாமஞ்
சிவனரு ளான்மாத் திரோத மலமாயை
சிவன்முத லாகச் சிறந்து நிரோதம்
பவம தகன்று பரசிவ னாமே. —திருமந்திரம், 2711.

ஓதிய நம்மலம் எல்லாம் ஒழித்திட்டவ்
வாதி தனைவிட் டிறையருட் சத்தியால்
தீதில் சிவஞான யோகமே சித்திக்கும்
ஓதுஞ் சிவாய மலமற்ற உண்மையே.

—திருமந்திரம், 2712.

நெஞ்சம் என்பது ஹ்ருதயத்திற்குப் பெயர். அதாவது நடுநாயகமாக உள்ளது என்பது பொருள். சி,வ என்ற எழுத்துக்கள் மூலாதாரச் சக்கரத்திலுள்ள எழுத்துக்களாகும். அவ்வெழுத்தாற்றலே சுழுமுனை நாடி, வழியாகச் சிரசை அடைந்து சகஸ்ரதளம் உருவாகிறது. மூலக்கனலாயிருந்த ஆற்றலே சகஸ்ர தளத்தில் விந்துநாதமாக விளங்குகிறது. அவ் விந்துநாதத்தில் ஜீவனின் அறிவும் உள்ளதுபற்றி, 'நெஞ்சக்கருத்தின் நிலை அறிவித்து' என்று கூறப்பட்டுள்ளது.

வன்னி யெழுத்தவை மாபலம் உள்ளன
வன்னி யெழுத்தவை வானுற ஓங்கின
வன்னி யெழுத்தவை மாபெருஞ் சக்கரம்
வன்னி யெழுத்திடு வாறது சொல்லுமே.

—திருமந்திரம், 1256.

ஏரொளி யுள்ளெழு தாமரை நாலிதழ்
ஏரொளி விந்து விஞலெழு நாதமாம்
ஏரொளி யக்கலே எங்கும் நிறைந்தபின்
ஏரொளிச் சக்கர மந்நடு வன்னியே.

—திருமந்திரம், 1255.

சொல்லிய விந்துவும் ஈராறு நாதமாஞ்
சொல்லிடு மப்பதி யவ்வெழுத் தாவன
சொல்லிய நூருெடு நாற்பத்து நாலுரு
சொல்லிடு சக்கர மாய்வரு ஞாலமே.

—திருமந்திரம், 1257.

விளக்கம் :

| | | |
|---|---|---|
| மூலாதாரம் | — | 4 |
| சுவாதிஷ்டானம் | — | 6 |
| மணிபூரகம் | — | 10 |
| அநாகதம் | — | 12 |
| விசுத்தி | — | 16 |
| ஆக | | 48 |

இவை கண்டத்துக்குட்பட்ட நிலே. இவைகளில் உள்ள மூன்று நாடியும் தொழிற்படுவதால் $48 \times 3 = 144$. தோளுக்கு மேல் சந்திரமண்டலம் விளங்கில், ஜீவனின் யகார எழுத்து விளங்கும் என்றபடி

மேல்வரும் விந்துவு மவ்வெழுத் தாய்விடும்
மேல்வரு நாதமும் ஓங்கும் எழுத்துடன்
மேல்வரு மப்பதி யவ்வெழுத் தேவரின்
மேல்வரு சக்கர மாய்வரு ஞாலமே.

—திருமந்திரம், *1258.*

ஞாலம தாக விரிந்தது சக்கரம்
ஞாலம தாயிடும் விந்துவும் நாதமும்
ஞாலம தாயிடு மப்பதி யோசனை
ஞாலம தாக விரிந்த தெழுத்தே.

—திருமந்திரம், *1259.*

விரிந்த எழுத்தது விந்துவும் நாதமும்
விரிந்த எழுத்தது சக்கர மாக
விரிந்த எழுத்தது மேல்வரும் பூமி
விரிந்த எழுத்தினில் அப்புறம் அப்பே.

—திருமந்திரம், *1260.*

அப்பது வாக விரிந்தது சக்கரம்
அப்பினில் அப்புறம் அவ்வன லாயிடும்
அப்பினில் அப்புறம் மாருத மாயெழ
அப்பினில் அப்புறம் ஆகா சமாமே.

—திருமந்திரம், *1261.*

ஆகாச அக்கர மாவது சொல்லிடில்
ஆகாச அக்கரத் துள்ளே எழுத்தவை
ஆகாச அவ்வெழுத் தாகிச் சிவானந்தம்
ஆகாச அக்கர மாவ தறிமினே.

—திருமந்திரம், *1262.*

ஊனி லுயிர்ப்பை ஒடுக்கி யொண்சுடர்
ஞான விளக்கினை யேற்றி நன்புலத்
தேனை வழிதிறந் தேத்து வார்க்கிடர்
ஆன கெடுப்பன அஞ்செழுத் துமே.

—சம்பந்தர்.

வைத்த பொருள் நமக் காமென்று சொல்லிமனத்
தடைத்துச்
சித்த மொடுக்கிச் சிவாயநம என்றிருக் கினல்லால்
மொய்த்த கதிர்மதி போல்வாரவர் பாதிரிப் புலியூர்
அத்தன் அருள்பெற லாமோ அறிவில்லாப் பேதை
நெஞ்சே.
—அப்பர்.

கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்றன் நாமம் பயின்றேன்
உனதருளால்
திருவாய் பொலியச் சிவாயநம வென்றுநீ றணிந்தேன்
தருவாய் சிவகதி திருப்பாதிரிப் புலியூர் அரனே.
—அப்பர்,

மனக்கருத்து சிரசிலும், சிரசின் மேலும் உள்ள சகஸ்ர தள ஆற்றலாக உள்ளதை இங்குக் குறிப்பித்துள்ளது.

தத்துவ நிலையைத் தந்து :

ஆன்மாவை அறிந்துகொள்ள, அதற்குக் கீழான 36 தத்துவங்களால் பிரித்துப் பிரித்து, தத்துவங்களின் இயல்பு விளக்கப்படுவது தத்துவ விசாரணையாகும். தத்துவ விசாரணையின் பயன், ஆன்மா தத்துவங்களின் வேறு என்ற அறிவைப் பெறலேயாகும். ஆன்மாவின் வியாபகத்தை அறிந்துகொண்ட பிறகு, 36 தத்துவங்களின் பயனையும் அடைந்ததாகிறது. ஆன்மாவின் பலதிறப்பட்ட சொருபமே தத்துவங்களின் நிலையாகும். இத்தகைய பெரு நிலையை எனக்கு உணர்த்தியும் (அருளியும்)...

எனை ஆண்ட வித்தக விநாயகனே :

முன்னர் 16வது வரியில் 'என்னை ஆட்கொள வேண்டி' என்று, அருட்குருவான விநாயகரை வாழ்த்தித் தொடங்கு

கின்ருர். 70வது வரி வரையில் விநாயகர் தன்னை ஆட்கொள்வதற்கு செய்த உபாயங்களையும், அதனுல் விளையும் அருட்செயலையும் விளக்கி, பேராற்றல் வாய்ந்தவர் என்று பொருள்பட, "வித்தக விநாயகனே" என்று விளிக்கிருர்.

வித்தகம்—அதிசயம், ஞானம், நன்மை, சாமர்த்தியம், பெருமை.

விரை கழல் சரணே :

தெய்வத்தை நாம் அறிந்துகொள்ள உதவுவது விந்து நாதம் கொண்ட தத்துவங்களே யாகும்.

விரை—விந்து.

கழல்—ஒலிக்கும் நாதம்.

விந்து நாதங்களான திருவடிகளால் சரணடைகின்றேன்.

நாத விந்து கலாதி நமோநம
வேத மந்த்ர சொரூபா நமோநம
ஞான பண்டித சாமி நமோநம.
வெகுகோடி.
.—திருப்புகழ்

சித்தாந்த சாராவளி, கிரியாபாதம் 19வது சுலோகத்தில்,

"யோகாங்கமாகிய சூக்ஷும சரீரம் இல்லாவிடின், அப்போது மனேபாவனையோடு கூடியவனுக்கு உண்டாகிய நாத மந்திரத்தினுலே தானே, மூலாதாரத்திலுண்டாகிய அந்த மந்திரத்தைச் செபஞ்செய்வது யுக்தமாகும்.

யோகபாதத்தில் அமையும் சுத்தாவஸ்தை நிலையில்,

"அந்தக்கரணங்களின் விருத்தி ஞானமானது சுவப்னுவஸ்தையாகும். சித்தமாத்திரத்தோடு கூடியபோது நித்திரா அவஸ்தையாகும். சரீரத்தில் புறக்கருவி உட்கருவி

களின் பிரவிருத்தி சூன்யமாய் வாக்குக்கெட்டாததாயு மிருக்கின்ற அறிவானது துரியாவஸ்தையாகும். அதாவது மந்திரத்தை உச்சரித்தல் சாக்கிரம்; மந்திரத்தின் காரிய மான விந்து பரிக்கிரகம் சுவப்னம்; நாத சம்யோகம் சுழுத்தியாகும்: சத்திசமாகமம் துரியமாகும்,

சரீரத்திலுள்ள புறக்கருவி உட்கருவிபிராணன் முதலான சகலகருவிகளும் அசைவற்று ஒழிந்திருக்குமளவில் சுவான்மா சைதன்யமாகும். இதுவே துரியாதீத அவஸ்தை யுமாகும். அப்பால் நிர்மல ஆன்மாவிற்கு சிவஸ்ரூப பிராப்தி யாகும் என்று கூறப்பட்டுள்ளது.

தியானம் செய்ய ஒரு குறியை பக்தன் உருவமாகக் கற்பித்துக்கொண்டு, பல கால சாதனையில் உருவெளித் தோற்றம் அமைந்து பக்தனின் காட்சிப்பொருளாக அவனது திடசங்கல்பமும் சாதனையுமே பயனளிக்கிறது. ஞானியி னிடம் எவ்வித உருவமும் கற்பனையில்லாதபடியால், அகண்ட பிர்மம் அவனது சிரசில் நிராதாரநிலையில் விந்து நாதமாக வெளிப்படுவதில் ஞானியின் சிந்தனை பதிந்து. தூல தேகத்தின் ஆற்றலை முழுதும் செயலினின்றும் தடை செய்து, நிராதாரத்தில் மனம் பதிவுற்று, துரியாவத்தையை அடைந்து, உயிருள்ளபோதே செத்த சவம்போல் செய லற்றுவிடுகிருன்.

போது சேரயன் பொருகடற் கிடந்தோன்
    புரந்த ராதிகள் நிற்கமற் றென்னைக்
கோது மாட்டிநின் குரைகழல் காட்டிக்
    குறிக்கொள் கென்றுநின் தொண்டரிற் கூட்டாய்
யாது செய்வதென் றிருந்தனன் மருந்தே
    அடிய னேன்இடர்ப் படுவதும் இனிதோ
சீத வார்புனல் நிலவிய வயல்சூழ்
    திருப்பெ ருந்துறை மேவிய சிவனே.

—செத்திலாப்பத்து, திருவாசகம்

இந்துவும் பானுவு மென்றெழு கின்றதோர்
விந்துவும் நாதமு மாகிமீ தானத்தே
சிந்தனை சாக்கிரா தீதத்தே சென்றிட்டு
நந்தியைப் பூசிக்க நற்பூசை யாமே.

—திருமந்திரம். 1853.

விந்துவும் நாதமும் விளைய விளைந்தது
வந்தஇப் பல்லுயிர் மன்னுயி ருக்கெலாம்
அந்தமும் ஆதியு மாமந் திரங்களும்
விந்து அடங்க விளையுஞ் சிவோகமே.

—திருமந்திரம், 1969.

வறுக்கின்ற வாறு மனத்துலா வெற்றி
நிறுக்கின்ற வாறுமந் நீள்வரை யொட்டிப்
பொறிக்கின்ற வாறுமப் பொல்லா வினையை
அறுக்கின்ற நாள்வரும் அந்திப் பழமே.

—திருமந்திரம், 1970.

அந்த வித்தக விநாயகன்

திருவருள் பெறுக!

## அனுபந்தம்

காணுபத்ய மதம், கணபதி வழிபாட்டை பரப்பிர்ம சொரூபம் என்று கொண்டபோது, ஒரு மூர்த்தியையே நிஷ்களமாகவும் (உருவமற்றதாகவும்), சகளமாகவும் (உருவ மாகவும்) வழிபட ஆன்மகோடிகளின் பக்குவம் நோக்கி, பல கணபதிக்குரிய மந்திரங்களையும் அமைத்துக் கொண்டது. அம்முறையில் சத்தியுடன் கூடிய கணபதி, சத்தியுடன் கூடாத கணபதி என்று பிரித்துக்கொண்டு, பல கணபதி மந்திரங்களை வல்லுனர் கண்டனர். சக்தியுடன் கூடிய கணபதியும் பலபேருடன் பலவாருகக் கூறப்பட்டுள்ளனர்.

ஊர்த்துவ கணபதி

மஹா கணபதி

வல்லப கணபதி

சத்தி கணபதி

உச்சிஷ்ட கணபதி

சித்திபுத்தி கணபதி

உத்தண்ட கணபதி

சங்கடஹர கணபதி

என்று பலவாருகக் கூறப்பட்டுள்ளன. அவைகளுக்கு வெவ்வேறு வகையான தியான ஸ்லோகங்களும், மூலமந்தி ரங்களும் உள்ளன. அவரவர் வழிபடுவது அவர் உள்ளு ணர்வைப் பொறுத்துள்ளது. எல்லாக் கணபதியும் ஓங்காரப்

பொருளான பிரணவத்தை அடைய ஒரு உபாயமேதான். சாக்தத்திலும் காணுபத்திய மதத்திலும் ஒத்துக்கொண்டு வழிபாட்டுக்கு உரியது மஹா கணபதி என்ற வல்லப கணபதியே யாகும். விநாயக புராணம் வல்லப கணபதி திருமணத்துடன் முடிகிறது. வடநாட்டில் "ஓம் கணபத்யே நம:" என்பதை, சத்தியுடன் கூடிய கணபதி என்றே வழி படுகின்றனர்.

ஓம் கம் ஸ்ரீம் ஹ்ரீம் (மூன்ருவது க ஆகும்)

"ஓம் கங் கணபதியே நம:" என்றும் வழிபடுகின்றனர்.

மகா கணபதி என்பதும் வல்லபை கணபதி என்பதும் இரண்டும் ஒன்றுதான். இது குண்டலியைக் கீழிலிருந்து சிரசுக்குக் கொண்டுவருவதால் காணுபத்திய மதத்தினரும் சாக்த வழிபாட்டினரும் இதைச் சிறப்பாகக் கொண் டுள்ளனர். இது இருபத்தேழு அட்சரக் கூட்டத்தினுல் ஆயது. அதில் அடங்கியுள்ள பீஜங்கள் மிக சக்திவாய்ந் தவைகள். அதனுல் அதைப்பற்றி இங்குக் கொஞ்சம் விளக்கம் செய்கிறேன். கணபதி மந்திரம் எத்தனையோ வகையுள்ளது. அவைகளைப் பற்றி இங்கு விவரிக்கவில்லை. விரும்புவோர் மந்திர சாத்திர வல்லுநர் பால் கேட்டுத் தெளிக.

வல்லபை மரீச முனிவரின் குமாரியாகும். மரீச முனிவர் விநாயகரை மருமகனுக வந்து தனது மகளைத் திருமணம் செய்து கொள்ளும்படி, சித்திபுத்தி விநாயகரை வழிபட்டு வரம் பெற்றனர். அங்ஙனம் விநாயகர் தாமே பரப்பிரம்மம் என்பதைத் தெளிவுபடுத்த வல்லபையை மணந்து, மகா விஷ்ணுவின் குமாரிகளையும் மணந்து, மகாவிஷ்ணுவுக்கு ஞானுபதேசம் செய்ததாகப் புராணம் கூறுகிறது. மணக் கோலம் கொண்ட அவசரம். இந்த அவதாரத்தில், கணபதி பத்துக் கைகள் உடையவராய், அமிழ்தமுடைய இரத்தினக்

கலத்தை துதிக்கையில் ஏந்தியவராய், வல்லபையை இடது தொடையில் தனது ஒடிந்த கொம்புள்ள கையினுல் அணைத்துக் கொண்டிருக்கும் திருவுருமாகும்.

மாதுளம்பழம், கதை, கரும்பு, வில், சக்கரம், தாமரை, பாசம், நீலோத்பலம், நெற்கதிர், தந்தம்— இவைகள் கைகளில் உள்ளவைகள். முக்கண்ணர், பிறை முடியர். தேவி கையில் தாமரை உள்ளது. நிறம் சிவப்பு. தேவியும் செந்நிறம்.

ஸ்ரீ வல்லப கணபதி மூல மந்திரம்.

ஓம், ச்ரீம், ஹ்ரீம், க்லீம், க்லௌம்,
கம், கணபதயே வரவரத, ஸர்வ
ஜனமே வசமான யஸ் ஸ்வாஹா.

ஓம் - என்பது மனிதன் உடலைச் சுற்றியுள்ள அண்ட கோச அ . உ . ம வாகிய சிருஷ்டி, திதி, லயம் அவை களையும், அவைகளைக் கடந்த விந்து நாதத்தையும் குறிக்கும்.

ச்ரீம் - இது ஸ்+ர்+ஈ+ம் என்ற எழுத்துக்களைக் கொண்டது, ஸ் - இது மூலாதாரத்தில் உள்ள பீஜம். ர் - இது சுவாதிஷ்டானத்தில் உள்ள பீஜம். ஈ - இது சோம, சூரிய, அக்னியாகிய சிரசில் உள்ள ஒளி நிலைகளைக் குறிக்கும். இதை மகாலக்ஷ்மியின் பீஜமென்று கூறுவர். அப்போது,

ச—மகாலக்ஷ்மி
ர—செல்வம்
ஈ—திருப்தி
நாதம்—ஈசுவரன்

என்று பொருள் கொள்ளுகின்றனர்,

ஹ்ரீம் -

ஹ—சிவம்

ர்—பிரகிருதி

ஈ—மகாமாயை

நாதம்—சத்தி

இதை மஹாமாய பீஜம் என்று கூறுவர். சகல புவனத் தலைவி புவனேஸ்வரியை இந்த ஏகாக்ஷரத்தால் வழிபடுகின்றனர் :

க்லௌம் - (வடமொழியில் உள்ள, மூன்றாவது 'க')

க—கணேசர்

ல—பிருதிவி

ஔ—தேஜஸ் (அ+உ)

பிந்து—துக்க நிவர்த்தி.

'க' எழுத்து தொண்டையில் இடம் பெறுவது.

'ல' எழுத்து பிருதிவியான சுவாதிஷ்டானத்தில் உள்ளது. இதன் இரு சேர்க்கை கணபதியின் துதிக்கையாகும். அதனால், கணபதியின் சிறப்பு பீஜம் ஆயிற்று.

கம்- இது தொண்டையில் தொழிற்படும் எழுத்து. முன் க்லௌம் என்றதில் பிருதிவியும் தொண்டையும் சேர்க்கப்பட்டது. அதன் நிலை நன்கு மாற்றமடைந்தால் தொண்டையிலே இருந்து மேல் போகும் எழுத்து—குண்டலினி மேல்நிலையில் விளங்குவதாகும்.

கணபதி - சிவப்பு நிறம் உடைய தும்பிக்கை உடைய கணநாதரையே குறிக்கும்.

க - போதல். அதாவது ஞானநெறியில் போதல்; ந - மோட்சம்; பதி - பரம்பொருள்.

வரவரத - விரும்பியவற்றை அளிக்க வல்லவன்.

ஸர்வ ஜனமே - விநாயகரை காணாபத்திய மதத்தில் பிரஜாபதி, பிர்மா, பிர்மனஸ்பதி, பிரஹஸ்பதி என்று ஐதரேயப் பிராம்மணத்தில் கூறப்பட்டுள்ளதுபற்றி, அவர் ஆட்சியிலுள்ள ஸர்வ ஜனங்களான தேக தத்துவங்களைக் குறிக்கும்.

வசமானயஸ் ஸ்வாஹா - தேக தத்துவங்கள் எல்லாம் என் வசமாகும்படி செய்யவும். அதனால் ஆத்மாவில் கணபதி திருவுரு நிலைபெற்று, ஆத்மாவிற்குப் புறம்பான அநாத்மா தத்துவங்களைக் கீழ்ப்படுத்தி, ஆத்மாவே சிறப்புற்று விளங்கவேண்டும் என்ற கருத்தே இம் மந்திரப் பொருளாகும்.

## திரு உருவம்

இத் திருவுருவில் வலதுகால் தொங்கவிட்டும், இடது கால் மடக்கி வல்லபைக்கு உட்கார இடங் கொடுத்தும் உள்ளது. மனிதனிடம் இருவகையான அறிவு உள்ளது. ஒன்று வெப்பம் தரும் சூரியன்; மற்றொன்று குளிர்ச்சியுள்ள சந்திரன். வெப்பம் தரும் அறிவு உலக மயமாகக் கவர்ச்சியுள்ளவைகளைத் தூண்டும் உலகியலறிவு. அதைக் கீழே விட்டு நில் என்பது வலக்காலின் பொருள். அனுபவ இன்ப ஞானம் வெப்பம் தராததுடன், தேகத்தில் குளிர்ச்சியையும் கொடுக்கும். அத்தகைய திருவடிகளை உயர்த்தி, அதில் குண்டலினி சக்தியை அமர்த்திக்கொள் என்ற பொருள். வல்லபையின் இரு திருவடிகளும் கீழ் நோக்கியும் கையில் தாமரை ஏந்தியுள்ளதையும் கவனிக்கவும். சத்தி பூமியில்

நன்கு நிலைபெற்றே மேலெழவேண்டும் என்ற குறிப்பு. அவள் கீழே உள்ள தாமரையாகிய சுவாதிஷ்டானத்தில் உள்ள சத்தியைத் தோளுக்கு உயர்த்தி விட்டதே அக்குறிப்பின் இரகசியமாகும். பஞ்சாக்கிரத்தில் சிகரம் விளங்குவது தோளுக்கு மேல்தான். அவளது மற்றொரு கரம் விநாயகரை அணைத்துள்ளது.

ஒடிந்துள்ள கொம்பைக் கொண்ட கையினாலேயே வல்லபையை அணைத்துக் கொண்டுள்ளார். "கோடாயுதத்தால் கொடுவினை களைந்தே" என்பது இதன் இரகசியமாகும். கீழே தூண்டும் காமத்தை பல்லசைவைக் கொண்டு சிரத்தில் அசைவைக் கொடுத்து, அதில் அறிவுப் பதிவு பதிந்தால், குண்டலினி அம்மையை அணைத்து வாழ முடியும்.

திருவம்பலச் சக்கரத்தில், திருமந்திரத்தில், தொண்டைக்கு மேலே நமசிவாய உதிக்கும் என்றும், தோளுக்கு மேல் சிவாயநம புறவட்டமாகும் என்றும் கூறியுள்ள பொருள் நுட்பத்தை அறிய இவ்வுண்மை விளங்கும்.

நாடும் பிரணவ நடுவிரு பக்கமும்
ஆடு மவர்வாய் அமர்ந்தங்கு நின்றது
நாடு நடுவுண் முகநம சிவாய
வாடுஞ் சிவாய நம புறவட்டத் தாய.

—திருமந்திரம், 922.

இது பஞ்சப்பிர்ம மந்திரத்தில் "வாமதேவ குஹ்யாய நம" என்றதின் பொருளும், அதை அடைய வழியும் காட்டப் பட்டுள்ளது. மனைவியுடன் விந்து அழியாமல் வாழும் வாழ்க்கை இரகசியம் உள்ளது.

விநாயகர் பரப்பிர்ம மாகையால் அவர் வயிற்றில் சகலபுவனங்களும் அடங்கி உள்ளன வென்பதைக்

காட்டவே பெருவயிறு படைத்துள்ளதாகக் காட்டப் பட்டுள்ளது.

சிறப்பு அவயம் துதிக்கை. இது பூமி தத்துவத்தி லிருந்து இரத்தின கலசத்தில் அமிர்தத்தை ஏந்தியுள்ளது. மிருதம் என்ருல் மரணத்தைக் குறிக்கும் சொல். அமிர்தம் என்ருல் மரணத்தை மாற்றுவது. சுழுமுனுநாடி வழியாக மிருத்யு வாழும் மூலாதாரப் பகுதியைக் கடந்து, அமிர்தத் தைப் பக்தனுக்கு அளிக்க மாணிக்கப் பாத்திரத்தை ஏந்தி யுள்ளார். குதம் - எமன் இருப்பிடம்; அங்குள்ள வாயு - மூல வாயு; அது உயரச் சென்ருல் அமிர்தமய தேகம் கிட்டும் என்ற பொருள்.

1. மாதுளம்பழம் - மாதுளேயில் பல முத்துக்கள் அடங்கியது. ஒரு மாதுளம் பழம் - அதுபோல் விநாயகர் பல புவனங் களின் ஞானத்தையும் தரித்துள்ளார்.

2. கதை - குண்டாந்தடி - எதிரியை அடித்து நொறுக்க உதவுவது - தத்துவ நாசம்.

3. கரும்பு - சுவையுள்ள பொருள். அது கீழ்ப்பகுதி சுவை யுடையது. மேற்பகுதி சுவையற்றது. சுவையுள்ள காமத்தை கீழிழுப்பு உள்ளபோதுதான் அது சுவைக்கும். காமாக்கினியை சுழுமுனுநாடி வழியாக மேலே ஏற்றி விட்டவர்க்கு அது சுவையற்ற பொருளாக ஆகிவிடும். இதுவே யோகியர் அநுபவ மாகும்.

கரும்புந் தேனுங் கலந்ததோர் காயத்தில்
அரும்புங் கந்தமு மாகிய ஆனந்தம்
விரும்பியே உள்ளம் வெளியுறக் கண்டபின்
கரும்பும் கைத்தது தேனும் புளித்ததே.

—திருமந்திரம், 2976.

4. வில் - பிரணவத்தைக் குறிக்கும். மூலாதாரமும் சகஸ்ரதளமும் வில்லின் இருகோடிகளாகும். இவைகளை : சுழும்ஞநாடி என்ற நாணல் இறுக்கி வளைத்து, லட்சியமாகிய அம்பை எறிந்தால், பிறவிப் பிணி அகலும்.

5. சக்கரம் - தரும விரோதத்தைச் சென்று சங்கரிப்பது.

6. தாமரை - இது சூரிய ஒளியில் மலருவது. இது லக்ஷ்மி, சரஸ்வதிகளுக்கு உறைவிடம். விநாயகர் வழிபாட்டில் செல்வமும் கல்வியும் கிட்டும் என்றபடி.

7. பாசம் - கட்டுக் கயிறு. இது தீயவைகளைச்செயல் படாமல் கட்டுவது.

8. நீலோத்பலம் - இது சந்திரனொளியில் மலர்வது: இது காதல் சின்னம்.

"காதலனுகி கழுநீர் மாலை ஏழுடைத்தாக எழில்பெற அணிந்தும்" —கீர்த்தித்திருவகவல், திருவாசகம்.

9. நெற்கதிர் - தானிய லக்ஷ்மியைக் குறிக்கும்.

10. ஒடிந்த கொம்பு - தேவியை அணைத்துள்ளது:

யானை முகம் - பிரணவம் என்ற அண்ட கோசம் காணும் தேகத்தைவிட மும் மடங்கு பெரிது. பிரணவமே அறிவுருவாகத் தேகத்தை ஆளுகிறது. யானையினிடம் அன்புள்ள பாகனை, தன் காலால் உயர்த்தித் தனது முடியில் ஏற்றிக் கொள்ளும். அதுபோல் கணபதி,

தன்னை வணங்குபவனை .தனது திருவடியை உதவி தன்னுடைய பதவியை அளிப்பார் என்றபடி.

செவி - முறம் போன்றுள்ளது. கணபதி உபாசனை சப்தப் பிர்மம் வெளிப்பட்டு அதில் சாதகனைத் திளைக்கச் செய்யும். சப்தப் பிர்ம ஞானமே பிருகிருதி மாயையைக் கடக்க உதவுவது. ''சத்தத்தினால் சதாசிவம் காட்டி.''

கொம்புகள் - வலது பக்கத்தின் கொம்பே ஒடிக்கப்பட்டு காம ஜெயத்திற்கும் - பாரதக் கதையை எழுதவும் முடிந்தது. இடப்பக்கம் கொம்பு இயல்பாகவே உள்ளது. இதுவே உத்திராயணம் என்று உணர்த்தும் அர்ச்சிருதி மார்க்கம் (ஒளிநெறி) நிலை பெறும்படி வைத்துள்ள இரகசியமாகும். பாரதக் கதையின் சாரம் அதர்மம் அழிக்கப் பட்டதே. அக்கதையை எழுதியது வலது கொம்பே ஆகும்.

நாகாபரணம் - உதரபந்தம், பாம்பு; அணி பாம்பு, பூணூல், பாம்பு.

பாம்பு குண்டலினி சக்தியாகச் சுருண்டுள்ள நிலையை மாற்றி, தேகமெங்கும் தரிக்கச் செய் துள்ளார் என்ற பொருள் - இதனால் குண்டலினி இடம் பெயர்ந்து சகஸ்ரதளத்தை அடைந்து, தேகத்தின் ஆற்றலைக் கெடாமல், வல்லபையாக அணைத்துக் கொண்டுள்ள இரகசியமாகும்.

இவ்வாறு பல சங்கேதப் பொருள்களை உள்ளடக்கிக் கொண்ட ஞானத் திருவுருவான வல்லப கணபதியை வணங்கி, யாவரும் இகபர சுகத்தை அடையுமாறு பிரார்த்திக்கிறேன்.

இவ் விநாயகரவல் வெறும் தோத்திர நூல் மாத்திரமல்ல, தமிழுலகத்திற்கு ஔவைப் பிராட்டி அளித்த ஒரு பழைய யோகநூல்.

இதில் விளக்கப்பட்டவை ஏதோ எனது சிற்றறிவிலும் அநுபவத்திலும் எழுந்த ஒரு உள்ளக் கிளர்ச்சியே. இதை அதுவே எழுதத் தூண்டி, ஒருவாறு எழுதி முடித்துள்ளேன்.

முற்றும்

உ

சிவமயம்

கணபதி துணை

ஔவையார்

அருளிய

# விநாயகர் அகவல்

[ மூலம் ]

நிலைமண்டில ஆசிரியப்பா

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலஇசை பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகில் ஆடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ(கு) எறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும் 5

வேழ முகமும் விளங்குசிந் தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்
நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனியும்
நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும் 10

இரண்டு செவியும் இலங்குபொன் முடியும்
திரண்டமுப் புரிநூல் திகழ்ஒளி மார்பும்
சொற்பதம் கடந்த துரிய மெய்ஞ்ஞான
அற்புதன் ஈன்ற கற்பகக் களிறே!
முப்பழம் நுகரும் மூஷிக வாகன! 15

இப்பொழு(து) என்னை ஆட்கொள வேண்டித்
தாயாய் எனக்குத் தானெழுந்(து) அருளி
மாயாப் பிறவி மயக்கம் அறுத்துத்
திருந்திய முதல்ஐந் தெழுத்தும் தெளிவாய்ப்
பொருந்தவே வந்தென் உளந்தனில் புகுந்து 20

குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திரம்இது பொருள்என
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளிக்
கோடா யுதத்தால் கொடுவினை களைந்தே
உவட்டா உபதேசம் புகட்டிஎன் செவியில் 25

தெவிட்டாத ஞானத் தெளிவையுங் காட்டி
ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணையின் இனிதெனக் கருளிக்
கருவிகள் ஒடுங்கும் கருத்தினை அறிவித்(து)
இருவினை தன்னை அறுத்திருள் கடிந்து 30

தலமொரு நான்கும் தந்தெனக் கருளி
மலமொரு மூன்றின் மயக்கம் அறுத்தே
ஒன்பது வாயில் ஒருமந் திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதுங் காட்டி
ஆறு தாரத்(து) அங்கிசை நிலையும் 35

பேரு நிறுத்திப் பேச்சுரை அறுத்தே
இடைபிங் கலையின் எழுத்தறி வித்துக்
கடையில் சுழுமுனைக் கபாலமும் காட்டி
மூன்று மண்டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்திக் 40

குண்டலி அதனில் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து
மூலா தாரத்து மூண்டெழு கனலைக்
காலால் எழுப்பும் கருத்தறி வித்தே
அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும் 45

குமுத சகாயன் குணத்தையும் கூறி
இடைச்சக் கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற்சக் கரத்தின் உறுப்பையும் காட்டிச்
சண்முக தூலமும் சதுர்முக சூக்கமும்
என்முக மாக இனிதெனக்(கு) அருளிப் 50

புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரிஎட்டு நிலையும் தெரிசனப் படுத்திக்
கருத்தினில் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி இனிதெனக்(கு) அருளி
என்னை அறிவித்து எனக்கருள் செய்து 55

முன்னை வினையின் முதலைக் களைந்தே
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்(து)
இருள்வெளி இரண்டிற்கு ஒன்றிடம் என்ன
அருள்தரும் ஆனந்தத்(து) அழுத்திஎன் செவியில் 60

எல்லை இல்லா ஆனந்தம் அளித்(து)
அல்லல் களைந்தே அருள்வழி காட்டிச்
சத்தத்தின் உள்ளே சதாசிவம் காட்டிச்
சித்தத்தின் உள்ளே சிவலிங்கம் காட்டி
அணுவிற்கு அணுவாய் அப்பாலுக்(கு) அப்பாலாய்க் 65

கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்
கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தின் அரும்பொருள் தன்னை
நெஞ்சக் கருத்தின் நிலையறி வித்துத் 70

தத்துவ நிலையைத் தந்தெனை ஆண்ட
வித்தக! விநாயக! விரைகழல் சரணே!

---